# ஜாம்பவதிப்ரியவிட்டலதாசர்
# (ஹரதி பிரகலாதாச்சார்)



## எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு

***

## தமிழில் மொழிபெயர்த்தவர்

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

**8904458276 sathyatv123@gmail.com**

**jagannathakesava.blogspot.com**

**கட்டுரை ஆசிரியர் மற்றும் மொழிபெயர்ப்பாளரின் ஹரிதாச குரு பரம்பரை**

ஸ்ரீமன் மத்வாசார்யர்

ஸ்ரீவியாஸராஜர்

ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீவேணுகோபாலவிட்டலதாசர்

ஸ்ரீவியாஸவிட்டலர்

ஸ்ரீரகுபதிவிட்டலதாசர்

ஸ்ரீபூவராகரகுபதிவிட்டலதாசர்

ஸ்ரீஸ்ரீபதிவிட்டலதாசர்

ஸ்ரீதந்தெஸ்ரீபதிவிட்டலதாசர்

ஸ்ரீநிதிவிட்டலதாசர்

ஸ்ரீவரவிட்டலதாசர்

ஸ்ரீமுத்துமோகனவிட்டலதாசர்

ஸ்ரீதந்தெமுத்துமோகனவிட்டலதாசர் (பரமப்ரிய சுப்பராய தாசர், தேவராயனதுர்கா)

ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர் (M.R. கோவிந்த ராவ், மைசூரு)

**ஸ்ரீஜாம்பவதிப்ரியவிட்டலதாசர்**
**(ஹரதி G. பிரகலாத், பெங்களூரு #99014 20074)**

**ஜகன்னாதகேசவ**
**(சத்ய நாராயணன் # 89044 58276)**

***

பொருளடக்கம்

## தாஸ சதுஷ்டயரு

குருகோவிந்தவிட்டல தாசரின் ஆராதனையை முன்னிட்டு, 6th Jan 2008ல் வெளியான புத்தகம்.



ஹரிதாச சாகித்யத்தை Dr.R.S.பஞ்சமுகி, பல பாகங்களாக பிரித்துக் காட்டியிருக்கிறார். Dr.வரதராஜ ராவ் அவர்களுடன் ஆராய்ச்சி செய்து அவர்கள் சொல்லியிருக்கிற விஷயங்கள் நாம் கவனிக்கத்தக்கவை. அர்ப்பணிப்பு மற்றும் விடாமுயற்சியுடன் இவர்கள் செய்திருக்கிற ஆராய்ச்சிகள் போற்றத்தக்கவை.

இதுவரை வந்துள்ள கருத்துகள்:

1. **Dr.R.S.பஞ்சமுகி**:

முதல் கட்டம்: நரஹரி தீர்த்தர்
இரண்டாம் கட்டம்: 13 முதல் 16ம் நூற்றாண்டு வரை - யதித்ரயர்கள் மற்றும் புரந்தரதாசர், கனகதாசர்.
மூன்றாம் கட்டம்: விஜயதாசர், மோகனதாசர், கோபாலதாசர், ஜகன்னாததாசர்
நான்காம் கட்டம்: பிராணேஷதாசர், குருபிராணேஷதாசர் ஆகியோர்

2. **Dr.H.K.வேதவியாசாச்சார்**, ஹரிதாச சாகித்யத்தை 4 நிலைகளாகப் பிரித்திருக்கிறார். துவக்கம், வளர்ச்சி, விரிவு மற்றும் சரிவு நிலைகள். ஆனால், வளர்ச்சி, சரிவு ஆகிய சொற்களைப் பயன்படுத்துவது சரியில்லை என்பது பொதுவான கருத்து.

3. **Dr.H.திப்பே ருத்ரஸ்வாமி:** காலகட்டங்களை நான்கு நிலைகளாக பிரிக்கலாமே தவிர, ஹரிதாச சாகித்யத்தால் விளைந்த சமூக மாற்றங்களைக் கணக்கில் கொண்டால், இங்கிருப்பது ஒரே ஒரு நிலைதான் என்கிறார்.

4. **Dr.K.G.சாஸ்திரி** அவர்கள் ஹரிதாச சாகித்யத்தில் இருப்பது இரண்டே நிலைதான் என்கிறார். நரஹரி தீர்த்தர் முதல் புரந்தரதாசர் வரை முதல் நிலையும்; விஜயதாசரிடமிருந்து இரண்டாவது நிலையும் துவங்குகிறது என்பது இவர் கருத்து.

5. **Dr.K.கோபால்நாத்** அவர்களின்படி இதிலிருப்பது மூன்று காலகட்டங்கள். 1. ஸ்ரீபாதராயர் 2. விஜயதாசர் 3.தந்தேமுத்துமோகனவிட்டலதாசர் காலகட்டம்.

அந்தந்த காலகட்டங்களில் இருந்த ஹரிதாசர்களை வைத்தே இப்படி நிலைகளைப் பிரித்திருக்கிறார்கள் என்று சொல்லலாம். அந்த காலகட்டங்களுக்கு அவர்களே பிரதிநிதிகளாக இருக்கிறார்கள் எனச் சொல்வது சரியாகுமா? சிந்திப்போம்.

R.S.பஞ்சமுகி மற்றும் Dr.G.வரதராஜ ராவ் அவர்கள், ஸ்ரீ நரஹரி தீர்த்தரை தங்கள் ஆராய்ச்சியில் சேர்க்கவில்லை. ஏனென்றால்:

* தாச சாகித்யம் அவருக்குப் பிறகு தொடரவில்லை
* அவரது சாகித்யம், 20ம் நூற்றாண்டின் சாகித்யத்தை ஒத்திருக்கிறது என்பது சிலரது வாதம்.

ஸ்ரீபாதராயர், ஸ்ரீவியாசராயர் மற்றும் ஸ்ரீவாதிராஜர் - யதித்ரயர்கள் என அழைக்கப்பட்டால், ஸ்ரீபுரந்தரதாசர் மற்றும் கனகதாசரை - தாச-த்வயர்கள் எனச் சொல்லலாம். ஹரிதாச சாகித்யம் என்னும் கங்கை இந்த காலகட்டத்திலிருந்து துவங்கியதால், இவர்கள் ஐவரையும் முதல் நிலை என்று கருதலாம்.

17ம் நூற்றாண்டைச் சேர்ந்த விஜயதாசர், கோபாலதாசர், ஜகன்னாததாசர் ஆகியோர் இரண்டாம் நிலையிலும்; பிராணேஷதாசர் ஆகியோர் மூன்றாம் நிலையிலும் வருகிறார்கள். ஜகன்னாததாசர் - இந்த குரு பரம்பரையில் வருகிறாரா என்பது யோசித்துப் பார்க்கவேண்டிய விஷயம். விஜயதாசரின் சொல்லிற்கேற்ப கோபாலதாசர், இவருக்கு ஆயுள் தானம் கொடுக்கிறார். அங்கிதம் கேட்டபோது, இவரை பண்டரிபுரம் போகச் சொல்கிறார் கோபாலதாசர். அங்கு ஜலாந்தர்யாமி சங்கர்ஷண ரூபி பரமாத்மாவிடமிருந்து அவர் அங்கிதம் பெற்றதாகக் கருதலாம். ஆகவே, ஜகன்னாததாசர், விஜயதாசரிடமிருந்தோ, கோபாலதாசரிடமிருந்தோ அங்கிதம் பெறவில்லை - ஸ்ரீஹரியிடமிருந்தே பெற்றார். ஆகவே, இவர் குருபரம்பரையில் வருவதில்லை. ஆனால், இரண்டாம் நிலையில் ஒருவராகக் கருதப்படுகிறார்.

புரந்தரதாசருக்குப் பிறகு, ஏறக்குறைய 150 ஆண்டுகள் சோர்வடைந்திருந்த ஹரிதாஸ சாகித்யம், வட கர்நாடகத்தின் பாகல்கோட் பிரசன்னவேங்கட தாசர்,

காகிண்டிகி மஹிபதி தாசர் ஆகியோர் வருகையால் மறுபடி வளரத் துவங்கியது. இந்த இருவரும்கூட எந்த குருபரம்பரையிலும் வரவில்லை. எவரின் காலகட்டக் கணக்கிலும் இவர்கள் இல்லை. ஆனால், இவர்களைப் போலவே உள்ள ஜகன்னாததாசர், இரண்டாம் கட்டத்தில் சேர்க்கப்படுகிறார். ஏன்?

மேற்சொன்ன விவாதங்களுக்குப் பிறகு, ஸ்ரீபாதராயர், வியாசராயர், வாதிராஜர், புரந்தரதாசர் மற்றும் கனகதாசர் ஆகியோர் முதல் கட்டத்தில் வருகின்றனர் என்பது ஒப்புக்கொள்ளக் கூடியதே.

குப்தகாமி ஹரிதாசர்கள்: மஹிபதிதாசர், பிரசன்னவேங்கடதாசர் (இவர்கள் இருவரும் தாச-த்வயர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்).

விஜயதாசர், கோபாலதாசர், வேணுகோபாலவிட்டலதாசர் மற்றும் மோகனதாசர் - இரண்டாம் கட்டத்தில் வருகின்றனர்.

ஜகன்னாததாசர், பிராணேஷதாசர் மற்றும் அவரது சிஷ்யர்கள், வியாச விட்டலர் மற்றும் அவரது சிஷ்யர்கள் - மூன்றாம் கட்டத்தில் வருகின்றனர்.

பரமப்ரிய சுப்பராயதாசர் மற்றும் அவரது சிஷ்யர்கள் நான்காம் கட்டத்தில் வருகின்றனர்.

குருகோவிந்தவிட்டலதாசர் மற்றும் அவரின் சிஷ்ய பரம்பரையினர், 21ம் நூற்றாண்டில் வருபவர்கள் ஐந்தாம் கட்டத்தில் வருகின்றனர்.

தாச-சதுஷ்டயர் என்றால் என்ன? இந்த சொல்லாடலை சரியாகப் புரிந்துகொண்டோமா? புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசர் மற்றும் ஜகன்னாததாசர் - இவர்கள் நால்வரை தாச-சதுஷ்டயர் என்று அழைக்கலாமா? இவர்கள் ஒரே காலத்தைச் சேர்ந்தவர் அல்லர்; ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டவரும் அல்லர். 15ம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒருவர், 18ம் நூற்றாண்டில் பிறந்தவரை எப்படி பார்க்க முடியும்? ஆகவே, விஜயதாசர், கோபாலதாசர், வேணுகோபாலவிட்டலதாசர் மற்றும் ஜகன்னாததாசரை தாச-சதுஷ்டயர் என்று அழைப்பதே சரியானதாக இருக்கும். ஆனால் இப்போது மற்றொரு கேள்வி எழுகிறது.

மோகனதாசரும் தாச சாகித்யத்திற்கு நிறைய பங்களித்திருக்கிறார். ஆகவே, அவரை இந்த பட்டியலில் சேர்க்கலாமே? ஆனால், அவர் விஜயதாசரின் வளர்ப்பு மகன். ஆகவே, அவரின் இடத்தில், வேணுகோபாலவிட்டலதாசரை சேர்த்துவிட்டால், நமக்கிருந்த சந்தேகம் தீர்ந்தது. கற்றறிந்த சான்றோர் இதை சரிபார்க்கலாம். ஆகவே, விஜயதாசர், கோபாலதாசர், வேணுகோபாலவிட்டலதாசர் மற்றும் ஜகன்னாததாசர் ஆகிய நால்வரை 'தாச-சதுஷ்டயர்கள்' என்று அழைப்பதில் எந்தவித பிரச்னையும் இல்லை.

இதில் ஜகன்னாததாசரை எப்படி சேர்க்கலாம் என்று யாரேனும் கேட்டால், விடை மிகவும் எளிது. அவர் விஜயதாசர் மற்றும் கோபாலதாசரைப் பார்த்திருக்கிறார். குரு பரம்பரையில் வரவில்லை என்றாலும், தாச சாகித்யத்திற்கு பலமான பங்களித்திருக்கிறார். ஆகவே, அவரை இதில் சேர்த்தோம். யாருக்கேனும் மாற்றுக் கருத்திருந்தால் சொல்லவும்.

ஆனால், மேற்சொன்னதைப் போல, Dr.G.வரதராஜ ராவ் அவர்களின் ஆராய்ச்சியின்படி, புரந்தரதாசரைத் தவிர, மற்றவர்கள் இந்தப் பட்டியலில் வந்துவிடுகின்றனர். ஆகவே, புரந்தரதாசருக்குப் பதிலாக வேணுகோபால விட்டலதாசரின் பெயரைச் சேர்த்தால், தாச-சதுஷ்டயர் என்பதற்கு சரியான பொருள் வந்துவிடும் அல்லவா?

யதி-த்வயரு மற்றும் தாச-த்வயரு - இவர்களை முதல் கட்டத்தில் சேர்த்தால், ஹரிதாசர்கள் வாழும் காலத்திலிருந்து அவர்களை கண்டுபிடித்து ஒரு கட்டத்தில் (நிலையில்) சேர்க்கிறோம் என்று ஆகிவிடும். இதுவே, ஆராய்ச்சிகளின் முடிவின்படி கட்டங்களை (நிலைகளை) சொன்னால், அதில் மேலும் விவாதிக்க அவகாசம் இருப்பதில்லை.

தொழில்நுட்பம் மிகுந்த இந்தக் காலத்தில்கூட மத்வர், ஜயதீர்த்தர் மற்றும் வியாசராயர் மூவரும் 'வாங்மய-த்ரயர்' என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டதில்லை. இவர்களுக்குள் 200 ஆண்டுகள் இடைவெளி இருக்கின்றது. ஆனால் எப்படி அப்படி அழைக்கப்படுகின்றனர்? ஆகவே, சரியான கருத்துக்களை எதிர்கால சந்ததிகளுக்குச் சொல்ல வேண்டியது நம் கடமையல்லவா?

***

**விஜயதாசர்**



கூஸினமக தாசா என்று அழைக்கப்பட்ட தாசர், மனோநியாமகனான ருத்ரதேவரைப் தரிசிக்க வியாசகாசிக்கு மூன்று முறை சென்றார். மிகுந்த வைராக்கியத்துடன் இருந்த அவருக்கு, அங்கு 'விஜயவிட்டலா' என்ற அங்கிதம் - கனவில் வந்த புரந்தரதாசர் மூலமாக கிடைத்தது. ஹரிதாச பரம்பரையின் இரண்டாவது கட்டத்தின் முதல் ஹரிதாசராக ஆனார் விஜயதாசர்.

ராய்ச்சூர் மாவட்டம், மான்வி தாலுக்கா, சிக்கல்பர்வியில் 1682ல் பிறந்தார் தாசர். விஜயவிட்டலா என்ற அங்கிதத்தில் பற்பல சூளாதிகளை இயற்றியுள்ளார். ஸ்ரீஹரியின் மகிமைகளை விளக்கும் விதமாக அவை உள்ளன. புரிந்து கொள்ள மிகவும் கடினமான தத்வவாதங்களை மிகவும் எளிமையான நடையில் விளக்கியுள்ளார். அவரது சூளாதிகள் - உபாசனை, பிம்பாபரோக்ஷா, முக்தி நிலை, ஆத்ம சமர்ப்பணம், கங்கணாகாரா - ஆகிய தலைப்புகளில் உள்ளன.

புரந்தரதாசரிடம் அங்கிதம் பெற்றவுடனேயே அவர் இயற்றிய பாடல் பின்வருமாறு.

அந்தரங்கத கதவு தெரெயுது இந்து
எந்தா புண்யத பல ப்ராப்தியாயித்தோ எனகே (அந்தரங்கத)

ஏசுதினவாயித்தோ பீக முத்ரே மாடி
வாசவாகித்தரு துரளல்லி
மோசவாகித்து இந்தின தனகா தமசின
ராசியொளகே ஹோலி காணி சுத்தித்தில்லா (அந்தரங்கத)

நம் உடம்பில் உள்ளும் வெளியிலும் தலா ஒன்பது கதவுகள் உள்ளன. வெளிப்புற ஒன்பது கதவுகளால் (ஒன்பது இந்திரியங்கள்) நமக்கு சுக துக்கங்கள் கிடைக்கின்றன. நம் ஆன்மாவில், இதயத்தில் சற்று உன்னிப்புடன் நோக்கினால், அங்கு இருக்கும் ஸ்ரீஹரியைக் (பிம்ப ரூப) காணலாம். முன்னர் புண்ணியம் செய்திருந்தால் மட்டுமே இந்தக் காட்சி காணக் கிடைக்கும்.

நாம் நம்மை சுயபரிசோதனை செய்துகொண்டால் மட்டுமே, புண்ணியம் செய்ய முடியும் என்று தாசர் சொல்கிறார். அப்பொழுது மட்டுமே இறைவனைக் காண முடியும். நம் அனைவருக்குள்ளும் அவன் இருக்கிறான். ஆனால் அவனை எப்படி காண்பது? இறைவனைக் காணும் முன்பு, நம் இதயத்தின் கதவுகள் மூடியிருப்பது மட்டுமல்லாமல் - நம்மிடம் இருக்கும் அரிஷட்வர்க (காமம், குரோதம், மோகம், லோபம், மதம் மற்றும் மாத்சர்யம் ஆகியன) மற்றும் ஒன்பது விதமான த்வேஷங்கள் - ஆகியவற்றால் அந்தக் கதவுகள் நன்றாக பூட்டு போடப்பட்டும் இருக்கின்றன. இப்படிப்பட்ட அறியாமையினால் அந்த ஸ்ரீஹரி இந்தக் கதவுகளின் உள்ளே அடைபட்டுக் கிடக்கிறான். அந்தக் கதவுகளைத் திறக்க நம்மிடம் சக்தி இருக்கிறதா?

குருகருண எம்பந்தா கீலிகை தொரகிது
ஹரிகருண எம்பந்தா சக்தியிந்தா

பரம பாகவதர சகவாசதல்லி போகி
ஹரி ஸ்மரணெயிந்தலி பீகவ தெரெதா (அந்தரங்கத)

குருவின குலாம ஆகுவ தனக தொரெயதண்ண முகுதி - என்று சொல்லியிருக்கிறார்கள். சாதிக்க நினைப்பவருக்கு குரு அவசியம். திருமணமான பெண்ணிற்கு அவளது கணவனே குரு; அவரின் உள் இருக்கும் இறைவனையே அவள் வணங்க வேண்டும். கடவுளின் கருணையாலேயே - அவர் நினைத்தால் மட்டுமே தகுந்த குரு கிடைப்பது சாத்தியம். அந்த கருணை இல்லாமல், ராயரின் பிருந்தாவனத்திற்கு தங்கக் கவசம் செய்து அணிவித்தாலும், அவரின் அனுக்கிரகம் கிடைப்பது கடினமே. உபதேசம் செய்யத்தக்க குரு கிடைப்பது கடினம்தான். ஆனால், அப்படி ஒருவர் கிடைத்தபிறகு, அவரிடமிருந்து காயத்ரி மந்திரம், ராமகிருஷ்ண மந்திரம், அங்கித நாம ஜபம் ஆகியவற்றை பெற வேண்டும். இவைகளே நம்முள் இருக்கும் கதவுகளைத் திறக்க உதவும் சாவிகள் ஆகும். இத்தகைய சாவிகளை பெறுவதே சாதிக்க நினைப்பவர்களுக்கு முக்கியமான நோக்கமாக இருக்க வேண்டும்.

பத்தி கக்கடவெம்ப ஞான தீப
ஐத்தாகி ஹெடெகொண்டு த்வாரவன போகலு
எத்த நோடிதரத்த சிருங்கார சாதனா
சுத்தலித்தவர பாலாயனவாதரு (அந்தரங்கத)

நம்முள் இருக்கும் இறைவனைக் காண்பதற்கான ஒரே வழி - நாம ஜபம் செய்வதே ஆகும். இந்த நாம ஜபம் அதிகரிக்க அதிகரிக்க - அரிஷட்வர்க மற்றும் ஒன்பது வித த்வேஷங்கள் ஆகிய கெட்ட விஷயங்கள் களையும். நாம ஜபம் செய்யும்போது, இதயத்தில் இருக்கும் இருட்டு நீங்கி, அறிவின் ஒளி பெருகும். இந்த ஒளியால்தான் உள்ளிருக்கும் இறைவனை காண முடியும். ஆகவே, இந்த ஒளியைப் பெறுவதே நம் நோக்கமாக இருக்கவேண்டும் என்று தாசர் சொல்கிறார்.

ஹொரகெ த்வாரவு நால்கு ஒளகேஐது த்வாரகளு
புரத த்வாராதிகெ ப்ராணாதி ஐயரு
மிருகவ மத்ய மண்டப கோடி ரவியந்தே
சரசிஜ நாபன அரமணெய சொபகு (அந்தரங்கத)

நம்முள் இருக்கும் ஸ்ரீஹரியைச் சுற்றி பல கதவுகள் (அரண்கள்) உள்ளன. முதல் நான்கு கதவுகளைக் கடந்தவுடன், அடுத்த ஐந்து கதவுகளைக் காணலாம். அவற்றையும் கடந்தால் ஒரு தாமரை. இந்த தாமரையிலேயே ஸ்ரீஹரி வசிப்பதாக ஞானிகள் கூறுகின்றனர். இந்த ஒன்பது கதவுகளிலும் பாரதி ரமணனான பிராணதேவன், ஒன்பது வித ரூபங்களில் வசிக்கிறார். அந்த முக்யபிராணனின் உள்ளிருக்கும் ஸ்ரீஹரியை, ஒவ்வொரு கதவைக் கடக்கும்போதும் வணங்குவது மிகவும் முக்கியமானதாகும். இதயத்தின் உள்ளே ஒரு அரண்மனை - அதற்குள் ஒரு தங்க மண்டபம் - அதற்குள்ளேயே இறைவன் இருக்கிறான். அந்த

இறைவனைக் காண்பதே நம் வாழ்க்கையின் லட்சியமாக இருக்க வேண்டும் என்கிறார் தாசர்.

ஸ்வமூர்த்தி கண மத்ய சச்சிதானந்தைக
ரமெய தரதிந்த லா லிங்கைத்திதே
கமலஜாதிகளிந்த துதுசிகொளுத ஹ்ரு
கமலதொளகிர்த விஜயவிட்டலன கண்டே (அந்தரங்கத)

ஒரு கோடி சூரியனின் வெளிச்சத்தைப் போல உள்ளவனான ஸ்ரீஹரி, எப்படி தோற்றமளிக்கிறான் என்று யாரும் கேட்டால், சுயம்புவாக இருக்கிறான் என்று சொல்லவும். அவன் தனியாகவா இருக்கிறான்? இல்லை. ரமாதேவி (இலக்குமி) அவனுடன் இருக்கிறாள். ஸ்ரீஹரி எப்போதும் தனியாக இருக்கிறான் என்று நினைக்கவே கூடாது. வணங்கும்போதும் ரமாவுடன் கூடிய பஸ்சிம ரங்கன் என்றே வணங்க வேண்டும். ரமாதேவி, பிரம்மா, முக்யபிராணன், கருடன், சேஷன், ருத்ரன், இந்திரன், காமன் மற்றும் அனைத்து தத்வாபிமான தேவைதைகளும் அந்த ஸ்ரீஹரியுடனேயே இருக்கின்றனர். அந்த சர்வோத்தமன், இந்த எல்லா தேவதைகளுக்குள்ளும் வெவ்வேறு ரூபத்தில், அதே பிரகாசத்துடன் இருக்கிறார். எல்லா தேவர்களும் அவரை எப்போதும் துதித்தவாறே இருக்கின்றனர்.

தத்வாபிமானி தேவதைகள், முக்யபிராணர், ரமாதேவி ஆகியவர்களுக்குள் இருக்கும் அந்த பிம்பரூபி பரமாத்மனை நான் கண்டேன் என்கிறார் விஜயதாசர். அந்த தரிசன அனுபவத்தையும் ஒரு பாடலில் பாடியிருக்கிறார். நாமும் அதைப்போலவே (அவர் பாடியிருப்பதைப் போலவே) செய்தால், நாமும் நம்முள் இருக்கும் பிம்பரூபி பரமாத்மாவைக் காணலாம் என்பதே அவர் நமக்குக் கொடுக்கும் செய்தியாகும்.

விஜயதாசர் பற்பல பாடல்கள், சூளாதிகள் மற்றும் கேசவநாமாவைப் பாடியிருக்கிறார். பலருக்கும் அங்கிதத்தையும் கொடுத்திருக்கிறார். அவர்களில், கோபாலதாசர், ஹயவதன விட்டலதாசர், வேணுகோபால விட்டலதாசர், மோகனதாசர் முக்கியமானவர்கள் ஆகும். இதனால், தாச பரம்பரையை வளர்ப்பதிலும் விஜயதாசர் முக்கிய பங்கு வகிக்கிறார்.

**கோபாலதாசர்**:



இவர் விஜயதாசரின் சலபிரதிமை (நடமாடும் பிரதி) எனக் கருதப்படுகிறார். மேலும், இவரை நினைத்தவுடன் தன்வந்திரி அவதாரமும் நினைவுக்கு வரும்.

என்ன பின்னப கேளோ தன்வந்திரி தய மாடோ
சன்னவனு இவ கேவல
பண்ணபடிசுவ ரோகவன்னு மோசனே மாடி
சென்னாகி பாலிசுவுதே கருணி (என்ன)

ஜகன்னாத தாசருக்கு 40 ஆண்டுகள் ஆயுள் தானம் அளிக்குமாறு கோபாலதாசரிடம் விஜயதாசர் சொன்னவுடன், கோபாலதாசர் உடனடியாக அப்படியே செய்து, அந்தச் செயலை விஜயதாசருக்கு தமது குரு தட்சிணையாக அர்ப்பணம் செய்தார். இதனால் ஜகன்னாத தாசரின் ஆயுள் அதிகரித்து, பின் அவர் ஒரு மகத்தான கிரந்தத்தை - ஹரிகதாம்ருதசாரம் - எழுதினார். மேற்சொன்ன ஆயுள் தானம் செய்யும்போது எழுதப்பட்ட பாடலே இது.

ஹே தன்வந்திரி, நான் சொல்வதைக் கேள். இவன் மிகவும் சிறியவன். தீராத வயிற்றுவலியால் தவிக்கிறான். தயைகூர்ந்து இந்த நோயை தீர்த்து வை.

ஆரோக்ய ஆயுஷ்ய ஐஸ்வர்யவெம்ப
ஈ மூரு வித வஸ்துங்களு
நாராயணன பஜகராதவர சாதனக்கே
புராணவாகிப்பவோ
கோர வியாபிசார பரனிந்த பரவித்தாப
ஹார மாடித தோஷதி
தாரித்ர்யராகுவரு ஈ மூரு விததிந்தலி
காரணனு நீனே துஷ்கர்ம பரிஹரிஸோ

ஸ்ரீஹரியை வணங்குவதற்கு நல்ல உடல்நலம், பொருள் மற்றும் ஆயுளும் வேண்டும். இவை எல்லாம் வேண்டும் என்றால் பிறன்மனை நோக்குதல், பிறரின் செல்வத்தை அபகரித்தல் மற்றும் பிறரை தூஷித்தல் - ஆகியவற்றை செய்திருக்கக்கூடாது. இவற்றை நாம் செய்யாதிருந்தால், அதுவே சிறந்த செல்வம் ஆகும். மேலும் தாசர் - ஸ்ரீஹரியே, இவை எல்லாவற்றிற்கும் நீயே காரணம். ஆகவே, இவனை (ஜகன்னாத தாசரை) இந்த நோயிலிருந்து விடுவி என்கிறார். அவர் சொல்வது அனைத்தும் நமக்கும் அப்படியே பொருந்தும்.

வசுமதிய மேலின்னு அசுர ஜனரே பஹள
வஷவல்ல கலிய பாதே
பிசிலிந்த பேடிதவாத சசிகளந்தே
சிஷுகளு நா விப்பேவு
அசுராரி நின்ன கருணாம்ருதத மளிகெகளனு
குஷதல்லி பாலிசுவதோ
கெசரிந்த கெசரு தொளதந்தே கர்மத பதவு
அசுனாத ஹரியே சலஹோ, ஸ்வாமி (என்ன)

ஹே தன்வந்திரி - இந்த உலகத்தில் கலியால் பாதிக்கப்பட்டவர்கள் பலர் உள்ளனர். கடும் வெய்யிலினால் மரம் பட்டுப் போவதைப் போல், உன் கருணை இல்லாமல் நாங்கள் அனைவரும் பாதிக்கப்பட்டுள்ளோம். நாங்கள் செய்த பாவங்களைப் போக்கி, எங்களுக்கு கருணை காட்டவும்.

அன்யரனு பஜிசதலே நின்னன்னே பஜிசுத்த
நின்ன சின்னெகளன்னு தரிஸி
நின்ன நாமோச்சரிஸி நின்னவர நெனிஸி
நின்னிந்த உபஜீவிஸி
அன்ன ஆரோக்யவு அல்பவூ ஆகே இன்னு
அன்யரிகே அல்பரியபேகே
நின்ன சங்கல்ப பக்தரனு போஷினெம்போ
கன்ன பிருதன்னு உளுஹோ ஸ்வாமி (என்ன)

ஹே தன்வந்திரி - நாங்கள் எப்போதும் உன்னையே வணங்குகிறோம். உன் சின்னங்களான - சங்கு, சக்ரம், கதை, பத்மம் மற்றும் நாராயண முத்ரிகைகளையே எங்கள் அங்கங்களில் தரிக்கிறோம். உன் அடியார்களுடனேயே பழகுகிறோம். எங்களை எப்போதும் உன் நினைவுகளிலேயே மூழ்கி இருக்கச் செய். உணவு, உடை மற்றும் உடல் நலத்திற்கு எப்போதும் குறை வைக்காதே. உன் மற்றொரு பெயர் பக்தாபராதீனன் (பக்தர்களுக்குக் கட்டுப்பட்டவன்) அல்லவா? ஆகவே, உன் பார்வையை எங்கள் மேல் செலுத்தி, எங்களை காப்பாற்றுவாயாக.

ஆதிவியாதிகளு உன்மாத விப்ரம நானா
பாதேகெ ஔஷதவு நீனே
ஈ தாவ கரமலதிம் சுதேகரெதே

சாதுகள பாலிசுவெ நீ
மோதபடிசுவி நின்ன சாதிசுவவரிகெ
சுபோதயங்கள நீ நீடி
ஆதரிஸி இவகெ தவபாத பஜனெயன் இத்து
சாதுகளொளிரிஸி மோதகொடு சர்வதா (என்ன)

ஹே தன்வந்திரி, அனைத்து நோய்களுக்கும் (பவ ரோகங்கள்) நீயே மருந்து ஆதலால், இவரை (ஜகன்னாத தாசரை) குணப்படுத்தி, காப்பாற்று. எங்களை எப்பொழுதும் உன் நினைவுகளிலேயே வைத்திரு, உன் புகழை பாடுமாறு செய், உன் அடியார்களின் சேவை செய்ய எங்களுக்கு அனுக்கிரகம் செய். எங்களை ஆனந்தமாக வைத்திரு.

நின்னவரலி இவகே இன்னு ரதியனெகொடோ
நின்னவரனெந்து அரிது
நின்ன பிரார்த்திஸிதே நானன்யரிகெ அல்பரியே
என்ன பாலிசுவ தொரெயே
என்ன மாதல்லவிது என்ன ஹிரியர மாது
மன்னிசபேகு கருணி
அனந்த குணபூர்ண கோபால விட்டல
இன்னிதகே பாலிசுவதோ ஸ்வாமி (என்ன)

ஹே தன்வந்திரி - இவர் (ஜகன்னாததாசர்), என் குருவை (விஜயதாசர்) ஒரு முறை அவமதித்திருந்தாலும், இவர் இன்னொரு முறை அப்படி செய்யாதிருக்க - நீ இவருக்கு உன் கருணையைக் காட்டு; எங்களைக் கரையேற்றுமாறு வேண்டி - உன்னைத் தவிர நான் வேறு எந்தக் கடவுளையும் வணங்குவதில்லை. இது என் வேண்டுகோள் அல்ல; இவருக்கு ஆயுள்தானம் கொடுக்க வேண்டி என் குருவின் ஆணை. ஆகவே, தயவு செய்து இவரைக் காப்பாற்று. நீ எங்கும் வியாபித்திருக்கிறவன். கோபாலகர்களை நீ காப்பாற்றியிருக்கிறாய். நீயே கோபால கிருஷ்ணன். ஹே விட்டலா, இது என் மற்றும் என் குருவின் பிரார்த்தனை ஆகையால், உன் கருணையை இவனுக்கு உடனடியாக காட்டி, கரையேற்று.

நான்கு ரொட்டிகளை இறைவனுக்கு படைத்து, அவற்றை ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு கொடுத்தார். அவரும் ஒவ்வொரு ரொட்டியிலிருந்தும் ஒரு துண்டு பிய்த்து உண்டார்.

மொதல பக்ரியல்லி ரிக் வேத
எரடனே பக்ரியல்லி யஜுர் வேத
மூரனே பக்ரியல்லி சாம வேத
நால்கனே பக்ரியல்லி அதர்வண வேத

மேற்கண்ட வரிகளைப் பாடி அந்த ரொட்டிகளைக் கொடுக்கவும், அதை சாப்பிட்ட ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு உடனடியாக மயக்கம் தெளிந்தது. பின்னர்,

ஜகன்னாததாசராகி 'ஹரிகதாம்ருதசாரம்' என்னும் மிகச்சிறந்த - வேதங்களின் சாரமான நூல் ஒன்றை எழுதி, தன் குருவிற்கு அர்ப்பணித்தார்.

குறிப்பு: ஒருவர், மற்றொருவருக்கு ஆயுள் தானம் செய்வது சாத்தியமா? ஆம் என்றால், எப்படி? இதற்கு யார் பதில் அளிப்பார்? இப்படி தானம் செய்வதற்கான வழிமுறைகள் என்ன? இதை யார் சொல்வார்? முன்னர் என்னென்ன சொன்னார்களோ, அதை அப்படியே ஏற்கவேண்டியதுதான் நம் கடமையா? இவற்றிற்கு யார் பதில் அளிப்பார்கள்?

மொசரகல்லு கிராமம், தேவதுர்கா தாலுக்கா, ராய்ச்சூர் மாவட்டத்தில் வாழ்ந்து வந்த முராரிராயா மற்றும் வெங்கம்மாவிற்கு நான்கு ஆண் பிள்ளைகள். அவற்றில் மூத்தவர் பாகண்ணா. இவரே இந்தக் கதையின் கதாநாயகர். 1722ம் ஆண்டு பிறந்தார். இவரின் தம்பிகளான தாசப்பா, சீனப்பா மற்றும் ரங்கப்பா இன்னும் சிறுவர்களாக இருந்தபோதே, இவர்களின் தந்தை முராரிராயா இறந்து போனார். இக்குடும்பமே அதிர்ச்சியில் தத்தளித்தது. தாயாரான வெங்கம்மா குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றார். அக்கஷ்டத்தில் சமாளித்து, பாகண்ணனுக்கு உபநயனம் செய்வித்து, காயத்ரி மந்திர உபதேசம் செய்வித்தார். அன்றிலிருந்து பாகண்ணன் நாள்தோறும் தவறாமல் காயத்ரி மந்திர ஜபம் செய்து வந்தார். ஒருவரின் அடுத்த மூன்று பிறவிகளை கண்டறியும் திறன் பெற்றிருந்தார். காயத்ரி மந்திர ஜபம் செய்ததாலேயே இப்படி கிடைத்தது - ஆகவே இதை யார் வேண்டுமானாலும் முயற்சி செய்து பார்க்கலாம்.

இவர்கள் அனைவரும் உத்தனூர் வெங்கப்பா என்பவரின் வீட்டில் வசித்து வந்தனர். இறைவனின் கருணையால், வெங்கட கிருஷ்ணா என்கிற அங்கிதத்துடன் பாகண்ணன் பாடல்கள் இயற்றத் துவங்கினார். பிறகு, விஜயதாசர் இவருக்கு ஆதோனி மங்கராயா கோயிலில், 'கோபால விட்டலா' என்ற அங்கிதத்தை வழங்கி ஆசி புரிந்தார். அன்றிலிருந்து இவர் விஜயதாசரின் பிரதிநிதி ஆனார்.

வெங்கடராமராயா, ஸ்ரீனிவாசாசார்யா மற்றும் தன் மூன்று தம்பிகளுக்கு தன் கருணையை வழங்கினார். ஆண்டுதோறும் திருப்பதி பிரம்மோத்சவத்திற்கு, தன் குரு விஜயதாசருடன் பயணம் மேற்கொள்வதை வழக்கமாக வைத்திருந்தார். கோபாலதாசர், இந்தியா முழுக்க பயணம் செய்திருந்தாலும், விட்டலா என்ற அங்கிதம் பெற்றிருந்தாலும், இதுவரை பண்டரிபுரம் போகாமல் இருந்தார். ஒரு நாள், பாண்டுரங்க விட்டலன் இவர் கனவில் வந்து - ஆலே லஹி (மராத்தியில் - இன்னும் வரவில்லை) என்றார். கோபாலதாசர் இன்னும் தன்னை வந்து பார்க்கவில்லை என்பதையே சுட்டிக் காட்டினார்.

பண்டரிபுரம் வராததற்கு பாண்டுரங்கனிடம் மன்னிப்பு கேட்டவாறு - நீல குதுரெயனேறி ஷாலு தொங்கக்க சுத்தி', என்ற பாடல் இயற்றி, பின் பண்டரிபுரமும் சென்று வந்தார். 1762ம் ஆண்டு, சித்ரபானு வருடம், புஷ்ய மாதம், கிருஷ்ண அஷ்டமி அன்று தன் இன்னுயிர் நீத்தார்.

## வேணுகோபாலவிட்டல தாசர்



பங்க நாமத திம்மண்ணா என்றும் பெயர் கொண்ட வேணுகோபாலவிட்டல தாசர், தற்போதைய ஆந்திரத்தைச் சேர்ந்த ஆதோனியைச் சேர்ந்தவர் ஆவார். ருக்மம்மா தம்பதிகளுக்குப் பிறந்த மூன்று குழந்தைகளில் மூத்தவர் ஹிரெ திம்மண்ணா. அடுத்தவர் சிக்க திம்மண்ணா. மூன்றாமவர் நாகப்பா. இந்த இரண்டாவது மகனே பங்க நாமத திம்மண்ணா ஆவார். 'அதோனி வஸாலத் ஜங்க' என்னும் நபாப்'பின் கீழ், திவானாக பணிபுரிந்து வந்தார்.

விஜயதாசர் எப்போது அதோனி வந்தாலும், இவர்களது வீட்டில் தங்குவது வழக்கமாக இருந்தது. அப்போது ஒரு சமயம், வேணுகோபாலவிட்டல தாசரின் தாய், விஜயதாசரிடம் - நீங்கள் எப்போது இங்கு வந்தாலும், என் மகன் தன் வேலைகளை எல்லாம் விட்டுவிட்டு உங்களுடனேயே இருந்துவிடுகிறான். அதனால் அவன் தன் வேலையை இழக்கக்கூடும் - என்றார். இதைக் கேட்ட விஜயதாசர் உடனடியாக அங்கிருந்து கிளம்பி, அடுத்த முறையிலிருந்து அங்கு வந்து தங்குவதை தவிர்த்தார். இதைக் கேள்விப்பட்ட திம்மண்ண தாசர், விஜயதாசரிடம் மன்னிப்பு கேட்டு, தனக்கு அங்கிதம் வழங்குமாறு கேட்டுக் கொண்டார். விஜயதாசரும், அவருக்கு வேணுகோபாலவிட்டல தாசர் என்ற அங்கிதம் கொடுத்து அவரை ஹரிதாசர் ஆக்கினார்.

விஜயதாசர் இவரை ஏன் பங்க நாமத திம்மண்ணா என்று அழைத்தார்?

அப்படி அவர் கூப்பிட்டதாலேயே, உண்மை என்ன என்று தெரிந்துகொள்ள நமக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது. திம்மண்ணா முந்தைய பிறவியில் பேலூர் வைகுண்ட தாசராக பிறந்திருந்தார். பேலூர் கேசவனுக்கு சேவை செய்து, அவனின்

கருணையைப் பெற்றவர். இதன் காரணமாக, இந்தப் பிறவியிலும் திம்மண்ணனின் நெற்றியில் மூன்று நாமங்களை தான் காண்பதாக விஜயதாசர் கூறினார்.

வேணுகோபாலவிட்டல தாசர், பற்பல பாடல்கள் மற்றும் சூளாதிகளை இயற்றியுள்ளார். 1738 ஸ்வாதாரி ஆண்டு வைசாக மாதம் சுத்த த்ருதியை திங்கட்கிழமை அன்று தன் இன்னுயிர் நீத்தார்.

மேலே சொன்னாற்போல், இவர் முந்தைய பிறவியில் வைகுண்ட தாசராக பிறந்திருந்தார். அப்போது நஞ்சுண்டா என்றொரு சிறுவன் இவருக்கு உதவியாக இருந்தார். அவனது உதவிகளைப் பார்த்து மகிழ்ச்சியடைந்த தாசர், அவனுக்கு வர இருந்த ஆபத்தைத் தடுத்து, அவனுக்கு இரண்டாண்டு காலம் ஆயுள் தானம் அளித்தார்.

பிறகு வைகுண்ட தாசர், வேணுகோபாலவிட்டல தாசராக பிறந்திருக்கையில், அதே நஞ்சுண்டா, கல்லூர் சுப்பண்ணா என்ற பெயரில் பிறந்து - வியாஸ விட்டலா என்ற அங்கிதம் பெற்றார். விஜயதாசரின் ஆசியும் பெற்றார்.

இவர்களினால், இந்த 21ம் நூற்றாண்டிலும் தாச பரம்பரை வளர்ந்து வருகிறது. ஆகவே, வேணுகோபாலவிட்டல தாசரை, தாச சதுஷ்டயரில் சேர்ப்பதில் எந்த மாற்றுக் கருத்தும் இல்லை.

**ஜகன்னாத தாசர்**



1650ம் ஆண்டு கீலக நாம சம்வத்சரம் சிராவண சுக்ல த்விதியை 27/01/1728 அன்று, திருப்பதி ஸ்ரீனிவாசரின் அருளால், நரசிம்ம தாசர் மற்றும் லக்ஷ்மக்காவுக்குப் பிறந்த ஸ்ரீனிவாசன், பல மொழிகளைக் கற்றுணர்ந்த பண்டிதராக வளர்ந்தார்.

ஸ்ரீ வரதேந்திர தீர்த்தர் மற்றும் மந்திராலயத்தில் பல பண்டிதர்களிடம் 12 ஆண்டுகள் பல பாடங்களைக் கற்று, த்வைத சித்தாந்தத்தில் சிறந்து விளங்கினார். கற்றறிந்தவர்கள் சபையில் 'ஆசார்யா' என்று அழைக்கப்பட்டார்.

நம் மாத்வர்களில் தங்கள் பெயருக்குப் பின்னால் 'ஆசார்யா' என்று பலர் சேர்த்துக் கொள்வது வழக்கம்தானே? யதித்ரயர்கள் மட்டுமே இப்படி சேர்த்துக் கொள்ள தகுந்தவர்கள் எனக் கூறலாம். அத்வைதிகள் மற்றும் விசிஷ்டாத்வைதிகள் இப்படி சேர்த்துக் கொள்வதில்லை. ஆனால், பெரும்பாலான மாத்வர்கள் - அவர் யாராக இருப்பினும் - சமையல் கலைஞர், பண்டிதர், சொற்பொழிவாளர் - 'ஆசார்யா'வை சேர்த்துக் கொள்கிறார்கள். இப்படி செய்வது காலப்போக்கில் நின்றுவிடவேண்டும் என்று விரும்புகிறோம். இதைப் பற்றி புரந்தரதாசர் கூறுகையில்:

ஆசாரியர் எம்புவர இவர நோடி
ஆசார பல்லவரே ஆசாரியரு (ஆசாரியர்)

ஆ எந்தரே அதி தத்வவ திளிதவரு
ஆதுளித மதத்வம்ஸ மாடுவரு
அதிதி அப்யைகதரிகே அன்னவன்னே எக்குவரு
ஆயுத வ்ருத்தியன்னே மாடுவரு (ஆசாரியர்)

ச எந்தரே சாஞ்சலாத்மவன்னே அளிதவரு
சென்னாகி வேத சாஸ்திரவன்னே ஓதிதவரு
சலனே இல்லதே குருஹிரியரிகே எரகுவரு
சானஸ பிட்டவரு ஆசாரியரு (ஆசாரியர்)

ரு எந்தரே ருணவ மாடதித்தவரு
ரிபுமித்ர சமரெந்து காம்புவரு
காவ்ய சௌவர்ணவு ம்ருத்திகெயெந்து நோடுவரு
ரமாதவ புரந்தர விட்டலன பல்லவரே ஆசாரியரு (ஆசாரியர்)

இப்போது கூறுங்கள். இவர்களை ஆசாரியர் என்று அழைக்கமுடியுமா? இல்லை. அவர்களின் பெயரை மட்டும் மரியாதையுடன் அழைத்தால் போதுமே?

ஜகன்னாததாசர் மான்வியில் வசித்தபோது, ஒரு நாள் அங்கு விஜயதாசர் வந்திருந்தார். ஸ்ரீனிவாசாச்சாரியரைப் பற்றி நன்றாக அறிந்திருந்தார் விஜயதாசர். ஒரு நாள், ஸ்ரீனிவாசாச்சாரியரின் வீட்டு வழியே செல்லும்போது, அவரை பிராமணராக உணவருந்த அழைத்தார். ஆனால், ஸ்ரீனிவாசாச்சாரியாருக்கு விஜயதாசரைக் கண்டாலே பிடிக்கவில்லை. நைவேத்யம் ஆனபிறகும் ஒருமுறை சொல்லி அனுப்பினார். ஆனால், ஸ்ரீனிவாசாச்சாரியரோ, தனக்கு வயிற்று வலி என்றும், தாம் ஏற்கனவே உணவருந்தி விட்டதாகவும் கூறிவிட்டார். இதைக் கேட்ட விஜயதாசர் - கடவுள் சித்தம் என்றார்.

அதே கடவுளின் சித்தப்படியே, ஸ்ரீனிவாசாச்சாரியருக்கு கடுமையான வயிற்றுவலி வந்து, நாளுக்கு நாள் அது மோசமடைந்து வந்தது. பொறுத்துக் கொள்ள முடியாததால், திருப்பதி மற்றும் கடிகாசலத்திற்குச் சென்று வேண்டினார். ஆனால், வலி குறையவில்லை. பின்பு ஒரு நாள், கருணைக் கடலான ஸ்ரீராகவேந்திரர் இவரது கனவில் வந்து, விஜயதாசரைப் பணிந்தால் இந்த வலிக்கு தீர்வு கிடைக்கும் என்றார். இதைக் கேட்ட தாசர், சிக்கலபரவிக்குச் சென்று விஜயதாசரிடம் தன் முந்தைய செயலுக்கு மன்னிப்பு கேட்டு, அவரது ஆசியை வேண்டினார்.

ஸ்ரீனிவாசாச்சார்யரின் ஆயுள் முடிவுறப் போவதைக் அறிந்த விஜயதாசர், அவரை கோபாலதாசரிடம் அனுப்பினார். விஜயதாசருக்கு அப்போதே 54 வயது ஆகியிருந்தது. விஜயதாசர் ஏற்கனவே தன் 2.5 ஆண்டு ஆயுளை கேசவாச்சார் மற்றும் சிலருக்குக் கொடுத்திருந்தார். மேலும், ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு 40 ஆண்டுகள் ஆயுள் தேவைப்பட்டது - அதை கோபாலதாசரால் மட்டுமே கொடுக்க முடியும். கோபாலதாசரும், விஜயதாசரின் ஆணைக்கேற்ப, தன் ஆயுளிலிருந்து 40 ஆண்டுகளை ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு தானமாகக் கொடுத்துவிடுகிறார்.

இதற்குள் ஸ்ரீனிவாசாச்சார்யாரின் கர்வம் அடங்கிவிடுவதால், அவர் கோபாலதாசரிடம் அங்கிதம் வேண்டினார். கோபாலதாசரும் ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு ஹரிதாஸ தீட்சை கொடுத்து, அங்கிதத்திற்காக பண்டரிபுரம் போகும்படி சொன்னார். அங்கு சந்திரபாகா நதியில் குளிக்கும்போது, 'ஜகன்னாத விட்டலா' என்ற பலகை ஒன்று கிடைத்ததால், அதை ஜலாந்தர்யாமி சங்கர்ஷணரூபி பரமாத்மாவின் வாக்காக ஏற்று, அதையே தன் அங்கிதமாக வைத்துக் கொண்டார். அன்றிலிருந்து, அதே அங்கிதத்தில் பற்பல பாடல்களை இயற்றி, ஜகன்னாத தாசர் என்று பெயர் பெற்றார். தன் நேரம் அனைத்தையும் பாடல்களால் இறைவனின் பெயர் பாடுவதிலேயே செலவழித்தார்.

1. ஹரிகதாம்ருதசார - பாமினி ஷட்பதி என்கிற செய்யுள் வகையில் எழுதியது
2. தத்வ சுவ்வாலி - 1200 பத்யங்களால் ஆனது
3. பலவிது பாளுதக்கே என்ற பாடல்
4. நரசிம்ம சூளாதி, மற்றும் பல பாடல்கள் & சூளாதிகள்

தடி தோடி நிபகாயோ
ஜகன்னாதவிட்டலனய்யா விட்டலனய்யா
நீ கருணிசதே நிராகரிசலு என்ன சாகுவர் யாரோ
தயபாரா மூர்த்தே
விட்டலய்யா விட்டலய்யா

மேற்கண்ட பாடலைப் பாடத்துவங்கினார்.

82 ஆண்டுகள் வாழ்ந்து, 1731 சுக்ல நாம சம்வத்சரம் பாத்ரபத சுத்த நவமி ஞாயிறு அன்று 8.30 மணிக்கு தன் இன்னுயிர் நீர்த்தார் ஜகன்னாத தாசர்.

தத்வ சுவ்வாலி

துளசி ஸ்தோத்ரம்

விருந்தாவனி ஜனனி வந்திசுவே சததஜ
லந்தரன ராணி கல்யாணி
கல்யாணி ஸ்ரீ துளசி
மந்திரெ எனகே தயவாகே

ஸ்ரீ துளசி தேவி மன்னாத லாலிசு
ஜகன்னாத விட்டலன்ன சரண
ஜகன்னாத விட்டலன்ன சரணாப்ஜ ஹ்ருதயாதி
நீதோரி நித்ய கிருபெயிந்த

மேலும் இவர் பிரம்ம, வாயு, ருத்ர, நவக்ரக, வினாயக, தசாவதார, வெங்கடேச, ஸ்ரீனிவாச ஸ்தோத்ரங்கள் மற்றும் ருக்மிணி விலாஸ ஆகியவற்றையும் இயற்றியுள்ளார்.

துரிதவன குடாரி துர்ஜன குலவைரி
சரணாகத வஜ்ரபஞ்சர குஞ்ஜர
மந்த்ர துல்யவாத ந்ருஸிம்ஹ சூளாதி
அனேக ஈப்சித கொடுவந்தத்தாகிதே

பலவிது பாளுதக்கே
சிரி நிலயன குணகள திளிது பஜிசுவுதே

இறைவனின் மகிமைகளை தெரிந்து கொண்டு, அதைப்பற்றி பாடுவதே நாம் பிறந்ததற்கான பொருள் ஆகும் என்கிறார்.

சோசித கர்மகள ஆசரிசுதபலு நீசரல்லிகே போகி யாசிசதே
கேசரவாஹ சராசர பந்தக மோசக நஹுதெந்து யோசிசுதிப்புதே (பலவிது)

நம் அன்றாட தேவைகளுக்கு நாம் யாரையும் சார்ந்திருக்கக்கூடாது. கருட வாகனனான ஸ்ரீஹரியை யார் எப்போதும் நினைத்துக் கொள்கிறாரோ, அவர் ஆனந்தமாக இருப்பார். நித்ய கர்மானுஷ்டானங்களான - ஸ்நானம், சந்தியாவந்தனம், ஜபம், தபம், தானம், தர்மம், அத்யயனம், அத்யாபனம், தீர்த்தயாத்திரை ஆகியவற்றை கண்டிப்பாக செய்ய வேண்டும் என்கிறார் தாசர்.

நிச்ச சுபகுதிய அச்யுதலங்க்ரி களர்ச்சிஸி மெச்சிஸி தெச்சரதி
துச்ச விஷயகள இச்சைசதே யெத்ருச்சா லாபதிம் ப்ரோச்சனாகுவுதே (பலவிது)

'அமலா பக்திஸ்ச தத் சாதனம்' அதாவது ஸ்ரீஹரியிடம் பக்தி மட்டும் இருந்தால் போதாது, அது தூய்மையாக இருக்க வேண்டியது அவசியம் என்று ஸ்ரீவியாச தீர்த்தர் சொல்லியிருப்பதாக தாசர் இங்கு விளக்குகிறார். அந்த ஸ்ரீஹரிக்கு மாற்று யாருமே கிடையாது. நாம் எப்போதும் அவன் அடிகளை வணங்கவேண்டும். இருப்பதை வைத்து யார் திருப்தியுடன் வாழ்கிறாரோ, அவருடைய வாழ்க்கை அர்த்தமுள்ளதாகும்.

பிகித கண்டதிம் த்ருக்பாஷ்பகளிம்
நகெமொகதிம் ரோமகளொளிது
மிகெ சந்தோஷதிம் நெகெதாடுத
நான்முகன அய்யன பொகளி ஹிக்குவுதே (பலவிது)

கடவுளை வணங்குவது ஒரு கலை. இதில் நாம் கற்றுத் தேற வேண்டும். அவனை நினைத்தாலே, நம்மையறியாமல், நம் கண்களிலிருந்து கண்ணீர் வரவேண்டும். நாம் அப்படி இருக்கிறோமா? கத்திவாறு, சத்தமாக சிரித்து, ஆடிப்பாடி அவனைத் தொழவேண்டும். இதுவே ஒரு உண்மையான பக்தனின் அடையாளம் ஆகும். இப்படி யார் செய்கிறாரோ, அவரது வாழ்க்கை - பலவிது பாளுதக்கே - அர்த்தமுள்ளதாகும்.

பன்னகாசல சுசன்னிவாச பாவன சரித சத்குண பரித
ஜன்யஜனக லாவண்யனேக நிதி ஜகன்னாத விட்டலா நான்யப நெம்புதே (பலவிது)

சேஷ சயனனான ஸ்ரீஹரி, நம்முள்ளும் இருக்கிறான். அவனது குணங்களைப் பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டும். உலகத்தின் அரசனே நமக்குள்ளும் இருக்கிறான் என்று நாம் நம்பினால், நம் வாழ்க்கை - பலவிது பாளுதக்கே - அர்த்தமுள்ளதாகும்.

27 பத்திகள் கொண்ட - நட்சத்திர மாலிகே - என்று அழைக்கப்படும் இந்தப் பாடலில், பஞ்சபேத (ஐந்து வேறுபாடுகள்), தாரதம்யம் (படிநிலை), த்வைத சித்தாந்தம் என அனைத்தையும் விளக்கியிருக்கிறார் தாசர். நம் வாழ்வில் ஆனந்தம் வேண்டுமானால், நாம் எப்படிப்பட்ட வாழ்க்கை வாழவேண்டும்? இதற்கான விடைகளை தாசர் இந்தப் பாடலில் பாடியிருக்கிறார். இதைப் புரிந்து கொண்டு, பாடி, அதன்படி நாம் வாழவேண்டாமா?

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

***

# யட்சகானா

01-07-2007 அன்று வெளியிடப்பட்ட புத்தகம்
வெளியீடு: ஹரிதாச சாகித்ய மகாவித்யாலயா
கன்னடத்தில்: ஹரதி பிரகலாதாச்சார்
தமிழில்: திருமதி. சவிதா ராவ்
சரிபார்த்தல்: 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்.

***




கர்நாடகாவின் ஹரிதாசர்கள் பொது மக்களுக்கு தத்வஞானத்தை பரப்புவதில் முக்கிய பங்கு வகித்துள்ளனர். இதுவரை இந்தத் துறையில் இவர்களை மிஞ்சியவர்கள் / சவால் விட்டவர்கள் யாரும் இல்லை என்று கூறுவதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. இதற்குக் காரணம் அவர்கள் மத்வ சித்தாந்தத்தை பின்பற்றுபவர்களாக இருந்தனர்.

ஹரிதாச சாகித்யம் இன்று வரை உள்ள பல கலை வடிவங்களுக்கான ஒரு அடித்தளமாக உள்ளது. இந்த சாகித்யத்தில் நாம் கமகத்தின் (வசன காவியம்) இருப்பை உணர முடியும். இது நடனத்திற்கு தொடர்புடையது. கலையுலகில் முதலிடத்தில் இருக்கும் கர்நாடக இசைக்கு சரிசமமான நிலையிலேயே தாச சாகித்யமும் வைக்கப்படுகிறது. இது கதா காலட்சேபத்துடனும் ஒன்றி இருக்கிறது.

இவற்றை தவிர, தாச சாகித்யமானது, யட்சகானா கலை வடிவத்துடனும் தொடர்புடையதாக உள்ளது என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

உடுப்பி மாவட்டத்தில் நடனக் கலைஞர்களால் நடத்தப்படும் யட்சகானா நடனத்தில் தாச சாகித்யம் அதிகமாக பயன்படுத்தப்படுகிறது என்று நாம் கூறினால் தவறாகாது. இந்த இடத்தில் பல ஹரிதாசர்கள் தங்கள் பாடல்களின் (தாசர பதங்கள்) மூலம் யட்சகானாவை செழிப்புறச் செய்தார்கள்.

யட்சகானா வெறும் நடனம் ஆடுவது மட்டும் அல்ல. இது ஒரு நடன நாடகம். ஹரிதாச சாகித்யத்தில் விளக்கப்பட்டுள்ள விஷயங்களையும் மற்றும் ஸ்ரீ கிருஷ்ண பக்தியையும் காட்சியாக காட்ட இது ஒரு முயற்சியாகும்.

கர்நாடகத்தின் பாரம்பரிய நடன (பரதநாட்டியம்) வடிவத்திலும் யட்சகானத்திலும் நிறைய வித்தியாசங்கள் இருந்தபோதிலும், இரண்டின் நோக்கம் ஒரே மாதிரியாகவே இருக்கிறது. கர்நாடகத்தின் பாரம்பரிய நடனம் மற்றும் இசையானது, இறைவன் மீது பக்தி வெளிப்படுத்துவதில் ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது. யட்சகானத்தில் நடனம் ஆடுவதை தவிர, தேவையான இடங்களில் இசை மற்றும் நாடகமும் பயன்படுத்தப்படுகிறது. யட்சகான நிகழ்ச்சிகள் நடனம், இசை மற்றும் நாடகத்தின் கலவையாக இருக்கும். முற்றிலும் நாடகம் அல்லது முற்றிலும் நடனம் அல்ல.

உடுப்பி, மங்களூரு, சிர்சி, தர்மஸ்தாலா, ஹொன்னவரா, தார்வாட் மற்றும் மானவி போன்ற பல இடங்களில் இந்த வகை கலை நிகழ்ச்சி நடக்கிறது. இந்தியாவைத் தவிர, சர்வதேச மேடைகளிலும் யட்சகானா கலை அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

முக்கிய நபர் யார்? யட்சகானாவின் வளர்ச்சிக்கு யார் வேலை செய்தார்கள்? இதன் வளர்ச்சி ஆசாரியர் மத்வர் வழியாக நடந்தது, ஏன் என்றால் அவரின் பிறந்த இடம் பாஜகா. யட்சகானா கலையை சிலர் "பயலட்டா" என்று கூறுகிறார்கள். ஒரு வேளை ஆசாரிய மத்வர் கூட இந்த நடனத்தை ஆடி இருக்கலாம். த்வாதச ஸ்தோத்திரத்தை மிக அற்புதமாகப் பாடிய பெரிய துறவி, இன்றும் அவருடைய பரம்பரையின் நோக்கம் பயலாடத்தோடு ஒன்றி இருக்கிறது என்றால், அவர் அந்த கலையில் நிபுணராக இருந்திருக்க வேண்டும்.

1262 ஆம் ஆண்டில், மன்னர் மும்மாடி வீரா நரசிம்மர் ஸ்ரீகாகுளத்தை அவரது தலைநகரமாக ஆக்கினார், இது கலிங்க ராஜ்யத்திற்கு சொந்தமானது. கலிங்க ராஜா வைஷ்ணவத்தைப் பின்பற்றுபவர் என்று வரலாற்றில் இருந்து நமக்கு தெரியவருகிறது, ஒருமுறை ஆசாரியர் ஸ்ரீ மத்வர், கலிங்க ராஜ்யத்திற்கு விஜயம் செய்தபோது, மன்னர் அவரை மரியாதையுடன் வரவேற்றார், ஸ்ரீ கிருஷ்ண தர்மம் அதாவது ஸ்ரீ பாகவத தர்மத்தின் தீட்சையை ஆசாரியரிடம் பெற்று, அந்த தர்மத்தை பரப்பலானார். வீர நரசிம்மனின் அரசபையில் நிதி மந்திரிகளாக இருந்த ஸ்யாமா சாஸ்த்ரிகள் மற்றும் சோபன பட்டர் இருவரும் ஆசாரிய மத்வருடன் வாக்குவாதம் செய்து, பிறகு ஆசிரமத்தைப் பெற்று அவருடைய சீடர்களாக

மாறினர். அவர்களே நரஹரி தீர்த்தர் மற்றும் பத்மநாப தீர்த்தர் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

கலிங்க ராஜா பானுதேவா இறந்தபின், நரஹரி தீர்த்தருக்கு, யானை மாலை அணிவித்ததால், அவரே அங்கு அடுத்த ராஜாவானார். அடுத்த 9 ஆண்டுகளுக்கு அவர் ராஜ்யத்தை ஆட்சி செய்தார். ராஜ்யத்தை ஒப்படைத்தபோது, கருவூலத்தில் இருந்த ஸ்ரீராமச்சந்திரனின் சிலையை பரிசாக எடுத்துக் கொண்டார். சுமார் 1293 ஆம் ஆண்டில் நரஹரி தீர்த்தர் உடுப்பிக்கு வந்து ஸ்ரீ ராமரின் சிலையை ஆசாரியா மத்வரிடம் சமர்பித்தார் என்பதை அறிவோம். நரஹரி தீர்த்தர் பல தேவர நாமங்களையும் எழுதியுள்ளார், அவற்றின் மூலமாகவும் அவர் மக்களுக்கு பக்தி யோகத்தைப் பரப்பினார்.

நரஹரி தீர்த்தருக்கு அநேக சீடர்கள் இருந்தார்கள். அவர்களில் கோபால கிருஷ்ண சரஸ்வதி அவரது விருப்பமான சீடர் ஆவார். சரஸ்வதி, அவ்வப்போது நேரம் கிடைத்த சமயத்தில், சிறிய சமஸ்கிருத நாடகங்களை எழுதுவார் மற்றும் நரஹரி தீர்த்தர் முன் நடித்தும் காட்டுவார். இந்த நாடகங்களெல்லாம் ஸ்ரீகாகுளம் (துர்கா) கோவிலில் நடைபெற்றன என்பதை நாம் அறிகிறோம். இந்த நாடகங்களைக் கண்ட சித்தப்பா (Siddappa) என்பவர் அறிவொளி பெற்று சித்தப்பா யதி ஆனார். இந்த சிறிய நாடகங்கள் மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தி ஸ்ரீ கிருஷ்ணனின் மேல் பக்தி செய்ய ஊக்குவித்தது என நம்பப்படுகிறது. நரஹரி தீர்த்தர் சித்தப்பாவை உடுப்பிக்கு அனுப்பி வேதங்கள் மற்றும் நாட்டிய சாஸ்திரங்களை கற்றுக் கொள்ளுமாறு உத்தரவிட்டார். 20 ஆண்டுகளுக்கு பயின்று நன்றாக தேர்ச்சி பெற்று அவர் ஸ்ரீகாகுளம் கோவிலுக்கு (கலிங்க ராஜ்யம்) வந்தார், பின்னர் அவரே புகழ்பெற்ற சித்தேந்திர யதி (முனி) என்று அழைகப்பட்டார் என்று கூறப்படுகிறது. இவர் "பாமா கலாபம்" என்ற ஒரு பக்தி நாடகத்தை எழுதினார் மற்றும் இளம் குஷிபூடி பிராமண சிறுவர்களை கொண்டு ஒரு நாட்டிய நாடகத்தை நடத்தினார் என்று ஐதீகம்.

டாக்டர் சிவராமகரன்தா மற்றும் ஸ்ரீ கனகலிங்கீஸ்வரா இவர்களால் சொல்லப்பட்ட கதை உண்மை என்றால், 20 ஆண்டுகள் உடுப்பியில் தங்கியிருந்தபோது தென் கனராவில் பிரசித்தி பெற்ற யட்சகானா மற்றும் பயலாட்டம் போன்ற கலைகளால் சித்தேந்திர யதி கவரப்பட்டார் என்று யூகிக்கலாம். (யட்சகானா பயலாட்டா டாக்டர் சிவராமகரன்தா பக்கம் 46-47)

ஸ்ரீ நரஹரி தீர்த்தர் இந்த சமயத்தில் ஆசாரியா மத்வரிடம் சீடராக இருந்தார் என்பது நமக்குத் தெரியும். ஸ்ரீ ராமரின் சிலை கொண்டுவரவே நரஹரி தீர்த்தரை கலிங்க ராஜ்யம் அனுப்பும் காரணமாக இருந்தாலும், அப்பகுதியில் பாகவத தர்மத்தின் (ஸ்ரீ ராம பக்தியை) விதைகளை விதைப்பதே ஸ்ரீமத்வரின் முக்கிய நோக்கமாக இருந்தது. ஸ்ரீ நரஹரி தீர்த்தர் தனது பணியை செவ்வனே முடித்து குரு தட்சிணையாக ஸ்ரீ ராம விக்கிரகத்தை ஆசாரியா மத்வரிடம் சமர்ப்பித்தார். இதற்குப் பிறகு ஆசாரியா மத்வர் மற்றும் நரஹரி தீர்த்தர், யட்சகானா மற்றும் பயலாட்டம் ஆகியவற்றை பயன்படுத்தி நம்மைப் போன்ற மக்களுக்கு பாகவத

தர்மத்தை பரப்பினார்கள். இந்த காரணத்தால், உடுப்பி மண்டலம் மற்றும் அதன் சுற்றுப்புறத்திலும் இந்த நடனம் பிரபலமானது.

யட்சகானா பயலாட்டம், பாகவத ஆட்டம், பெரிய ஆட்டம், சிறிய ஆட்டம் ஆகிய சொற்கள் எல்லாம் பர்யாயா தொடர்பான வார்த்தைகளாகிவிட்டன. இவை அனைத்தும் ஸ்ரீ ஹரிக்கு காட்சி செயல்திறன் மூலம் செய்யப்படும் சேவையின் ஒரு வடிவம் என்று நாம் சொன்னால் அது தவறு அல்ல.

இன்றும் கூட உடுப்பியின் அஷ்டமடத்தின் சன்யாசிகள் யட்சகானா பயலாட்டத்திற்கு மிக சிறப்பான முக்கியத்துவம் தருகிறனர். ஆசார்யர் மத்வர், ஸ்ரீ நரஹரி தீர்த்தரை இந்த பாகவத சம்பிரதாயமான பயலாட்டத்தை சிறு சிறு கிராமங்களுக்கு பரப்புவதற்கு நியமித்தார். நரஹரி தீர்த்தரின் வாயிலாக ஆசார்யர் மத்வர் பாகவத நடனம் அல்லது தசாவதார நடனம் என்ற கலையை நடைமுறையில் கொண்டு வந்தார். இன்றும் கூட இந்த கலை தேசிய மற்றும் சர்வதேச அரங்கங்களில் நன்றாக வளர்ச்சி அடைந்து முன்னேறி வருகிறது.

பயலாட்ட கலை பல்வேறு பகுதிகளுக்கு அறிமுகப்படுத்தப்பட்டதினால் அங்குள்ள மொழி, சுற்றுச்சூழல் மற்றும் காலநிலைக்கு ஏற்ப இந்தக் கலையில் சிறு சிறு சீர்திருத்தங்கள் புகுத்தப்பட்டன. இவற்றின் அடிப்படையில், பயலாட்டத்திற்கு தற்போது கீழே விளக்கப்பட்டுள்ளபடி ஐந்து வெவ்வேறு வடிவங்கள் உள்ளன.

1) ஆந்திரப் பிரதேசத்தில் அது குச்சுப்புடி நடனம் என்று அழைக்கப்படுகிறது. ஆரம்ப நாட்களிலிருந்து இது மிகவும் புகழ்பெற்று விளங்குகிறது,
2) தமிழ்நாட்டில் இந்த பாகவதா நடனம் தெருக்கூத்து என்று அழைக்கப்படுகிறது.
3) மகாராஷ்டிராவில் இந்த பயலாட்டம் தாசராட்டா (அல்லது ராதநாட்டா) என அழைக்கப்படுகிறது. இதற்கு மராத்தியில் நகைச்சுவை என்று அர்த்தம்.
4) கர்நாடகத்தில் இது பாகவத மேளா, பயலாட்டா, சன்னாட்டா, யட்சகானா, தொட்டாட்டா என்று அழைக்கப்படுகிறது.
5) கேரளாவில் நடக்கும் கதகளி, தார்மீக கதைகள் நடனமாக நிகழ்த்தப்படும் யட்சகானாவைப் போன்றது.

யட்சகானா இந்த 5 வெவ்வேறு நடனங்களை கலந்த நடனமாகும். இதில் நாம் நடனம் மற்றும் இடையிடையே உரையாடல்களைக் காணலாம். இடையே பாடல்களும் பாடப்படுகின்றன. பாடல் இருந்தால், நிச்சயமாக அதில் ஸ்வரம் மற்றும் சாகித்யம் கண்டிப்பாக இருக்கும். இந்த ஆட்டம் வயல்களின் நடுவில் மேடை அமைத்து நடத்தப்பட்டது.

ஹரிதாசர்களில் மூன்று அல்லது நான்கு வகையானவர் உள்ளனர்.

1) தொழில் ரீதியாக, குருவிடம் அங்கிதம் பெற்று அவர்களின் வம்சத்தை தொடர்ந்தவர்கள்.
2) அங்கிதமே பெறாதவர்கள்.

3) தொழில் ரீதியாகவோ அல்லது பரம்பரையாகவோ ஹரிதாசர்களாக இருந்தவர்கள், அவர்களுக்கு இடையே வேறுபாடுகள் நிறைய உள்ளன.

இந்த வகையில் யட்சகானா மற்றும் பயலாட்டத்திற்கு ஒரு கலை வடிவத்தை கொடுத்து நடைமுறைப்படுத்திய பெருமை ஸ்ரீ நரஹரி தீர்த்தரையே சேரும். இதிலிருந்து நாம் ஸ்ரீ நரஹரி தீர்த்தர் இரு கலை வடிவங்களான யட்சகானா மற்றும் கந்தர்வ கானாவில் நிபுணர் ஆவார் என்பதை அறிகிறோம்.

நரஹரி தீர்த்தர் மூலமாக ஆந்திராவைச் சேர்ந்த மக்கள், இந்த நடன வடிவத்திற்காக நிறைய முயற்சி செய்து கர்நாடகத்திற்கு புகழைச் சேர்த்தனர்.

ஆதமாரு மடத்தின் பரம்பரையில் முதல் துறவியான (மூல புருஷர்) நரஹரி தீர்த்தர், ஸ்ரீ பத்மநாப தீர்த்தரிடம் விரிவான அனைத்து சாஸ்திரங்களையும் பயின்று ஹம்பிக்கு வந்து பலவிதமான சாதனைகள் புரிந்து குரு மற்றும் பரம குருவின் ஆசிகளோடு ஹம்பியில் ஒரு குன்றில் பிருந்தாவனத்தில் பிரவேசித்தார். அவர் ஸ்ரீ ஜகன்னாத தீர்த்தருக்கு சன்யாச ஆசிரமம் கொடுத்ததாக நம்பப்படுகிறது. குச்சுபுடி, யட்சகானா மற்றும் பயலாட்டம் ஆகிய கலை வடிவங்களுக்கான தந்தையாகத் திகழ்கிறார் என்று கூறினால் மிகையாகாது.

இசை, நடனம் மற்றும் உரையாடல் கர்நாடகத்தின் யட்சகானத்தின் ஒரு முக்கிய அங்கமாகும். இது பொதுவாக ஒரு வயலின் மத்தியில் ஒரு மேடையின் மேல் ஆடப்படுகிறது. கர்நாடக மொழியில் யட்சகானா, தொட்டாட்டா அல்லது மூடலபாயா என அழைக்கப்படும் இந்தக் கலை மக்களால் மிகவும் விரும்பப்படும் ஒரு பொழுதுபோக்கு.

I) **தொட்டாட்டாவின் சிறப்பு என்ன**? இது மூடலபாயா என்று அழைக்கப்படுகிறது. இதில் தாச சாகித்யத்தில் இருப்பது போல புராணக் கதைகளை அதிக அளவில் உபயோகப்படுத்திருப்பதை நாம் காணலாம்.

தோட்டாடத்தில் இரண்டு வகையான கலைஞர்கள் இருக்கிறார்கள். முன்னணி (மும்மேலா) மற்றும் பின்னணி (ஹிம்மேலா) என்று அழைக்கப்படுகின்றனர். மேடையில் பிரவேசிக்கின்ற பொழுது முன்ணனி நடிகர்கள் தனது சொந்த குரலில் பாடிக்கொண்டு வருவார்கள். ஆனால் பின்னணியில் பாடல் பாடிக்கொண்டிருக்கும் போது, முன்னணி நடிகர்கள் மேடையில் நடனமாடுவார்கள். நாடகத்தை முன் நின்று நடத்துபவர் சாரதி (தலைவர்) என்று அழைக்கப்படுவார். இசை மற்றும் வாத்தியம், இந்த நபரின் பாட்டு மற்றும் இடத்திற்கு ஏற்ப இருக்கும்.

அனைத்து நாடக நிகழ்ச்சிகளும் ஸ்ரீ விநாயகரை பிரார்த்தனை செய்த பிறகு தொடங்கும்.

சாரதி, ஒவ்வொரு மேடை நடிகரையும், நாடகத்தில் அவர் வகிக்கும் பாத்திரத்துடன் பார்வையாளர்களுக்கு அறிமுகப்படுத்துவார். ஒவ்வொரு நடிகரும்

அறிமுகப்படுத்தும் பொழுது அவரவர் பாத்திரத்திற்கு ஏற்ப சில வசனங்களை பேசுவர். அந்த நாட்களில் மேடை விளக்குகள், மற்றும் பெரிய பெரிய எண்ணெய் விளக்குகளை (தீப்பந்தம்) ஏற்பாடு செய்து நாடகத்தை நடத்தி வந்தனர். "மனோ ராயா" என்ற நாடகம் தொட்டாட்டாவில் மிகவும் புகழ் பெற்று இருந்தது.

II) **சன்னாடா**: இது யட்சகானத்தை தழுவிய ஒரு வகையான நடனம். சைவ மற்றும் வைஷ்ணவ மதத்தை பரப்புவதற்கு உருவாக்கப்பட்டது. இன்றைய நாட்களின் பெரும் பண்டிதர்களின் கருத்துப்படி இந்த வகை நடனம் முதன்முதலாக பெலகாவி மாவட்டத்திலும் அதன் சுற்றுப்புறத்திலும் தொடங்கப்பட்டது. இங்கே குறிப்பிடத்தக்க சில சூத்திரகள் (கணக்கீடுகள்) பயன்படுத்தப்பட்டு ஆடுபவர்களால் கட்டுப்படுத்தப்படுகின்றன. பழங்காலத்தில் இந்த வகை நடனம் "டப்பினாட்டா" என்று அழைக்கப்பட்டது. 19ஆம் நூற்றாண்டில் "சங்கியபால்ய" என்ற நடனத்தை இயற்றிய "பத்தர மாஸ்தர்" என்ற கலைஞர் மிகவும் பிரபலமாக போற்றப்பட்டார். யட்சகானா, நாட்டுப்புற நடனம், பாணியில் நடனம் ஆடுவது கண்களுக்கு ஒரு அரிய விருந்து.

III) **பாரிஜத ஆட்டம்**: சன்னாட்டத்தின் ஒரு வடிவமான இந்த பாரிஜத ஆட்டம், ஸ்ரீ கிருஷ்ண பாரிஜத ஆட்டம் என்று வைஷ்ணவ பிரிவினால் அழைக்கப்பட்டது. இதில் கதை எழுதிய எழுத்தாளர் மற்றும் பாத்திரத்தை வகிக்கும் நடிகர்களை மக்கள் "இத்தூத" என்று அழைப்பார்கள். முன்பே விளக்கப்பட்டுள்ளது போல், இந்த வகை நடனமும் விநாயகர் பிரார்த்தனையுடன் துவங்கும். பின்னணி மேளக்கார்கள் உடன் இரு பாடகர்களும் இருப்பார்கள். நடனத்தில் பங்குபெறும் ஒவ்வொரு "இத்தூதியையும்" அறிமுகப்படுத்தும் வழக்கம் உள்ளது. நாடகத்திற்கு இடையில், பாரம்பரிய மற்றும் புதுமையான பாடல்கள் கலந்து மேடையில் கலைஞர்களால் பாடப்படுகிறது.

எப்போழுதும், புராணக் கதைகளில் நடிக்கும் போது அசுரர்களின் பாத்திரம் இது போலவே இருக்கிறது. இந்த சன்னாட்டத்தில் அசுரர்களின் பாத்திரத்திற்கு மிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. காரணம், அவன் அப்படி இருப்பான் இப்படி இருப்பான் என்று ஊகிப்பதற்கு பதிலாக, நேரில் காண்பதற்கு உற்சாகம், அச்சம் போன்ற உணர்வுகள் சகஜமாக வரும். அந்தந்த பாத்திரத்திற்கு ஏற்ப வேடம், நடை, உடை மற்றும் ஒரு விசித்திரமான சப்தத்துடன் மேடைக்கு அழைத்து வருவதே மிகவும் மகிழ்ச்சியை தருவது, வேடிக்கையானது என்பது இங்குள்ள ஆராய்ச்சியாளர்கள் மற்றும் கலைஞர்களின் கருத்து. மேலும் விளக்குகள் மற்றும் தீவட்டியின் வெளிச்சத்தால் ஒரு துஷ்ட சக்தி வருகின்றது என்பதற்கு அடையாளமாக அசுரரை மேடையில் காட்டுகின்றனர் .

துஷ்ட மக்கள் எவ்வளவு மோசமாக இருந்தாலும் அவர்களை அழிக்க நாசம் செய்ய அனைவரிலும் சுதந்திரமான பரமாத்மா இருக்கிறார் என்பதை காட்டுவதற்காகவும், அந்த பரமாத்மாவின் பாத்திரத்திற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. பெரும்பாலான பயிலாட்டா நடன வடிவங்களில் இது ஒரு பொதுவான குறிக்கோளாக உள்ளது என்று சொன்னால் மிகை இல்லை.

யட்சகானா மனித வாழ்க்கைக்கு தேவைப்படும் திறனைக் கொடுக்கும் ஒரு மகத்துவமிக்க (பவ்ய) கலை, இதை பாதுகாப்பது மற்றும் வளர்ப்பது நமது கடமை. ஒருவேளை இது என் கடமையும்கூட என்று நான் நினைக்கிறேன். ஹரிதாசர்கள் இத்தகைய ஆழமான பாடல்களை யட்சகானத்திற்காகவே எழுதினார்கள் என்று தோன்றுகிறது. இவர்களின் பாடல்கள் இந்த பயலாட்டத்தில் ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது. இவற்றில் தெய்வீகம், பக்தி நிறைந்து இருக்கிறது. இது மக்களிடையே ஆன்மிக உணர்வைத் தூண்டுகிறது. இதன் காரணமாக யட்சகானத்தில் தாச சாகித்யம் ஒரு முக்கிய பங்கு வகிக்கிறது. கர்நாடக அரசாங்கத்தின் கலாச்சாரம் மற்றும் பாரம்பரிய துறை, இன்னும் பல அமைப்புகள், சத்சங்கங்கள் மற்றும் பல பெரிய கலைஞர்கள் இந்த கலையை தக்க வைத்துக் கொள்ள மிகவும் கடினமாக இரவு பகல் பார்க்காமல் வேலை செய்கிறார்கள். உதாரணமாக, 20ம் நூற்றாண்டில் பலர் திரைக்குப் பின்னால் இருந்து பிரசாரம் செய்துள்ளனர் என்று சொல்லலாம்.

1) டாக்டர் கோச்சா சிவராம காரன்தரர்
2) பேரா. கு. ஷி. ஹரிதாசபட்டர்
3) பேரா. எச். கிருஷ்ணபட்டர் போன்றவர்களை நாம் குறிப்பிடலாம்.
4) மணிபால் சங்கம், பாய்பந்துகளின் சங்கம், காரவல்லி சங்கம் மற்றும் பிற குழுக்கள்.
5) தேசிய இசை மற்றும் நடன மையம் இதற்கு குருகுல பாணியில் பாடத்திட்டங்களை நடத்துகிறது.

ஶ்ரீ வாதிராஜ மடத்தின் தலைவரான ஶ்ரீ விஸ்வோத்தம தீர்த்தர் 300க்கும் மேற்பட்ட மாணவர்களின் பயிற்சிக்கு உதவி அளித்துள்ளார். இது உண்மையிலேயே பெருமைப்பட வேண்டிய ஒரு விஷயம் மற்றும் ஒரு மைல்கல் என்று கூறலாம்.

இந்த கலையை தக்கவைத்துக் கொள்வதற்காக உடுப்பி அதமாரு மடத்தில் தங்கியிருந்த ஶ்ரீ வாதிராஜ மடத்தவர், உடுப்பி மாவட்டத்தின் ஹயக்ரீவநகரில் 'சிவபரபாலா சமுச்சயா' என்பதை நிறுவியுள்ளனர். இங்கு மத்திய தொழிற்சங்க அலுவலகம், நூலகம், அருங்காட்சியகம், பயிற்சி மண்டபம், சபா ஹால், சமையலறை, மாணவர் அறை, விருந்தினர் அறை போன்றவற்றை அதிக ஈடுபாட்டுடன் நிறுவி உள்ளனர்.

புரந்தரதாசரின் பாடல்களால் ஈர்க்கப்பட்ட இந்த கலை, சங்கீதக் கலைக்கு பெயர் போன தமிழ்நாட்டின் தஞ்சாவூர் அரசருக்கு மிகவும் பிடித்துப் போக அரசர் இந்த கலையின் வளர்ச்சியை ஊக்குவித்தார். இதை போல் மும்மாதி கிருஷ்ணராஜ உடையார், லிங்கராஜ மற்றும் முத்தன்னா போன்ற கவிஞர்கள் இந்த கலையின் சாரத்தை அனுபவித்துள்ளனர், இதனால் இந்த எளிமையான கலையின் பரம்பரையை ஒரு செயல்பாடுள்ள கலை என்று அழைக்கலாம்.

இந்த கலை பகவானிடம் (பரமாத்மாவிடம்) அன்பை வெளிப்படுத்த உதவுகிறது, இதனால் தான் 500 ஆண்டுகள் கடந்துவிட்டாலும் இந்த கலை இன்னும்

உயிரோட்டத்தோடு உள்ளது. மரியாதைக்குரிய ஸ்ரீ மத்வாசாரியாரின் ஆர்வம், ஸ்ரீ நரஹரி தீர்த்தரால் மேலும் சிறப்பாக வளர்க்கப்பட்டு, பின்னர் ஸ்ரீ வாதிராஜரால் ஊக்குவிக்கப்பட்ட இந்த யட்சகானா கலை, பார்வையாளர்களுக்கு ஒரு பெரிய விருந்து அளிக்கிறது.

ஹரிதாசர்களின் பாடல்களை கீர்த்தனை வடிவத்தில் அழகாக பாடலாம், அவர்களின் உகாபோகங்கள் கேட்க மிகவும் அற்புதமானது இது மட்டுமின்றி, இந்த கலைக்கு இந்த சாகித்தியம் என்று ஊகிக்காமல், நன்றாக பொருந்தி இருக்கிறது, இது தான் ஹரிதாச சாகித்யத்தின் மகிமை என்று கூறலாம்.

நாம் இந்தக் கலைகளைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்றால் மிகவும் நன்றாகப் பாடக்கூடிய பாகவதர்கள் தேவை. மறுபுறம் சம்பந்தப்பட்ட அரசு, அரசு அமைப்புகள், ஆராய்ச்சியாளர்கள் சேர்ந்து அத்தகைய பாகவதர்களைப் பயிற்றுவிக்கும் ஒரு பயிற்சி மையத்தை திறக்க வேண்டும். ஹம்பி மற்றும் உடுப்பியிலுள்ள பல்கலைக்கழகங்களில், இந்த கலைப்பயிற்சியின் துறைகளைத் திறந்தால், இந்தக் கலைக்கு ஒரு பெரிய முன்னேற்றத்தை கொடுக்க முடியும். கலையின் வடிவம் எதுவாக இருந்தாலும் அதன் உருவாக்கம் மற்றும் அழிவு, காலத்தின் கட்டுப்பாட்டில் உள்ளது. ஆர்வமுள்ளவர்கள் தங்கள் ஆர்வத்தை அதிகப்படுத்தி, மேலும் இக்கலைக்கு ஊக்குவிப்பதும் முக்கியமானது. இதனால் கூட ஒரு ஊட்டம் சாத்தியம்.

முன்பு விவரித்தது போல பாரிஜாத அட்டம் யட்சகானத்திற்கு மிகவும் முக்கியமானது. இந்த சாகித்யத்தை நிறுவிய பெருமை கோகாவி ஆனந்தாச்சார்யாரையே சேரும். அவரது வெங்கடேச பாரிஜாத ஆட்டம் நாடகம் மிகவும் புகழ்பெற்றது. இவர் 1776 முதல் 1840 வரையான காலப்பகுதியில், ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு முன் வசித்த ஒரு கவி, இந்த காவியத்தை நாட்டுப்புற நடனம் பாணியில் உருவாக்கியவர் என்பது பெருமைக்குரிய விஷயம். இந்த பாரிஜாத ஆட்டத்தில் சித்தாந்தத்தை விளக்குவது தவிர, பயலாடத்தை தழுவிய ஒரு சாகித்யம் என்ற பெருமை பெற்றது. பெலகாவி, பகல்கோட், மீராஜ், விஜயபுரா, கோலாப்பூர் ஆகிய இடங்களில் மக்களிடையே புகழ்பெற்று பின்னர் தேசிய மட்டத்தில் பெயர் பெற்றது என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

ஆனந்தாதீசருக்கு அகத்தூண்டுதலாக இருந்தது திம்மண்ண காவியம். ஸ்ரீமத் பாகவதத்திலிருந்து ஸ்ரீ கிருஷ்ணரின் வரலாறு மற்றும் ஸ்ரீ மத்வாச்சாரியாவின் த்வாதச ஸ்தோத்திரம் இரண்டையும் இணைத்து, ஸ்ரீகிருஷ்ணனின் கதையை மேடையில் முதலில் கொண்டு வந்த பெருமை இவரையே சேரும்.

இதற்குப் பிறகு

1) ஹனுமதிலாசா திப்பன்னாசார்யரின் படைப்பு (பாடல்)
2) குசேல உபாக்யானா
3) காலிங்க மர்தனம்

என பல படைப்புகள் வெளியிடப்பட்டன. இதை எல்லாம் யட்சகானாவின் படைப்புகள் என்றே நாம் அழைக்கலாம்.

கோகவி ஆனந்தாதீசர் பற்றி மேலும்:

வெங்கடேச கல்யாண காவியத்தை நிறுவியபோது, இந்த படைப்பு 1000 பதங்களால் ஆன ஒரு பெரிய மகாகாவியம் ஆனது. இந்த படைப்பில் 10 அத்தியாயங்கள் உள்ளன. வைகுண்டபதியான ஸ்ரீஸ்ரீநிவாசன் ஒரு வேடனின் (கிராதக) வேடத்தை தரித்து, அவரது தாயார் பகுலாதேவியிடம் உத்தரவு பெற்று வேட்டைக்கு புறப்பட்டார். வழியில் ஆகாசராஜாவின் தோட்டத்தில், அவர் வனஜாக்ஷியை கண்டு, அவர் வீட்டிற்கு தான் வந்தது போல் பேசினார், என்று புரந்தரதாசர் கூறியுள்ளார்.

பத்மாவதிக்கும் ஸ்ரீனிவாசனுக்கும் இடையே நடக்கும் உரையாடல் மிகவும் ரம்யமானது. இதுவே இந்த படைப்பின் மிக முக்கியமான அம்சமாகும். அற்புதமான காட்சிகளின் மூலம் அடுத்தடுத்து வரும் நிகழ்வுகளை விவரித்து பார்வையாளர்களை நன்றாக ஈர்ப்பதை தன் தலயாய கடமையாகக் கொண்டிருந்தார் என்பதை நாம் அறியலாம். இதனுடன் ஒரு உறுதியான பக்தியும் வசதியாக வளர்ந்தது.

யட்சகானாவை பயிலாடத்தின் அரசன் என்றும் அழைக்கிறார்கள் , ஏனென்றால் அது மக்களிடையே காவியத்தின் மேல் இருக்கும் ஆசையை விழித்தெழுப்பியது. இதன் மூலம் பொது மக்களிடையே பக்தியை ஊக்குவிக்க முடிந்தது. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னர் ராய்ச்சூர் மாவட்டத்தில் யட்சகானத்தின் பாணியில் பயலாட்டம் நிறுவப்பட்டது. ஆனால் யட்சகானாவை போல மக்கள் மத்தியில் அந்த அளவிற்குப் பிரபலமடையவில்லை.

யட்சகானத்தில் வரும் அனைத்து கதைக் களன்களும் ஹரிதாச சாகித்யத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஸ்ரீ ராமபாதுகா பட்டாபிஷேகம், கனகாங்கி கல்யாணம், சந்திரஹாசா கதை, பிரபாவதி பரிணயா, திரௌபதி சம்வாத, பாரதத்தின் கதை, ரம்பா விலாசம், ஷபரசங்கர விலாசம், ச்ருத கீர்த்தி ராஜனின் கதை, ருக்மாங்கதனின் சரித்திரம் போன்றவை புகழ்பெற்றவை.

யட்சகானத்திற்கு ஏற்ற பொருத்தமாக இருக்கும் பல பாடல் வரிகளை ஹரிதாசர்கள் நமக்காக விட்டுச் சென்றிருக்கின்றனர். எதிர்காலத்திற்காக இந்த கலையை பாதுகாக்க மற்றும் வளர்க்க வேண்டியது நம் அனைவரின் பொறுப்பு.

பாரிஜாத ஆட்டத்தின் பெயரில் ஆராய்ச்சியாளர்களின் கருத்துப்படி நூற்றுக்கும் மேற்பட்ட இலக்கிய வகைகள் உள்ளன, அவற்றில் சில கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

1) வெங்கடேச பாரிஜாத - கோகாவி ஆனந்தாதீசர்
2) பாண்டுரங்க பாரிஜாத - ஜகன்னாதா தாசர்
3) வெங்கடேச பாரிஜாத - கோபால தாசர்
4) ஸ்ரீஹனுமத் பாரிஜாத - விஜய பிரபுகளு
5) கீதா பாரிஜாத - ஸ்ரீ வ்யாச தீர்த்தர்

இதைப் போல நாம் அவற்றை பட்டியலிட்டுக்கொண்டு போகலாம்.

இவ்வாறு பல வகையான அனைத்து பயலாட்டத்திலும், ஸ்ரீ கிருஷ்ணரின் புகழ், லீலைகள் மட்டுமின்றி, ஸ்ரீ மத்வாச்சாரியரால் நிறுவப்பட்ட தத்வவாத சித்தாந்தத்தை பற்றி தகவலை வெளிப்படுத்தும் நோக்கமும் உள்ளது.

ஆராய்ச்சியாளர்களின் கருத்துப்படி யட்சகானத்தில் சுமார் 400க்கும் அதிகமான அத்தியாயங்கள் உள்ளன. அவற்றில் சுமார் 100 அத்தியாயங்கள் புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளன. மேலும் சில அத்தியாயங்கள் பனை ஓலைகளிலும், கையெழுத்துப் பிரதிகளாக உள்ளன. இன்னும் சில தலைமுறையாக அந்த பாடல்களைப் பாடுபவர்களின் மனதில் (வாயில்) இருக்கின்றன.

சேகரிக்கப்பட்ட புள்ளிவிவரங்களின்படி, இன்றும்கூட 30 முதல் 40 அத்தியாயங்களை பாடும் அனுபவமிக்க கலைஞர்கள் நம்மிடையே இருப்பதை நாம் காணலாம். இவைகளில் மோகினி பஸ்மாசுரா, இந்திரஜித்தின் காளகா, தேவி மஹாத்மை, பப்புருவாஹனா, அபிமன்யு காளகா, தான சூர கர்ணன், சைதம்வவதம், கிருஷ்ணார்ஜுனா காளகா ஆகியவை மக்களிடையே பிரபலமான நிகழ்ச்சிகள் என்று பெயரிடலாம்.

யட்சகானத்தின் முக்கிய அம்சங்களை நாம் பார்ப்போம்:

1) அலங்காரமான, விரிவான ஆடைகளை மற்றும் வேடம் காண்பதற்கு உண்மையில் உற்சாகமளிக்கிறது.

2) இலக்கியத்தின் சாரத்தை உடல் அபிநயம், சாரிமண்டலம் (மேடை அமைப்பு), கர முத்திரை (கை சின்னங்கள்) மற்றும் ரொச்சககளிந்தா (அதிர்ச்சியூட்டும் சத்தம் / குரல்கள்) மூலம் காட்டுவது மிகவும் முக்கியமான அங்கமாகும்.

3) பிரபலமான கிராமிய நாட்டுப்புற நடனம், காரணம் இந்த பிராந்தியங்களில் ஸ்ரீ நரஹரி தீர்த்தர் இதை பரப்பினார்.

4) புரந்தரதாசரின் பாடல்களின் உத்வேகத்தால், இது நாட்டுப்புற நடனத்தின் வடிவத்தை ஒத்திருக்கிறது.

5) பாடல்களைப் பாடும் பாகவதர்கள். இது போன்ற பாகவதர்களுக்குப் பயிற்சியளித்து பாடவைப்பது நமது பொறுப்பு. அரசாங்க நிறுவனங்கள் மற்றும்

சங்கங்கள் பாடுவதற்கு, அத்தகைய பாகவதர்களை உருவாக்குவதில் தங்கள் கவனத்தை திருப்ப வேண்டும். இது நிச்சயமாக இந்த கலையை தக்கவைக்க உதவுகிறது.

6) இப்படி இந்த கலைகளைப் பாதுகாத்து வளர்ப்பது நம்முடைய கடமையாகும். இப்படி இந்த கலையை நம் நாட்டிற்கு சொந்தமானது என்று இயற்கையாக வளர்க்க வேண்டும். அயல்நாட்டிக்கு ஒரு காட்சிப் பொருளாக காண்பிப்பதற்கு மட்டும் இதை உபயோகம் செய்யகூடாது, வளர்க்கக்கூடாது.

7) இந்தக் கலையில் பயன்படும் தாள மேளங்கள், தண்டங்கள் போன்ற கருவிகளை வாசிப்பவர்கள் மற்றும் தொழில்முறையாக உள்ள மேடைக் கலைஞர்கள், இதர கலைஞர்கள் இப்படி எல்லோரும் எந்த தயக்கமும் இல்லாமல் ஹரிதாச சாகித்யத்தில் தங்கள் திறமையை வளர்த்துக் கொள்ள வேண்டும். இதனால் மட்டும் இந்த கலையை மதிப்பாகவும் முறையாகவும் தக்கவைத்து கொள்ள முடியும்.

8) கர்நாடக இசையில் கமக அலங்காரத்திற்கு (அலங்கரிக்கப்பட்ட இசை குறிப்புகள்) முக்கியத்துவம் அதிகம். யட்சகானத்தில் லயம் மற்றும் தாளத்தை வடிவமைப்பதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. இந்த பாணி முக்கியமாக இசைக்கருவிகளின் தாளத்திற்கும், ஆட்டத்தின் தாளத்திற்கும் ஏற்றார் போல திட்டமிடப்பட்டுள்ளன.

9) நாட்டுப்புற நடனம் பாணியில் இருக்கும் யட்சகானா, சமுதாயத்தைத் தட்டி எழுப்பும் திறனைக் கொண்டுள்ளது. இப்படியாக அழகிய கலைகளில் இது உன்னதமான இடத்தைப் பெற்றுள்ளது.

10) உடுப்பியின் தேசிய கவிஞர் கோவிந்தா பாய் ஆராய்ச்சி மையம் (எம்.ஜி.எம். கல்லூரியின் ஒரு அங்கமாக) யட்சகான கலையை வளர்ப்பதற்காக உடுப்பியில் நிறுவப்பட்டது. இது 1971ம் ஆண்டில் நடைமுறையில் வந்தது.

11. a) சிவப்பிரபா கால சமுச்சாயா, ஹயக்ரீவ நகரா, உடுப்பி, சோதே வாதிராஜ மடத்தால் நிறுவப்பட்ட ஒரு காலா பவனம். இது தவிர சிறிய அமைப்புகள் உள்ளன.

b) மண்டர்திமாரன கட்டே, கமலஷிலே அம்ருத்தேஸ்வரி சவகுரு இந்த இரண்டு அமைப்புகளும் நன்கு அறியப்பட்டுள்ளன.

c) கடீல் மற்றும் தர்மஸ்தாலா தெங்குத்தீவில் மிகவும் பிரபலமான அணிகளாக உள்ளன.

d) கர்நாடகாவின் யட்சகானா சபை

e) மங்களதேவி யட்சகானா மண்டலி

f) மத்திய மஞ்சுநாதேஸ்வர குழு என்பவை சில குறிப்பிடத்தக்க அமைப்புகளாகும்.

யட்சகானா மற்றும் தாச சாகித்யத்திற்கு இடையே மிக நெருக்கமான சம்மந்தம் இருக்கிறது. தாசர்களின் நோக்கம் (ஸ்ரீ கிருஷ்ணரை நோக்கி பக்தி) இந்த யட்சகானாவின் மூலம் ஒவ்வொரு கிராமத்திலும் நிறுவப்பட்டது என்பது பெருமைப்பட வேண்டிய விஷயமாகும். பக்தியை வெளிப்படுத்த மிகவும் பயனுள்ளதாக இருந்தது.

ஹரிதாச சாகித்யம், புகழ்பெற்ற பெயர் சொல்லுபடியான ராமாயணம், பாகவதம், மகாபாரதம், 18 புராணங்ள் மற்றும் பல உபநிஷதங்கள் போன்ற ஸ்ரீ ஹரியுடன் தொடர்புடைய படைப்புகளிலிருந்து வரும் புண்ய புராண கதைகளை அடிப்படையாக கொண்டுள்ளன. இந்த சக்தியின் தாக்கத்தை கொண்டு, 500 ஆண்டுகள் கடந்து சென்றாலும், ஹரிதாச சாகித்யம் அதன் உற்சாகம் குறையாமல் இன்றும் நடப்பில் இருக்கிறது. தாச சாகித்யம் இன்று ஒரு வாழும் கலை என்றால், யட்சகானாவும் இன்று ஒரு வாழும் கலை என்று சொல்லுவதில் எந்த மறுப்பும் இல்லை.

இன்னும் சொல்லப் போனால் 22ஆம் தத்துவஞானி ஆன ஆசார்ய மத்வரின் ஆசிர்வாதம் இதற்கு இருந்தது. பின்னர் ஸ்ரீ நரஹரி தீர்த்தர் இந்த யட்சகானத்தை மேலும் வளர்த்தார். அவருக்குப் பின் வந்த வாதிராஜர், தானே பாடல்களை எழுதி, அதற்கு நடனமாடிக் காண்பித்தார். இப்படி இந்த யட்சகானத்திற்க்கு ஒரு சிறந்த பாரம்பரிய வரலாறு உள்ளது.

ஸ்ரீபாதராஜரின் அங்கிதம் ரங்கவிட்டலா, அதே ரங்கவிட்டலாவின் மேல் உள்ள ஆசையின் (பக்தியின்) காரணத்தால் இப்படி நான்கு வரிகளை எழுதுவதற்கு நான் ஊக்கம் பெற்றேன். இதிலிருந்து இந்த கலை மேலும் வளரவேண்டும் என்று நாம் விரும்புகிறோம். நான் எம்.ஏ. (கன்னடம்) படிக்கும்போது, 20 மதிப்பெண்களுக்கு இந்த பாரிஜாத பாடல் (கிருதி) இருந்தது. இதைத் தவிர வேறு எந்தப் சாகித்யத்தையும் என்னால் பாராட்ட முடியாது. யட்சகானா பற்றிய அறிவை நான் அப்போதுதான் பெற்றேன்.

ஒருமுறை சோதேக்கு சென்று சிர்சிக்கு திரும்பி வரும்போது, பேருந்து நிலையத்திற்கு அருகே யட்சகானாவை நடத்துவதற்காக ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்கள். 8 மணிக்கு ஆரம்பிக்க வேண்டிய நிகழ்ச்சி ஆரம்பிக்கவே இல்லை, எங்கள் பஸ் 10.30 மணியளவில் இருந்ததால் பார்க்க அவகாசம் இருந்தது, பிறகு ஒருவழியாக கணபதி துதியுடன் நிகழ்ச்சி தொடங்கியது. திரைச்சீலைகள் மேலே எழுப்பப்பட்ட அந்த நேரத்தில் சரியாக எங்கள் பேருந்து பெங்களூரை நோக்கி புறப்பட்டது.

சுமார் 1965-66ம் ஆண்டில் எங்கள் ஊரில் ஒரு குழு அதே ஆட்டத்தை நடத்தியது. அப்போது என் கவனம் அதில் ஈடுபடவில்லை. தொலைக்காட்சியில் 3 முதல் 4 அத்தியாயங்களை பார்த்திருக்கிறேன் அவ்வளவுதான். பெங்களூர் வித்யாபீடத்தில் ஒரு நிகழ்ச்சியை நான் பார்த்திருக்கிறேன்.

யட்சகானா பொதுவாக இரவு நேரங்களில் நிகழ்தப்படுகிறது. செண்டை மேளத்திலிருந்து வரும் நாதம் / ஒலி மிகவும் அமோகமாக இருக்கும். பாடல்களைப் பாடும் பாகவதர்களின் வெண்கலக் குரல் மிகவும் முக்கியமானது. கண்டிகார சேஷகிரி பாகவதர் இந்த கலையில் பிற்காலத்தில் தனது பெயரை முத்திரை குத்தினார். கராவலியின் யதீஸ்வரர், பகவானின் நாமஸ்மரணையை அனுசந்தானமாக கொண்டு மற்றும் யட்சகானத்தின் முலமாக இறைவனுக்கு சேவை செய்வதில் மிகவும் புகழ் பெற்றவராவார்.

பக்தியால் முக்தி பெற முடியும் என்பதை நிரூபித்து, கற்பித்தவர் ஆசாரியர் மத்வராவார் . இந்த உக்தியை அனுசரித்து நிஸ்சலமான பக்தியே "அமலா பக்திஷ்ச தத் சாதனம்" யட்சகான கலை அமைப்பின் முன்னுரையாகும். ஆனாலும், பாகவதர்களுக்கு எந்த விதமான பெருமையும் முக்கியத்துவமும் கொடுக்கப்படவில்லை. தமிழ்நாட்டில் பாகவதர்கள் என்று அழைக்கப்படும் பல வித்வான்களை நாம் காணலாம்.

1) 1684 இல், தஞ்சாவூர் போஸ்லே வம்சத்தை சேர்ந்த அரசர்கள் இந்த கலைக்கு ஊக்கமளித்தனர்.

2) சுமார் 1728-1736ம் ஆண்டுகளில் இருந்த துளஜாஜி ஒரு புகழ் பெற்ற இசைக் கலைஞர், சிறந்த வாய்ப்பாட்டு கலைஞர், நாடகக் கலைஞராக இருந்து "சங்கீத சாராம்ருதம்" என்ற ஒரு சமஸ்கிருத இலக்கியத்தை எழுதினார். இவர் ஸ்ரீ வியாசராஜரை அவரது ஆத்மகுருவாக ஏற்று, அவரே இவரை வழிநடத்துகிறார் என்று தெரிவித்தார்.

3) 1669-1734 இல், ராஜா ரகுநாயக அரசரின், அரசவையில் கோவிந்த தீட்சிதர் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பாகவதராக திகழ்ந்தார். அவர் நிறைய இலக்கியங்களை எழுதி, புகழ் பெற்றிருந்தார். "சங்கீத சுதா" என்ற நாட்டுப்புற நாடகத்தை எழுதி அரசருக்கு சமர்பித்தார்.

4) யட்சகானா என்பது பகவான் ஸ்ரீ விஷ்ணுவின் மஹிமைகளை விவரிப்பதற்கும் மற்றும் பகவானிடம் அன்பையும் பக்தியையும் வெளிப்படுத்தவும் உருவாக்கப்பட்ட ஒரு மிக பெரிய ஏற்பாடு என்று கூறுவதில் எந்த சந்தேகமும் இல்லை.

5) பிராந்திய வாரியாக வேறுபாடுகள் இப்படி உள்ளன, 1) மூடலபாயா யட்சகானா 2) படுவலபாயா யட்சகானா 3) பயலாட்டா / பயலு நாடக அல்லது தசாவதார ஆட்டா.

6) "கிராம மக்கள் கலை" என்ற அடையாளத்தைக் கொண்டிருந்த இந்த யட்சகானா, 20 ஆம் நூற்றாண்டில் அனைத்து கலைத் துறைகளின் வித்வான்களும் கௌரவிக்கும்படி செய்த மனிதர் மரியாதைக்குரிய சிந்தனையாளர் டாக்டர். சிவராமகாரந்தகரே ஆவார் என்றால் மிகையாகாது.

யட்சகானத்தில் உணர்ச்சி ரசத்தை வெளிப்படுவது மிகவும் முக்கியமாக கருதபட்டது. யட்சகானா நாட்டுப்புற பாடல்களின் ஒரு கிளை ஆகும் (சாஸ்திரப்படி வாய்வழியே வந்திருப்பது).

இங்கு பயன்படுத்தப்படும் ராகங்கள் கேதாரகௌளை, காம்போஜி, கமாஜ், ஹம்சத்வனி, அடாண, ஆரபி, தேவகாந்தாரி, கேதாரகௌளை, புன்னாகவராளி, சஹானா, நாதனாமக்ரியா, சிந்துபைரவி. ஆஹிரி, முகாரி முதலானவை. சாரங்கா, ஹிந்துஸ்தானி, சாரங்கா பெஹாக், தோடி, வராளி, சாமா தன்யாசி, நீலாம்பரி, காபி, மோஹனா, பிலஹரி இப்படியாக பல ராகங்களின் பயன்பாட்டை அன்பு, அழகு, சிரிப்பு, கருணை, வீரம், பயம், வெறுப்பு, சாந்தம், ஆச்சரியம், பக்தி, வாத்சல்யம், உற்சாகம் மனமகிழ்ச்சி போன்ற ரசங்களில் பாடுவதை நாம் பார்க்கலாம்.

டாக்டர் கே. எம். ராகவன் நம்பியார் யட்சகானத்தில் அவரது ஆராய்ச்சி ஆய்வு எழுதியுள்ளார்.

யட்சகானத்திற்கு என்ன நடக்க வேண்டும்?

1) ஹரிதாச சாகித்யத்தை ஆதரிக்கும் வகையில் மக்கள் யட்சகானத்தை படைக்க வேண்டும்.

2) ஹனுமத் விலாசம் யட்சகானா கலையே ஆகும் என்பது கவிஞர்களின் கருத்து, அதன்படி அது மேடையில் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

3) ஹரிதாச படைப்புகளான சந்திரஹாச சரித்திரம், சீதா சுயம்வரம், கஜேந்திர மோட்சம், சங்கர கௌடாவின் பாடல், கிரியம்மாவின் உத்தாலிக கதை ஆகியவற்றை பயன்படுத்த வேண்டும்.

4) யட்சகானத்தின் மட்டில் மக்கள் விரும்பி நடைமுறையில் பயன்படுத்த வேண்டும்.

அது மட்டுமல்லாமல், வாதிராஜரின் லட்சுமி சோபானம், வைகுண்ட வர்ணனை, கனகதாசரின் மோகன தரங்கிணி, ஸ்ரீபாதராஜரின் ப்ரமரகீதை, மோகனதாசரின் கோலு பாடல், குமாரவ்யாசனின் மகாபாரதத்தின் பல அத்தியாயங்கள், புரந்தரதாசரின் சுதாமா சரித்திரம், கஜேந்திர மோட்சம், திரௌபதியின் வஸ்த்ராபரணம் ஆகியவற்றில் சத்தீஷ் கெட்லாயா போன்ற 100க்கும் அதிகமான மக்களை பயிற்றுவிக்க வேண்டும். விழாக்களில் ஆடுபவர்களை பயிற்றுவிப்பதோடு, வேஷம், உடை, கதை போன்றவற்றில் மூல கூறுகளுக்கு (வேர்களுக்கு) ஒரு கேடும் வராமல் நவீனத்தை கலந்து பயிற்றுவிக்க வேண்டும்.

தாசர பதங்களில் காணப்படும் சமூக நலன், நீதி, சமூக ஒழுக்கம், நடத்தை, புரிந்துகொள்ளுதல் போன்ற அம்சங்களை யட்சகானத்தில் பயன்படுத்த வேண்டும்.

இதன் மூலம் சமூகத்தில் மக்களிடம் ஒரு விழிப்புணர்ச்சியை எழுப்ப முடியும். ஹரிதாசர்களின் வாழ்கை, சாதனை, போதனை இவைகளை யட்சகானத்தின் மூலம் வெளிச்சத்திற்குக் கொண்டு வர வேண்டும், மேலும் சமயோசித மற்றும் வெளிவராத ஓலைகள், கையெழுத்துப் பிரதிகளில் இருக்கும் சாகித்யத்தை வெளிச்சத்திற்குக் கொண்டு வர வேண்டும். நாம் இன்னும் இதைப் பற்றி சிந்தித்து ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

பாலிஸோ பண்டரி புரிரேயா ! பாவன காயா
பீமரதி குலநிலய ! பாலிஸோ புண்டரிகாயா

என்று துவங்கும் பாண்டுரங்க பாரிஜாதவில், ஸ்ரீஜகன்னாத தாசர், தொடர்ந்து

தருணதுளசி மாலா ! தப்ப காங்கேயசேலா
ஷரதி தனய லோலா ! ஷக்வரி காரிபாலா
ஸ்ரீ அஜபவ மாலா ! சுத்த காருண்யலீலா
புரஹர சுப லீலா ! பாஹி கோபால பாலா

இப்படியாக பாடுகிறார். ஸ்ரீஹரியை தரிசித்த தருணத்தை வர்ணிக்கிறார். பண்டரிபுரத்தில் இருக்கும் பாண்டுரங்கன், தூய சரீரத்தைக் கொண்டவன், பீமரதி நதிக்கரையில் இருப்பவன், பண்டரிபுரத்தை தனது இருப்பிடமாகக் கொண்டிருக்கும் ஸ்ரீஹரி. அனைத்து உயிரினங்களுக்கும் மூல காரணமாக இருப்பவனே, கருணா மூர்த்தியே, கோபாலகர்களான இடையர்களை காப்பாற்றுபவனே என்று 9 பத்திகளில் இறைவனை பாடும் ஜகன்னாததாசரின் இந்தப் பாடல், யட்சகானத்திற்கென்றே இயற்றிய பாடலாகும்.

திப்பண்ணார்ய அவர்கள் இயற்றிய ஹனுமவிலாஸ் காவியத்திலிருந்து:

அனுமனைக் கண்ட ராவணன், அவரிடம் பேசிய அந்தக் காட்சியை கவி இப்படியாக வர்ணிக்கிறார்.

நீனாரை வானர வீரனே
மௌனவேதகே நுடி - ரண சூரனே
மஹா தீரனே - கோரகாரனே (பல்லவி)

எல்லிந்தா நடெதந்தே, இல்லிகேதக்கே பந்தே
இல்லிந்த பயணவெல்லிகே முந்தே
ஏதகே நிந்தே, தைத்யர கொந்தே
பல்லிதனு நீனாதடப்ரதி
மல்லனாதேமிந்த்ரஜித்தன்ன
ஹுல்லு பாணக்காகி சிலுகிதே
க்ஷுலகன பரி நிமிஷமூத்ரத் ||1

இருவுதாவதேச தரணியொளெல்லி நிவேச
ஷரதீயனெந்து தாண்டித கேஷெ
புரஹர ஸ்ரீச பிரம்ம சுரேச
கருட முக்யரு போகலரியரே
புரவ நாவந்ததலி பொக்கலு
திருகிபோகே சமர்த்தனிந்த்ரஹே
மருஹனாதேயோ மருள தரளனே ||2

இப்படியாக போகும் பாடலில் மேலும்..

வானர நோர்வன பிடிது வாலவனு வை
ஷ்வானகனிந்த உருஹி புரதொளகெத
ஷானன மெரெசுவனெந்து த்ரிஜடியொளு
தான வியோர்வளு சுருதிரலத கேளி
ஜானகி சிந்திஸிவன்ஹி சூக்தவ நிஜ
மானசதல்லி த்யானத மாடல நிலன
சூனு சந்தனல்லிப்ப தேஹ நாகுதபர
மானந்த சாந்த்ரனாகுத முப்புரகளனே
ஷானனுருஹிதந்தே பக்திகண்டன புர
ஹீனாலங்காரவ மாடி நீரதியொளு
ஸ்னானவ மாடி பேக - சீதாதேவி
யேனாதளெனுத லாக - சிந்திசி, பந்து
மானினி மணெயராகி நித்வதி கண்டு
தானாலங்கெய ஷிகிகாஹுதியனித்து
வைனவெல்லவ திளுஹிவனு கா
த்ரீன்யைசிம்ஹன தீச மாருதி ||

இப்படி பல ராகங்களில், ஒரு ராகமாலிகையாக பாடும்போது, யட்சகானமானது கேட்பதற்கும் / பார்ப்பதற்கும் மிகவும் அருமையாக இருக்கும் என்பதில் சந்தேகமேயில்லை. இப்படிப்பட்ட அபூர்வமான பாடல்கள் மற்றும் இன்னும் மக்களிடையே பிரபலமாகாத வசன காவியங்கள், பொதுவெளியில் நாடக அரங்கத்திற்கு வரவேண்டும் என்பதே எமது ஆசையாகும்.
ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து
***

# மாத்வ சம்பிரதாயத்தில் அசம்பிரதாயங்கள்

2011ம் ஆண்டு வெளியிடப்பட்ட புத்தகம்
கன்னடத்தில் : ஹரதி பிரகலாத்தாச்சார்
தமிழில் : 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்




கன்னடத்தில் 'சாதனே' என்பதை தமிழில் சாதனை அல்லது நற்செயல்கள் என்று மொழி பெயர்த்திருக்கிறேன். அவ்வாறே நினைவில் இருத்திக்கொண்டு மேற்கொண்டு படிக்கவும்.

**சிஷ்யர்**: குருவே, சாதனை / நற்செயல்கள் என்றால் என்ன? தயவு செய்து சற்று விளக்கவும்.

**குரு**: 'பகேகாணே என்னபஹுதே?' (BagekaaNa Ennabahudhe?) என்பது ஹரிதாசர்கள் வாக்கு.

சாதனை என்பதற்கு பல அர்த்தங்கள் உண்டு. நாம் நம் சித்தாந்தத்தின் வழிமுறைகளுக்கேற்ப பார்க்கவேண்டும்.

**சிஷ்யர்**: அப்படியென்றால், நம் சம்பிரதாயப்படி சாதனை என்றால் என்ன? எதுவெல்லாம் சாதனை? எதுவெல்லாம் சாதனை இல்லை?

**குரு**: தெரிந்து கொள்ளவேண்டும் என்று நீ கேட்ட இக்கேள்வியே ஒரு சாதனை (நற்செயல்) தான். விடை கிடைத்தபிறகு, அவ்விடையை ஆராய்ந்து, அதன்படி நடப்பதும் ஒரு சாதனைதான்.

**சிஷ்யர்**: சரியாகப் புரியவில்லை குருவே. சிறிது விளக்கவும்.

**குரு**: காலை எழுந்தது முதல், இரவு படுக்கப் போகும் வரை செய்யும் வேலைகள், எப்படி பொழுது போக்குகிறோம் - இப்படி அனைத்திலும் சாதனை செய்யவேண்டும். அதையும், அனைத்து செயல்களையும், ஸ்ரீஹரியின் நினைவுடன், அவனுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும். அதுவே சாதனையின் விதி.

1. விடியலில் எழுந்து கொள்வது ஒரு நற்செயல். எழுந்ததும், முகத்தைக் கழுவிக்கொண்டு, துளசிச் செடிக்கு நீர் ஊற்றி, அதிலிருக்கும் மிருத்திகையை எடுத்து நெற்றியில் பூசிக் கொள்ள வேண்டும்.

2. பிறகு, பசு & நவக்கிரக தேவதைகளை நினைத்துக் கொண்டு, ஸ்நானத்திற்குச் செல்ல வேண்டும்.

3. சங்கல்பம் செய்து கொண்டபிறகே ஸ்நானம் செய்ய வேண்டும். சங்கல்பம் செய்யாமல் ஸ்நானம் செய்தால், அந்த ஸ்நானத்திற்கு பலன் இல்லை. முக்கியமான செய்தி: எந்தெந்த வேலைகளைச் செய்தால் எவ்வளவு புண்ணியம் வரும், எவ்வளவு பாவம் வரும் என்று தெரிந்து கொள்வதற்கு எந்த வழியும் இல்லை. ஆனால், மனிதன் தான் வாழும் காலத்தில் நற்செயல்களையே செய்ய வேண்டும். நற்செயல் செய்யும்போது ஸ்ரீஹரியின் நினைவு இல்லாமல் செய்தால், பாவம் வந்து சேரும். ஸ்ரீஹரியை நினைத்தவாறே செய்தால், புண்ணியம் என்பது ஞானிகளின் வாக்கு. அதுமட்டுமல்லாமல், எந்தச் செயலை செய்தாலும், நமக்கு நல்லதே நடக்கும் என்ற நம்பிக்கையுடன் செய்ய வேண்டும்.

4. மூன்று வேளையும் சந்தியாவந்தனம், ஜபம், பாராயணம் செய்ய வேண்டும்.

5. தேவர பூஜை கட்டாயம் செய்ய வேண்டும். இதைச் செய்யவில்லையெனில், பாவம் வந்து சேரும்.

6. பூஜை முடிந்த பிறகு, நைவேத்தியம், வைஸ்வதேவம் & ஹஸ்தோதகம் செய்ய முயற்சிக்க வேண்டும்.

7. மனதை நம் கட்டுப்பாட்டில் வைக்க வேண்டும் (வைத்து மேற்படி பூஜை செய்ய வேண்டும்).

8. இப்படி செய்யாமல், மனம் போன போக்கில் (பூஜை செய்யாமல்) இருந்தால், பாவம் வந்து சேரும்.

9. விடுமுறை நாட்களிலாவது மூன்று வேளை சந்தியாவந்தனம், பூஜை, நைவேத்தியம் இவற்றை கட்டாயம் செய்ய வேண்டும். இவையே புண்ணியம் சேர்ப்பதற்கான வழி.

10. பகவானின் கதைகளை தினந்தோறும் சிறிது நேரமாவது கேட்க வேண்டும்.

11. ஞானகார்யங்கள் (ஹோமம், உபன்யாசங்கள்) எங்கு நடந்தாலும் அங்கு கட்டாயம் போய் பங்கேற்க வேண்டும். உபன்யாசங்களைக் கேட்பதே நற்செயல் ஆகும். நம்மில் பலருக்கு இந்தப் பழக்கமே இல்லை. இதை வளர்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

12. சமயம் கிடைக்கும்போதெல்லாம், நம் மடத்தைப் பற்றி, நம் சித்தாந்தத்தைப் பற்றி, நம் சம்பிரதாயங்களைப் பற்றி, நம் குரு பரம்பரையைப் பற்றி, தகுதியானவரிடமிருந்து அறிந்து கொள்ள வேண்டும்.

13. நம் சம்பிரதாயத்தின் சின்னங்களை (கோபிசந்தனம், அங்கார & அக்ஷதை) தவறாமல் இட்டுக் கொள்ள வேண்டும். அவற்றை இட்டுக் கொண்டவர்களை பார்த்து பரிகாசம் செய்வது பாவச் செயலாகும்.

14. நேரம் கிடைக்கும்போதெல்லாம் தீர்த்த யாத்திரை செய்ய வேண்டும்.

15. திருமணம், உபநயனம், சிரார்த்தம், ஆராதனை ஆகிய நிகழ்ச்சிகளில் பங்கேற்பதும், அவற்றிற்கு உதவி புரிவதும் நற்செயல்.

16. மேற்படி விஷயங்களை நாமே செய்வது (ஆராதனை, பஜனை) மிகவும் உத்தமமான செயலாகும்.

17. கோபிசந்தனம், ஸ்ரீ வாதிராஜரின் மிருத்திகை, சந்தனம், அங்கார, அக்ஷதை இந்த சின்னங்களை இட்டுக் கொள்வது வைஷ்ணவ சித்தாந்தத்தின் விதிகள் ஆகும். பின்பற்ற வேண்டியது அவசியம்.

18. சாலிகிராமம், தந்தை, தாய், குரு, துளசி, நதி, கடல், அரச மரம் - இவர்களுக்கு மிகவும் மரியாதை கொடுத்து, இவர்களில் கடவுள் பிரத்யட்சமாக இருக்கிறான் என்று தெரிந்து கொள்வது அவசியம்.

19. சட்டை, ஜிப்பா இவைகளை விட்டு, துண்டு (உத்தரியம்) போர்த்திக் கொண்டு உணவு உண்ணல் வேண்டும். இதை மூன்று மடத்து மக்களும் பின்பற்ற வேண்டியது அவசியம்.

20. இறைவன், தர்மம், சம்பிரதாயம், (ஹரி, வாயு) குருகளிடத்தில் நம்பிக்கை வைத்திருப்பது மிகவும் உத்தமமான செயல்.

21. நைவேத்தியம் இல்லாத உணவை உண்டால், பாவம் வந்து சேரும்.

22. சட்டை, பேண்ட், பனியன் ஆகியவற்றை அணிந்து உணவு உண்ணுதல், மேஜை மேல் அமர்ந்து உண்ணுதல் - இவை நரகப் பிராப்தி தரும் பாவச் செயலாகும்.

23. பள்ளி, கல்லூரி, அலுவலகம், கோயில் இவற்றிக்குப் போகும்போது / வரும்போது, ஸ்ரீகிருஷ்ணரை நினைத்தவாறே இருக்க வேண்டும். ஓம் பூர் புவஸ்வ: தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோயோன: பிரசோதயாத் - என்று எந்நேரமும் ஜபித்தவாறே இருக்கவும். இதுவே உத்தமமான செயலாகும்.

24. நேரம் கிடைக்கும்போதெல்லாம் நம் தர்மம், கர்மம் மற்றும் மடத்தைப் பற்றி அதிக விவரங்களை தெரிந்து கொள்வது மிகவும் முக்கியமான செயலாகும்.

25. வாழ்க்கையில் சந்திக்கும் பல மனிதர்களை உற்றுப் பாருங்கள். அவர்கள் செய்யும் நற்செயல்களை கவனியுங்கள். இது அவர்களுக்கு மட்டும் எப்படி சாத்தியம்? எப்படி செய்கிறார்கள்? எனக்கு ஏன் செய்ய முடியவில்லை? எப்படி செய்வது? என்று எண்ணி, சரியான விஷயங்களை மட்டும் செய்யத் தொடங்குங்கள். நாம் செல்லும் வழிக்கு இதுவும் முக்கியமான செயலாகும்.

26. நாம் உண்ணும் சமையல் முழுவதும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க முடியாமல் போனாலும், குறைந்த பட்சம் ஒரு சிறிய அளவில் அன்னத்தை வைத்து, சந்தியா / பூஜை வேளையில், அதை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கவும். அந்த அன்னத்தை உணவில் சேர்த்துக் கொள்ளவும். மனமிருந்தால், இது அனைவருக்கும் சாத்தியமே. இது ஒரு பெரிய நற்பலன்களைக் கொடுக்கக்கூடிய நற்செயல்.

27. நம் முன்னோர்கள், தாசர்கள், பீடாதிபதிகள் நமக்கு அளித்திருக்கும் நல்ல விஷயங்களைப் (புத்தகங்கள், பாடல்கள், ஸ்தோத்திரங்கள் ஆகியன) பற்றி நினைத்துப் பாருங்கள்.

28. அவர்களின் கிரந்தங்களைப் படியுங்கள், பாடல்கள், ஊகாபோகங்கள், சூளாதிகளை தெரிந்து கொள்ளுங்கள், கற்றுக் கொடுங்கள்.

29. விஷயம் தெரிந்தவர்கள் யாரேனும் அருகிலிருந்தால், உங்களுக்கு இருக்கும் சந்தேகங்களைப் போக்கிக் கொள்ளுங்கள். தெரியாதவற்றைக் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள். அவற்றில் உள்ள கருத்துக்களை புரிந்து, நடைமுறைக்குக் கொண்டு வரமுடியுமா என்று பாருங்கள்.

30. சிறிய (மாத்வ சம்பிரதாயத்தில் வராத) கடவுளர்களுக்கு நமஸ்காரம் செய்ய வேண்டாம்.

31. சிறிய கடவுளர்களுக்கு சமர்ப்பிக்கப்பட்ட நைவேத்தியம், ஆகாரம் ஆகியவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டாம்.

32. எல்லா (சிறிய) கடவுள்களும், ஸ்ரீஹரி ஆக முடியாது. எல்லாம் அவன் நைவேத்தியம் ஆக முடியாது. இதை அறிந்து கொள்ளல் மிக அவசியம்.

33. எனக்கு எதுவும் தெரியவில்லை, புரியவில்லை என்பவர்கள், ஸ்ரீ ராகவேந்திரரின் படத்தை வைத்து, அவரை தினமும் வணங்கி வந்தால், அவர் கண்டிப்பாக வழிகாட்டுவார்.

34. வெட்டியாக பொழுதை கழிக்க வேண்டாம். யமராஜன் எப்போழுது வருவான் என்று யாருக்கும் தெரியாது. தொலைக்காட்சி பார்த்தவாறு காலத்தைக் கழிக்க வேண்டாம். இது பாவத்தை சம்பாதிக்கும் செயல்.

35. நாய் வளர்க்க வேண்டாம். அதற்கு செலவாகும் பணத்தை, கோசாலை இருக்கும் இடத்தில் கொடுத்து விடுங்கள். பசுவைக் காப்பற்றியதற்கான புண்ணியத்தில், வைதரிணி நதியை சுலபமாகக் கடக்க முடியும்.

36. நாய் வளர்த்து வந்தால், அது நரகத்திற்கே வழி வகுக்கும். இதைத் தவிர, அடுத்த ஜென்மத்தில், நாமும் நாயாகவே பிறக்க நேரிடும் என்பதையும் சொல்ல வேண்டியதில்லை.

37. மனதை விட பெரியது எதுவும் இல்லை. நமக்கு மனம் இருந்தால், சன்மார்க்கத்தில் ஈடுபட முடியும்.

38. 3 வேளை சந்தியாவந்தனம் செய்ய முடியவில்லையெனில், 2 வேளையாவது செய்யவும். 2 வேளை, முடியவில்லையெனில், 1முறையாவது செய்யவும். அதுவும் முடியவில்லையெனில், மும்முறை அர்க்யம் & 10 காயத்ரி மந்திரத்தை உச்சரிக்கவும்.

39. தற்போது 1முறை சந்தியாவந்தனம் செய்பவர்கள், 2 முறை செய்யவும். 2 முறை செய்பவர்கள் மும்முறைக்கு முயற்சிக்கவும். இவை, ஸ்ரீகிருஷ்ணா வங்கியில் பணத்தைப் போட்டு வைப்பதைப் போல், வளர்ந்து வரும்.

40. 1முறை சந்தியாவந்தனம் செய்பவர்கள், 12 அர்க்யம் & 32x3=96 முறை காயத்ரி ஜபம் செய்யுங்கள்.

41. ஸ்நானம் செய்யும்போது நீர் - ஜடம். நாமும் ஜடம். அதனால், ஜடாபிமானி

சங்கர்ஷண ரூபியாகிய ஹரியை நினைக்கவும். அவனுக்கு ஸ்நானம் செய்கிறேன் என்று நினைத்துக் கொள்ளவும். நல்ல பலன் கிடைக்கும்.

42. ஸ்ரீஹரிக்கு தீபம் ஏற்றும்போது, அதில் அவனின் 13 ரூபங்கள் உள்ளன என்று நினைத்துக் கொள்ளவும்.

43. ஸ்ரீ துளசியை சமர்ப்பிக்கும்போது, அதில் ஸ்ரீஹரியின் 5317 ரூபங்கள் உள்ளன என்று நினைத்துக் கொள்ளவும்.

44. பூக்கள் சமர்ப்பிக்கும்போது, அதில் ஸ்ரீஹரியின் 161 ரூபங்கள் உள்ளன என்று நினைத்துக் கொள்ளவும்.

45. நல்ல பூக்களை சமர்ப்பித்தால், நல்ல பலன் கிடைக்கும். பழைய / அழுகிய பூக்களை சமர்ப்பித்தால், அதற்கேற்ற பலனே கிடைக்கும்.

46. சமர்ப்பிக்கத் தகுந்த பூக்கள் : மல்லிகை, ஜாதி, செவ்வந்தி, அலரி, சம்பங்கி, தவனம், குலாபி, பாரிஜாதம், நந்தியாவட்டை, மரு, மனோரஞ்சிதம், சங்க புஷ்பம் ஆகியவை.

47. சமர்ப்பிக்கப் படக்கூடாத பூக்கள்: சாமந்தி, எருக்கம்பூ ஆகியவை.

48. இதைப் போலவே செடிகளிலும் சமர்ப்பிக்கத் தகுந்த பூக்களையே வளர்க்க வேண்டும்.

49. யாருக்கு நைவேத்தியம் செய்கிறோமோ, அவருக்குள் பிம்ப ரூபியாக (அந்தர்யாமியாக) இருக்கும் ஸ்ரீஹரிக்கே நைவேத்தியம் செய்கிறோம் என்ற சிந்தனை வரவேண்டும்.

50. ஸ்ரீஹரி, சாலிக்கிராமத்தில் 5535 ரூபங்களில் இருக்கிறார்.

51. ஸ்ரீஹரி, பிரதிமைகளில் 513 ரூபங்களில் இருக்கிறார்.

52. ஸ்ரீஹரி, தண்ணீரில் 24 ரூபங்களில் இருக்கிறார்.

53. ஸ்ரீஹரி, சந்தனத்தில் 403 ரூபங்களில் இருக்கிறார்.

54. பூஜைக்குப் பயன்படுத்தும் பொருட்களில் (பாத்திரங்களில்) ஸ்ரீஹரி 52115 ரூபங்களில் இருக்கிறார்.

55. வீட்டில் இருக்கும் ஸ்ரீஹரிக்கு (சாலிக்கிராமத்திற்கு) ஐந்து கிராம்'ல் தங்க ஆபரணம் செய்து அணிவிப்பது சிறப்பு.

56. 'நான்' என்னும் அகங்காரத்தை விட்டு, 'நீ' (ஸ்ரீஹரி) என்னும் சிந்தனை மிகவும் நல்லது.

57. ஸ்ரீஹரியின் ரூபங்கள் பல உள்ளன. ஆகையால், அவை எல்லாவற்றிலும் அவன் வேறு வேறாக (தனித்தனியாக) உள்ளான் என்று நினைக்கக்கூடாது.

58. பகவானின் எல்லா ரூபங்களும் ஒன்றே என்பது நற்சிந்தனை. மூலரூபியாத ஸ்ரீலட்சுமி நாராயணனே, கிருஷ்ணன், நரஹரி, பஸ்சிம ரங்கனாதன் என்று பல ரூபங்கள் எடுத்துள்ளான் என்று தெரிந்து கொள்வது மோட்சத்திற்கான சாதனை.

59. ஸ்ரீஹரியின் மூல பிரதிமைகளைப் பார்க்கும்போது, 'முக்யப்ராணாந்தர்கத ஸ்வபிம்பனாத ஸ்ரீஹரி' என்று நினைத்து நமஸ்கரிக்க வேண்டும்.

61. நாம் உண்ணும் உணவு, குடிக்கும் நீர், குளிக்கும் தண்ணீர் இவை அனைத்தும் நம் இதயத்தில் அந்தர்யாமியாக இருக்கும் ருத்ராந்தர்கத, முக்யப்ராணாந்தர்கத ஸ்ரீஹரிக்கு நைவேத்தியம் என்று சமர்ப்பணம் செய்யுங்கள். மனதிற்கு மிகவும் ஆனந்தம் அளிக்கும் செயலாகும் இது.

62. வெயில், மழை, காற்று, குளிர் ஆகிய காலங்களை திட்டக்கூடாது. அந்த காலங்களில் ஸ்ரீஹரியின் மகிமைகளை நினையுங்கள். அதுவே புண்ணியம். அவற்றைத் திட்டினால் பாவம் வந்து சேரும்.

63. கர்வத்தை அழித்தவர்கள் மகா யோகி எனப்படுவார்கள். ஆகவே கர்வத்தை விட்டொழிக்க முயலுங்கள். கர்வம் கொண்டு வாழ்வது நரகத்திற்கான சாதனையே ஆகும்.

64. ஸ்ரீஹரியின் மேல் இருந்த ஆசையை விட்டு, பெண்ணின் மேல் ஆசை கொண்டு, புனிதமான சர்வக்ஞ பீடத்தை விட்டு வெளியே வந்து, சம்சார சாகரத்தில் வீழ்வது எப்படி சாதனையாகும்?

65. ஏனு மாடித கர்மகளு, லக்ஷ்மி நிவாஸனிகர்பிஸலு, சந்தான பூர்வதிந்த சந்தேஹிசத தினதினதி - நாம் எதைச் செய்தாலும், அதை எவ்வித சந்தேகமும் படாமல், உடனடியாக, ஸ்ரீ லக்ஷ்மி நிவாஸனாத ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும்.

66. ஒரே குடும்பத்தைச் (ஒரே விதமான) சேர்ந்த பொருட்களில் - அவற்றிற்குள் தலை சிறந்த பொருளில் இருக்கக்கூடிய ஸ்ரீஹரியின் ரூபத்தை 'விபூதி ரூபம்' என்று அழைக்கிறார்கள்.

67. பசு, பிராமணன், பெண், யானை, புலி, சாலிகிராமம், அரச மரம், சன்யாசி, நதி,

கடல், முனிவர், கோயில் - இவர்களில் ஸ்ரீஹரியின் விசேஷ குணங்கள் உள்ளன என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

68. இவற்றில் இரண்டு விதங்கள் உண்டு.

அ. பிரத்யட்சமாக கண்ணில் தெரியும் விபூதி ரூபங்கள்: கபில, வியாச, கிருஷ்ணன் முதலியவை, ரமா, பிரம்மா முதலான ஜீவர்கள்.

ஆ. கண்ணிற்குத் தெரியாமல் மறைந்திருக்கும் விபூதி ரூபங்கள். இவற்றை 'திரோஹித விபூதி ரூபம்' என்கிறார்கள். ரமா, பிரம்மா முதலானவர்களில் அந்தர்யாமியாக மறைந்திருக்கும் ஸ்ரீஹரியும் ரூபம்.

69. எச்சில், மடி, விழுப்பு இவற்றைப் பற்றி தெரிந்து கொள்ள் வேண்டும்.

70. இவற்றைப் பற்றி தெரிந்து கொள்ளாதிருந்தால், அதுவே பாவத்தைக் கொண்டு வரும் செயல். இன்று இல்லாவிட்டாலும் பின்னர் ஒரு நாள் கெட்ட பலனைக் கொண்டு வரும். இது ஞானிகளின் வாக்கு.

71. கலியுகத்தில் மனிதனின் ஆயுள் சுமார் 100 ஆண்டுகள் என்று ஞானிகள் கூறியுள்ளனர். ஆண்டிற்கு 360 நாட்கள். ஆக, 360x100= 36000 பகல் மற்றும் 36000 இரவுகள். மொத்தம் 72,000. நம் உடலில் உள்ள 72,000 நாடிகளுக்கும் இதற்கும் தொடர்பு உள்ளது என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

72. நம் உடலில் உள்ள இந்த 72,000 நாடிகளில், இடது & வலது பாகத்தில் தலா 36,000 ஆக உள்ளது என்று தெரிந்து கொள்ளவும்.

73. ஜீவர்களுக்கு கஷ்டம், சுகம், நோய், சுகவீனம் இவையெல்லாம் எப்படி வருகின்றன? அந்தந்த ஜீவர்களின் யோக்யதை, குணம், அவர்கள் செய்த நற்செயல் ஆகியவையே இவற்றை தீர்மானிக்கின்றன.

74. இந்தப் பிறப்பை கொடுத்தது நீயே. ஆகவே, என்னை நற்செயல்களை செய்ய வைப்பதும் உன் கடமையே - என்று ஸ்ரீஹரியை வேண்டுவது வேண்டும்.

75. ஸ்ரீஹரியிடத்தில் எப்போதும் ஞான, பக்தி, வைராக்கியத்தையே கேட்க வேண்டும்.

76. ஒவ்வொரு ரூபத்திலும் அனந்த ரூபியாக ஸ்ரீஹரி இருக்கிறான். இது சாத்தியமா என்றால் சாத்தியமே. ஞானிகளின் வாக்கில் நம்பிக்கை வைத்துப் பார்த்தால், இது சாத்தியம். ஸ்ரீஹரி, கண்ணிற்கு காணாமல் இருக்கிறான் என்பதால், சூக்ஷ்ம ரூபத்தில் நம் உடலில் இருக்கிறான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

77. இது எப்படி சாத்தியம்? நம் தலையில் எவ்வளவு முடி இருந்தாலும், அவை எப்போதும் தனித்தனியே நிற்கின்றன அல்லவா? அனைத்தும் சேர்ந்து கலந்து விடுவதில்லை. அப்படியே, அந்தர்யாமியான ஸ்ரீஹரியும் நம்முள் இருக்கிறான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

78. இந்த உடலில் 72000 நாடிகள் இருந்தாலும், அவை ஒன்றுக்கொன்று பின்னிப் பிணையாமல் தனித்தனியாக இருப்பதை போல், ஸ்ரீஹரியும் பல்வேறு ரூபங்களில் இருக்கிறான்.

79. நற்செயல்களை செய்ய வேண்டும் என்று நாம் முடிவெடுத்து விட்டால், அதற்கான வழிமுறைகளை, அது சிறியதோ பெரியதோ - மற்றவரின் உதவியை எதிர்பாராமல், நாமே செய்வது உத்தமமான செயலாகும்.

80. எல்லாவற்றிற்கும் பிறர் உதவியை நாடுபவர் எப்படி நற்செயல்களை செய்ய முடியும்? நாம் தேவர பூஜை செய்யவேண்டுமென்றால், நாமே இடத்தை சுத்தம் செய்து கொண்டு, கோலம் போட்டு, பூ / துளசி கொண்டு வந்து, குளித்து, நைவேத்யத்திற்கு அன்னம் தயார் செய்து கொண்டு, பூஜையை செய்ய வேண்டும். இதுவே உத்தமமான செயல். அனைவரும் இப்படியே சிந்திக்க வேண்டும். அப்படிச் செய்தால், தங்க மழையையும் பெய்யச் செய்யலாம்.

81. (பூஜை முதலியன செய்வதற்கு) மனைவி ஒப்புக்கொள்ளவில்லை என்று சொல்லக்கூடாது. நம் கடமையை நாமே செய்ய வேண்டும்.

82. கேட்டுக் கொண்டவற்றை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல், அவற்றில் மேலதிக ஆராய்ச்சி, சிந்தனை, விமர்சனம் ஆகியவற்றை செய்ய முயன்றால் அதுவே சாதனை.

83. உடம்புக்கு முடியவில்லை, கண் தெரியவில்லை, காது கேட்கவில்லை என்று சொல்லி எதையும் செய்யாமல் இருப்பது சாதனை அல்ல. ஓரிடத்தில் உட்கார்ந்து யாரிடத்திலும் பேசாமல், எப்போதும் காயத்ரி ஜபம், லக்ஷ்மி ஜபம், ராமகிருஷ்ண, தன்வந்திரி, லக்ஷ்மி நரசிம்ம நாமம் ஜபம் செய்யவும். மிகவும் உத்தமமான சாதனை.

84. பூஜையறையில் எப்போதும் தீபம் எரியுமாறு பார்த்துக் கொள்ளவும். இது இல்லாமல் சாப்பிட வேண்டாம்.

85. வாழ்க்கைக்கு, தர்மத்திற்கு, சம்பிரதாயத்திற்கு எவ்வளவு மடி தேவையோ அவ்வளவே செய்ய வேண்டும். இதற்கு அளவுகோல் கிடையாது. பலர் பலவிதமாக மடி செய்கின்றனர். மடி எதற்கு செய்கிறோம்? இதற்கான பதிலை அறிந்து செய்தால், அதிக பலன். பைத்தியக்காரத்தனமாக எப்போதும் மடி, மடி என்று இருந்தால், அது அந்த ஸ்ரீஹரியையே மறக்க வைத்துவிடும். பிறகு நற்பலன் எப்படி கிட்டும்?

86. அவரவர் சித்தாந்தத்தின் பொருளை தெரிந்து கொள்ளல், அவரவர் மடாதிபதிகளின் கிரந்தங்களை படித்துத் தெரிந்து கொள்வது ஒரு நற்செயல்.

87. ஒவ்வொரு கிரந்தங்களாக படித்துத் தெரிந்து கொள்வது உத்தமமான சாதனை.

88. அனைத்து ஜீவரிடத்தும் ஸ்ரீஹரி அந்தர்யாமியாக இருக்கிறான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

89. அனைவரின் பிம்பமே என் பிம்பமும். என் பிம்பமே அனைவரின் பிம்பம் என்ற சிந்தனை எப்போதும் நமக்கு இருக்க வேண்டும்.

90. பூஜையறையில் பூஜை செய்யும்போது மட்டுமே ஸ்ரீஹரியை நினைப்பது கூடாது. நாள் முழுவதும், நாம் செய்யும் அனைத்து வேலைகளின் போதும், அவனை நினைப்பது உத்தம சாதனை.

91.ஆசையே துன்பத்திற்குக் காரணம். பேராசை படவேண்டாம். கஞ்சத்தனம் கொண்டவன் சமூகத்தில் மதிப்பு இழப்பான்.

92. நைட்டி, சுடிதார், சட்டை, பேண்ட் ஆகியவை அணிந்து கொண்டு பெண்கள் நமஸ்கரிக்கக் கூடாது. ஸ்ரீஹரி வாயு குருகளின் சன்னிதானத்தில் என்ன ஆடை அணிந்து கொண்டு போகவேண்டுமோ, அவற்றை அணிவதே நற்சாதனை ஆகும். இந்துக்கள், இஸ்லாமியர்களைப் போல் வேடமிட்டு நடமாடுவதைத் தவிர்க்க வேண்டும்.

93. இந்த காலத்தில் பெண்கள், வளையல், பூ, சடை, குங்குமம் அணிவதை விரும்புவதில்லை. இவைகளை தவிர்ப்பது நரகத்திற்கான வழியே ஆகும். ஒருவேளை வருங்காலத்தில் கைம்பெண் கோலம் பூண நேர்ந்தால், அதற்காக இப்போதிருந்தே தயார் ஆகிறார்கள் என்று கொள்ளலாமா?

94. வீட்டில் முழு நாளும் படுக்கை விரித்து வைப்பது தவறான செயலாகும். அலங்காரமான படுக்கை, மெத்தை ஆகியவற்றை வாங்கி, அதை மடிக்காமல் பயன்படுத்துவது நாகரிகம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். இந்த செயல்களை தவிர்த்தால் அனைவரின் இல்லங்களிலும் ஆரோக்கியம் மேம்படும். செல்வம் பெருகும்.

95. இன்றைய காலத்தில் ஆண் பெண்கள் அதிகமான சம்பளம் பெறுவதால், தம் பேச்சைக் கேளாத பெற்றோரையே வேண்டாம் என்று தள்ளி வைத்துவிடுகின்றனர். துக்கத்தை நாமே வலிய வரவழைத்துக் கொள்ளும் செயலாகும் இது.

96. தம் மக்களை தம் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்காத பெற்றோர்களின் பாடு

மிக்க கஷ்டமானதே. அதனால் அவர்கள் பிறகு செய்யும் கெட்ட செயல்களுக்கு, நாமே காரணம் என்று தோன்றுவதில்லையே, ஏன்?

97. எல்லா வேலைகளுக்கு நடுவிலும், சிறிது நேரம் கடவுளுக்கு ஒதுக்கி, அவரைப் பற்றி நினைத்தால், ஸ்ரீஹரி நம்மைக் காப்பாற்றுவான்.

98. நிறைய படித்து, மேன்மேலும் ஞானத்தை வளர்த்துக் கொள்வது மிகவும் ஆனந்தமான செயலாகும்.

99. புத்தகங்களை மனைவி போல் நேசியுங்கள். நல்ல புத்தகங்களைப் படியுங்கள். பரமானந்தத்தை அடையுங்கள்.

100. மனிதனாகப் பிறந்து, சும்மா உட்கார்ந்து உண்ணக் கூடாது. நமக்கு வயதாகிவிட்டது. ஏற்கனவே நிறைய செயல்கள் செய்துவிட்டோம் என்று நினைத்தால், அது தவறு. அதற்கு பதிலாக, உடம்புக்கு முடியாவிட்டால், உட்கார்ந்த இடத்திலேயே ஸ்ரீஹரியை நினைத்து, ஜபம் செய்யலாம். அரசாங்கத்திற்கு நாம் வரி கட்டுவதைப் போல், இறைவனின் பெயரைக் கூறி வணங்கி, அதை அவனிடத்திலேயே சமர்ப்பிக்க வேண்டும். இப்படி செய்தால் நமக்கு நன்மை வந்து சேரும். இப்பிறவியில் பிறந்ததற்கு ஒரு அர்த்தம் கிடைக்கும்.

101. குணம் என்றால் என்ன? நம் பார்வையில், பிறன்மனை நோக்காமல் இருப்பவரை, நற்குணம் கொண்டவர் என்று கூறுகிறோம். இது பொதுவான பதில். ஆனால், ஞானிகளைக் கேட்டால் - யாரொருவன், தினமும் குளித்து, சந்தியாவந்தனம், பூஜை ஆகியவற்றை செய்யாதிருக்கிறானோ, அவனே குணஹீனன் என்று கூறுவர்.

102. பெண்கள் தங்கள் கூந்தலை, பின்னாமலோ, ஜடை போடாமலோ - கத்தரித்துக் கொண்டால் அல்லது நீளமாக விட்டுக் கொண்டால், அவர்கள் செய்த புண்ணியம் குறையும்.

103. ஆண்களுக்கு: Cutting, Shaving செய்த பிறகு, பாய்லர், கீசர் இவைகளைத் தொட்டு தாமே குளிக்காதீர்கள். இது பாவத்தைக் கொண்டு வரும். பிளாஸ்டிக் வாளி / சொம்பு இவைகளில் நீர் பிடித்து வைத்துக் கொண்டு, சவரம் செய்த பின்னர், பிடித்து வைத்த நீரில் குளித்து, பின்னர் கீசரிலிருந்து நீரைப் பிடித்து குளிக்கலாம். அல்லது இன்னொருவரை நீர் ஊற்றச் சொல்லி குளிக்கலாம். இதுவே நற்செயல்.

104. பெண்களுக்கு: அழகு நிலையத்தில் நீங்கள் எவ்வளவு நேரம் செலவழித்தாலும், அந்த ஸ்ரீஹரியின் அழகிற்கு இணையாக முடியாது. அழகு நிலையத்திலிருந்து நேராக திருமண நிகழ்ச்சிக்கு வந்து, அங்கிருக்கும் அனைவரையும் 'விழுப்பு' ஆக்கிவிடாதீர்கள். இது நரகத்திற்கு வழிவகுக்கும்

செயல். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு இதை எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம். ஒருவரினால் பல பேருக்கு பாவம் வந்து சேரும்.

105. சாஸ்திரங்களைப் படிப்பது நற்செயல். நீங்கள் எந்த மொழி அறிந்திருந்தாலும், அந்த மொழியின் உதவியுடன் சாஸ்திரங்களை படிக்கவும்.

106. 100க்கு 80 பேர் கடவுள் மற்றும் தர்மத்தின் மேல் நம்பிக்கை வைப்பதில்லை. அதற்குப் பதில், மருத்துவர் சொல்வதை வேதவாக்காக எடுத்துக் கொள்கிறார்கள். அவர் சொல்கிறார் என்பதால் விடியலில் எழுந்து நடைப்பயிற்சிக்கும் கிளம்பிப் போகிறார்கள்.

107. அந்த சமயத்தில் (விடியலில்) குளித்து, சந்தியாவந்தனம், பூஜை செய்யலாமே என்றால், (மருத்துவர் சொல்படி) டயர் என்கின்றனர். இப்படிப்பட்டவர்களுக்கு நரகமே பிராப்தி. இதிலிருந்து வெளியே வர முயலுங்கள்.

108.

1. நற்செயல்களை செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தால் போதாது. அவற்றை செய்ய முயற்சிக்க வேண்டும். இதுவே சாதனை அத்தியாயத்தின் சாரம் ஆகும்.

2. செய்யும் செயல்களின் பொருளை சரியாக தெரிந்து கொண்டு, அவற்றை செய்தவாறு, ஸ்ரீஹரியைப் பற்றி பாடிக் கொண்டிருப்பதே நற்செயல் ஆகும். இதுவே சமன்வய அத்தியாயத்தின் சாரம் ஆகும்.

3 . மேற்சொன்ன நல்ல விஷயங்களை நாம் செய்ய முற்படும்போது, பல்வேறு கஷ்டங்கள், இடர்கள், துக்கங்கள் வரலாம். அவற்றை எப்படியாவது களைந்து கொண்டால், அதற்கான முயற்சிகளை மேற்கொண்டால், இதுவே அவிரோத அத்தியாயத்தின் சாரம் ஆகும்.

4. எந்தவொரு செயலும், ஸ்ரீஹரியின் விருப்பத்தால் செய்து, ஸ்ரீஹரிக்கு ப்ரீத்தி (ஆனந்தம்) ஆகட்டும் என்று செய்து முடித்தால், அதற்கான நற்பலன்கள் வராது என்று சொல்ல முடியுமா? பலன்களை எதிர்பாராமல், பலன் மேல் ஆசை கொள்ளாதிருந்தால் நற்பலன்கள் வரும் - இதுவே பலஅத்தியாயத்தின் சாரம்.

மேற்கண்ட சிந்தனைகளை தொடர்ந்து வளர்த்து வந்தால், அதே வாழ்க்கையின் விதிகள் எனலாம். இப்படிப்பட்ட சிந்தனைகளை அனைவருக்கும் வர வேண்டும் என்பதே நம் சிந்தனை. இவை நிஜமாக நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கும் என்பதில் சந்தேகமென்ன?

குருவே, சாதனை என்றால் என்னவென்று இப்போது புரிந்தது. நன்றாக விளக்கிச் சொன்னதற்கு நன்றி. இன்னும் வேறு ஏதாவது கேள்வி இருந்தால், பிறகு கேட்கிறேன்.

சரி, போய் வாருங்கள். இப்போது சொன்னவற்றை பழக்கத்திற்கு கொண்டு வர முயலுங்கள்.

சுபமஸ்து.

***

# வாக்யேயகாரர்கள்

கர்னாடக சங்கீதத்தில் வாக்யேயகாரர்களின் பங்கு மிகவும் முக்கியமானது ஆகும். சங்கீத சாஸ்திரத்தின் பரம்பரையை எந்தவித தடங்கல்களும் இல்லாமல் வளர்த்து வருபவர்களே வாக்யேயகாரர்கள். பாடல்களை இயற்றுபவர்களை வாக்யேயகாரர்கள் என்று அழைப்பார்கள். *வாசங்கேயம் ச குருதே யஸ்ய ஸ: வாக்யேகாரக*: என்று சங்கீத ரத்னாகர கிரந்தத்தில் ஷார்ங்கதேவர் தெரிவிக்கிறார்.

யாரொருவர் பாடல்களை இயற்றி, அதற்கான மெட்டுகளையும் இடுகிறாரோ, அவரே வாக்யேயகாரர். உத்தம வாக்யேகாரர்களிடத்தில் இந்த திறமை மிகவும் அதிகமாக இருக்கும். இத்தகைய வாக்யேயகார்கள், கர்னாடக சாஸ்திரிய சங்கீதத்திற்கு முக்கிய பங்காற்றியிருக்கின்றனர். வசன சாகித்யத்தை இயற்றி சமுதாயத்தில் பெரிய மாற்றங்களைக் கொண்டு வந்தவர்களையும் இவர்களுடன் சேர்த்துக் கொள்ளலாம். இவர்களில் சிலரின் வாழ்க்கைக் கதையையும், சங்கீதத்திற்கு அவர்களின் பங்கையும் சுருக்கமாக பார்க்கலாம்.

## ஸ்ரீ புரந்தரதாசர் (1484 - 1564)



கர்னாடக சங்கீதத்தின் பிதாமகர் என்று போற்றப்படும் ஸ்ரீபுரந்தரதாசர், கர்னாடக சங்கீதத்திற்கு வலிமையான அடித்தளத்தை அமைத்துக் கொடுத்தவர். சங்கீதத்தைக் கற்க பாடும் துவக்கப் பாடங்களை நெறிமுறைப்படுத்தியதற்கான புகழ் இவரையே சேரும். இன்றைக்கும் ஒவ்வொரு மாணவரும், துவக்கப் பாடங்களின்போது பாடும் ஸ்வராவளிகள் மற்றும் பாடல்கள் தாசருடையதே ஆகும். தாசர் இயற்றிய பாடல்கள், உகாபோகங்கள் ஆகியவற்றை அனைவரும் பாடுவதை இன்றும் கேட்கலாம்.

தம் பாடல்களால் மக்களை நல்வழிப்படுத்தி, நல்ல தத்துவங்களை உபதேசித்து, மக்களை ஆன்மிகத்தின் பாதையில் திருப்பினார். ஸ்ரீஹரியின் பக்தராகி, நவகோடி நாராயணன் என்னும் பெயரில் நல்ல செல்வந்தராக இருந்தார். கர்னாடக சங்கீத உலகத்தின் மூலபுருஷர் இவரே.

புரந்தரகட் என்னும் ஊரில் வரதப்ப நாயக் மற்றும் லட்சுமக்கா தம்பதிகளுக்குப் பிறந்த ஆண் குழந்தைக்கு ஸ்ரீநிவாச நாயக் என்று பெயரிட்டனர். சிறு வயதிலேயே சாகித்யம், சங்கீதம், சமஸ்கிருதம், வேதம், பாராயணம், உபநிஷத்கள், அலங்கார சாஸ்திரம் ஆகிய எல்லாவற்றையும் கற்றுத் தேர்ந்தார் ஸ்ரீநிவாச நாயக். பின்னர் தந்தையின் வைர வியாபாரத்தைக் கவனித்தார். நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, நற்குணவதியான சரஸ்வதி என்னும் பெண்ணை திருமணம் செய்து கொண்டார்.

ஸ்ரீஹரியால் நடத்தப்பட்ட மூக்குத்தி நாடகத்தினால், தன்னிடம் இருந்த ஒன்பது கோடி மதிப்பிலான செல்வத்தையும் தானம் செய்து, ஸ்ரீவியாசராஜரின் சிஷ்யர் ஆனார். புரந்தரவிட்டலனின் பக்தனாகி, புரந்தரதாசர் என்று அழைக்கப்பட்டார். நாட்டின் ஒவ்வொரு மூலைக்கும் பயணப்பட்டு, தான் இயற்றிய பாடல்களைப் பாடி, மக்களின் இதயங்களை வென்றார்.

கர்னாடக சங்கீதத்திற்கு தாசரின் பங்கு அளப்பரியது. **புரந்தரவிட்டலா** என்ற அங்கிதத்துடன் பாடல்கள், உகாபோகங்கள், சுளாதிகள், விருத்தநாமா, கத்யம், கண்டகாவ்யா (பெரிய பாடல்கள்) ஆகியவற்றை இயற்றினார். துவக்கப் பாடல்களின் பயிற்சிக்குத் தேவையான ஸ்வராவளிகளை சிந்தித்து, மாயாமாளவகௌள என்னும் ராகத்தில் பாடல்களை இயற்றினார். இந்தப் பாடல்களை இன்றும் புதிதாக பாடல்களைக் கற்றுக் கொள்பவர்கள் பாடுகின்றனர். அதிகமான பாடல்களை கன்னடத்திலும், சில பாடல்களை சமஸ்கிருதத்திலும் பாடியுள்ளார். அவர் காலத்தில் வழக்கத்தில் இருந்த ராகம், தாளங்களில் பாடல்கள் பாடினார். சுமார் ஐந்து லட்சம் பாடல்கள் பாடினார் என்று விஜயதாசர் தமது ஒரு பாடலில் தெரிவிக்கிறார்.

குருவான வியாசராஜர் இவரது பாடல்களின் தொகுப்பை 'புரந்தரோபநிஷத்' என்று பெயரிட்டு கௌரவித்தார். நாரதரின் அம்சம் உடையவர் என்று அழைக்கப்பட்ட புரந்தரதாசர், புஷ்ய மாதம் அமாவாசையன்று ஸ்ரீமன்நாராயணின் திருவடிகளைச் சேர்ந்தார். உலகம் முழுவதும் இவரது ஆராதனையை இந்த நாளில் விமரிசையாகக் கொண்டாடுகின்றனர்.

**கனகதாசர்** (1458 - 1510)


Kanakadasa

ஸ்ரீவியாசராஜரின் சிஷ்யர் - புரந்தரதாசரின் சமகாலத்தவர் கனகதாசர். ஆன்மிக தத்துவங்களை தன் பாடல்களில் சாதாரண மொழியில் பாடி, மக்களிடம் சேர்ப்பித்துள்ளார். தியானத்தின் மூலம் ஸ்ரீஹரியை வணங்கி, அவனை அடையலாம் என்னும் விஷயத்தை செய்து காட்டியவர். அந்தக் காலத்தில் சமூகத்தில் இருந்த ஏற்றத் தாழ்வுகள், இன்னபிற பிரச்னைகளை தன் பாடல்களில் பாடி, சமூகத்தை திருத்த ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பே முயன்றார்.

தார்வாட் ஜில்லாவில் பாட (Baada) என்னும் கிராமத்தில் பேரே கௌடா மற்றும் பச்சம்மா என்னும் தம்பதிகளுக்குப் பிறந்தார் கனகதாசர். குருப என்னும் இனத்தைச் சேர்ந்தவர். திருப்பதி திம்மப்பனின் பக்தர்கள் ஆதலால், இவருக்கு திம்மப்பா என்று பெயரிட்டனர். அவர் தந்தையைப் போலவே இவரும் கிராமத் தலைவர் ஆனார். ஒரு முறை காகிநெலெ என்னும் கிராமத்தில் இருந்தபோது, இவருக்கு நிறைய செல்வம் (கனக) கிடைத்தது. அந்த செல்வத்தை அந்தக் கிராமத்தில் இருந்த கேசவன் கோயிலை புதுப்பிக்கக் கொடுத்து விட்டார். இந்த செல்வம் கிடைத்ததால், இவரை அனைவரும் கனகன் என்று அழைக்கலாயினர். இவரே பின்னர் கனகதாசரும் ஆனார். வியாசராஜரிடமிருந்து தாச தீட்சை பெற்றார்.

**ஆதிகேசவ, பாடதாதிகேசவ, நெலெயாதி** என்னும் அங்கிதங்களில் பல பாடல்களை இயற்றினார். முண்டிகே வகைப் பாடல்களையும் (ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துகளை சொல்லக்கூடிய பாடல்கள்) இயற்றினார். சிறந்த காவியங்களையும் இயற்றியுள்ளார். ஹரிபக்திசாரம், மோகன தரங்கிணி, ராமதான்ய சரிதே, நளசரித்ரே ஆகிய காவியங்களை ஷட்பதி என்னும் செய்யுளில் இயற்றியுள்ளார். வெங்கடேச கல்யாணம், கேசவ நாமா ஆகியவற்றையும் இயற்றியுள்ளார்.

சமூகத்தில் இருந்த பிற்போக்கு கருத்துகளை நீக்கி மக்களை முன்னேற்றும் வகையில் பாடல்களை இயற்றியுள்ளார். தம் பாடல்கள் மூலம் நல்ல தத்துவக் கருத்துக்களைச் சொல்லி அனைவரையும் இறைவனின் பக்தர்களாக மாற்ற முயன்றுள்ளார். இன்று வரை இவரது பாடல்கள் அனைவரது வீட்டிலும் கேட்கக்கூடியதாக இருக்கிறது.

**ஸ்ரீதியாகராஜர்** **(1767 - 1847)**



கர்னாடக சங்கீதத்தின் சரித்திரத்தில் வாக்யேகாரர்களின் அரசர் என்று அழைக்கப்படும் தியாகராஜர், சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவர்.

தன் ஐந்தாவது வயதிலேயே, வால்மிகி ராமாயணத்தின் 24,000 ஸ்லோகங்களை மனப்பாடம் செய்து மிக்வும் அழகாக பாடிக்கொண்டிருந்தார். அவர் தந்தை ராமப்ரம்மரின் ராமாயண உபன்யாசத்தில் ஸ்லோகங்களை சொல்லிக்கொண்டிருந்தார். 96 கோடி ராம நாம ஜபம் செய்து ஸ்ரீராமரின் அத்யந்த பக்தராகி, பலமுறை அவரின் தரிசனத்தைப் பெற்றவர். அவரின் பரம்பரையில் கர்னாடக சங்கீதம் வளர்ந்து மக்களின் மனம் கவர்ந்தது. அவரின் பாடல்களில் இறைத் தத்துவங்கள், நீதிகள், புராணங்களின் சாரங்கள் என அனைத்தும் இருந்தன.

திருவாரூரில் ராமபிரம்ம மற்றும் சீதம்மா என்னும் தம்பதிகளுக்கு மகனாக பிறந்தார். சிறு வயதிலேயே சாகித்யம், சங்கீதம், வேதம், பாராயணம், உபநிஷத்கள், அலங்கார சாஸ்திரம் ஆகிய எல்லாவற்றையும் கற்றுத் தேர்ந்தார். தன் எட்டாம் வயதில் வெங்கடரமண பாகவதரின் சிஷ்யராகி, அடுத்த இரண்டு ஆண்டுகளிலேயே சங்கீதத்தில் விற்பன்னர் ஆனார். '*தொரகுனா இதுவண்டி சிஷ்யடு*' என்று சபையினர் முன்னிலையில், இத்தகையை சிஷ்யனை பெற்றேனே

என்று தியாகராஜரை இவரது குரு பாராட்டினார். ராமகிருஷ்ணர் என்னும் யதிகளிடமிருந்து தாரக நாமம் உபதேசம் பெற்றார். ஸ்ரீராமசந்திரனே அவருக்கு எல்லாமும் ஆனான். சாந்தம்மா என்பவருடன் திருமணம் நடந்தது - சீதம்மா என்னும் பெண்ணும் பிறந்தாள். பல சிஷ்யர்களுக்கு சங்கீதம் சொல்லிக் கொடுத்து, தன் பாடல்களை பரம்பரையாக பாடும்படி வைத்தார்.

தம் எண்பதாவது வயதில், புஷ்ய சுக்ல பஞ்சமியன்று ஸ்ரீராமசந்திரனின் திருவடிகளை சேர்ந்தார். இன்றும் தியாகராஜரின் ஆராதனையை திருவையாறில் மிகவும் விமரிசையாகக் கொண்டாடி வருகின்றனர். நாட்டின் பற்பல இடங்களிலும் இவரது ஆராதனையை கொண்டாடுகின்றனர்.

**தியாகராஜ** என்னும் அங்கிதத்துடன், தன் பத்தாவது வயதிலிருந்தே தெலுங்கு மொழியில் பற்பல பாடல்களை இயற்றினார். பாடல்களுக்கு சங்கதிகளை வைத்து ஒழுங்குமுறைப்படுத்திய பெருமை தியாகராஜரையே சேரும். சமஸ்கிருதத்திலும் பாடல்களை இயற்றியுள்ளார். ஸ்ரீராமனின் தரிசனத்தைப் பெற்று, அந்த ஆனந்தத்தை தன் பாடல்கள் மூலமாக நம்மிடம் பகிர்ந்துள்ளார். பல புதிய ராகங்களை படைத்துள்ளார். நௌகா சரித்திரம், பிரகலாத பக்தி விஜயம், சீதா ராம விஜயம் ஆகியவை இவரது இசை-நாடகங்கள் (கேய நாடகம்) ஆகும். இவரது பற்பல பாடல்களில் பஞ்சரத்ன பாடல்கள் மிகவும் புகழ்பெற்றவையாகும். உத்சவ சம்பிரதாயத்திலும் பஜனை சம்பிரதாயத்திலும் பல பாடல்கள் இயற்றியுள்ளார். தம் பாடல்கள் மூலமாக தியாகராஜர் எப்போதும் நம்முடனேயே இருந்து, சங்கீதத்தைப் பரப்பும் வேலைகளில் நமக்கு உதவி செய்கிறார் என்றால் அது மிகையாகாது.

### ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சிதர் (1775 - 1835)



திருவாரூரில் பிறந்த முத்துஸ்வாமி தீட்சிதர், சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவர் ஆவார். சங்கீத விற்பன்னர் மற்றும் வாக்யேகாரரான ராமஸ்வாமி தீட்சிதர் மற்றும் சுப்பம்மா தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்தார். தந்தையிடமிருந்தே சங்கீதத்தைக் கற்றார். வீணை வாசித்தல், வாய்ப்பாட்டு, சமஸ்கிருதம், மந்திர சாஸ்திரம்,

ஜோதிடம், அலங்கார சாஸ்திரம் ஆகியவற்றில் விற்பன்னராகத் திகழ்ந்தார். சிதம்பரநாதர் என்பவரிடம் மந்திரோபதேசம் பெற்றார். குருவுடன் காசிக்குப் போய் அங்கு ஐந்து ஆண்டுகள் மந்திரஜபம் செய்தார். கங்கை நதியில் நின்று ஜபம் செய்து முடித்தவுடன், அவர் கையில் ஒரு வீணை கிடைத்தது. காசியில் இருந்தபோது கர்னாடக சங்கீதத்துடன், ஹிந்துஸ்தானி சங்கீதத்தையும் கற்றார். சிறுவயதிலிருந்தே இவருக்கு மேற்கத்திய இசை மீது ஆர்வம் இருந்தது. தந்தையின் நண்பரான ஒரு கிருஸ்துவ தேவாலயத்தின் பாதிரியார் மூலமாக மேற்கத்திய இசையும் கற்றிருந்தார். இப்படியாக மூன்று வித முக்கியமான சங்கீதங்களையும் கற்றிருந்தார்.

காசியிலிருந்து திருவாரூருக்கு திரும்ப வரும்போது, திருத்தணியில் சுப்ரமணியர் பிரத்யட்சம் ஆகி, வாக்யேகாரர் ஆகுமாறு வரம் அளித்தார். தம் 16ம் வயதில், **குருகுஹ** என்னும் அங்கிதத்தில் பாடல்களை இயற்றத் துவங்கினார். மத்யம கால சங்கீத முறையை இவரது பாடல்களில் காணலாம்.

கர்னாடக சங்கீதத்தில் வயலின் இசையை சேர்த்தது தீட்சிதரே ஆகும். நாகஸ்வரத்திற்கான வழிமுறையை வடிவமைத்தவரும் இவரே. வர்ணம், பாடல்கள், ராகமாலிகை ஆகியவற்றை சமஸ்கிருதத்தில் இயற்றியுள்ளார். பல அரிதான ராகங்களை தன் பாடல்களில் பயன்படுத்தி அவற்றை மறுபடி பயன்பாட்டுக்குக் கொண்டுவந்தார். 72 மேளகர்த்தா ராகங்களிலும் பாடல்களை இயற்றினார். நவக்கிரகப் பாடல்கள், பஞ்சலிங்க ஸ்தலப் பாடல்கள், நவாவரணப் பாடல்கள் ஆகியவற்றை இயற்றினார். மேற்கத்திய இசையின் மெட்டுகளுக்கு பாடல்களை இயற்றினார். சூளாதிகளின் சப்த தாளத்தை தன் பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். ஸ்வரங்களுடன் தன் பாடல்களை எழுதி வைத்து, தன் பின் வரும் பரம்பரைக்கு பயன்படுமாறு விட்டு வைத்துள்ளார்.

**ஷ்யாமா சாஸ்திரிகள் (1762 - 1827)**



சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஷ்யாமா சாஸ்திரிகள், காமாட்சி தேவியின் உபாசனையை செய்து, தேவியின் தரிசனத்தைப் பெற்றவர். தம் பாடல்களில் காமாட்சி தேவியை பல்வேறு விதங்களில் புகழ்ந்து பாடியுள்ளார். தேவியை தாய் என்று வர்ணித்து பல பாடல்களில் பாடியுள்ளார்.

திருவாரூரில் பிறந்த மற்றொரு வாக்யேகாரர் - ஷ்யாமா சாஸ்திரிகள். இவர் தந்தை விஸ்வநாத ஐயர், இவருக்கு வெங்கட சுப்ரமண்யன் என்று பெயரிட்டு, செல்லமாக ஷ்யாமகிருஷ்ண என்று அழைத்து வந்தனர். பின்னர் ஷ்யாமா சாஸ்திரி என்னும் பெயரே பிரபலமடைந்தது. ஷ்யாமகிருஷ்ணனும் வேத அத்யயனம், வியாகரணம், சாகித்யம் ஆகியவற்றை கற்றுத் தேர்ந்தார். தன் தாய்மாமனிடம் சங்கீதத்தைக் கற்றார்.

பரம யோகியான சங்கீத ஸ்வாமிகள் அவ்வப்போது விஸ்வநாத ஐயரைப் பார்க்க வந்துகொண்டிருந்தார். அறிவாளியான சிறுவனைப் பார்த்து மகிழ்ந்து, அவனுக்கு சங்கீதத்தைக் கற்றுக் கொடுக்க விரும்பினார். ஸ்ரீவித்யா மந்திரத்தையும் சிறுவனுக்கு உபதேசித்தார். ஷ்யாமா சாஸ்திரிகள், குருவின் ஆசிரமத்தில் சங்கீதத்தைக் கற்றார். ராக ஆலாபனை, ராக தாள பல்லவிகளைப் பாடுவதில் திறமை பெற்றார். ஷ்யாமகிருஷ்ண என்ற அங்கிதத்தில் பல ஸ்வரஜதி, வர்ணம், பாடல்களை இயற்றினார். பெரும்பாலும் தெலுங்கு மொழியில் பாடல்களை இயற்றினாலும், சமஸ்கிருதம் மற்றும் தமிழிலும் சில பாடல்களை இயற்றியுள்ளார். அந்தப் பாடல்களுக்கு தாள விவரங்களை எழுதி வைத்து, பிற்கால சந்ததியினருக்கு கொடுத்துள்ளார். தாளங்களில் மிகுந்த திறமை பெற்றவராக, 108 தாளங்களில் பாடல்களை இயற்றிய பெருமை இவருக்கு உண்டு. ஷரபநந்தன என்னும் புதிய தாளத்தை உருவாக்கினார். சாபுதாளத்தில், அனுலோம மற்றும் விலோம பாடல்களை இயற்றியுள்ளார். பல புதிய ராகங்களையும் உருவாக்கினார். சிந்தாமணி, கல்கட ஆகிய ராகங்கள் அவற்றில் முக்கியமானவை. இவரின் பாடல்கள், ராக பாவத்துடன் இருப்பதுடன், பக்தியையும் கொடுப்பதாகவும் உள்ளன. சில பாடல்களில், ஸ்வர சாகித்யத்தில் சிட்ட ஸ்வரங்களும் காணப்படுகின்றன.

**டாக்டர். முத்தையா பாகவதர் (1877 - 1945)**



20ம் நூற்றாண்டில் கர்னாடக சங்கீதத்தை ஆராய்ந்து அதில் டாக்டரேட் பட்டம் பெற்றவர் ஸ்ரீ முத்தையா பாகவதர். மதராஸ், திருவாங்கூரில் சங்கீதப் பள்ளிகளை நிறுவி, அப்பள்ளிகளில் முதல்வராக பணியாற்றிய பெருமை இவருக்கு உண்டு. ஸ்வாதி திருநாள் அவரின் பாடல்களை மக்கள் மத்தியில் பரவலாகக் கொண்டு சேர்த்தவர் இவர். மைசூர் அரண்மனையில் ஆஸ்தான வித்வானாக இருந்து சாமுண்டீஸ்வரியின் மேல் 108 பாடல்களை இயற்றி மைசூர் மகாராஜாவின் மரியாதைக்குப் பாத்திரமானார். இப்படி பல அரசர்களிடமிருந்தும் பரிசுகளைப் பெற்றார். சங்கீத சம்மேளனங்களைக் கூட்டுவதற்கு அவர்களிடமிருந்து பல உதவிகளைப் பெற்றார். ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் சங்கீத சம்மேளனத்தில் உற்சாகமாக பங்கு பெற்றார். பல இடங்களில் கதாகாலட்சேபங்களை நடத்தி புகழடைந்தார்.

திருநெல்வேலி அருகேயுள்ள ஹரிகேசநல்லூர் கிராமத்தில் பிறந்தார். இவரது தந்தை லிங்கம் ஐயர், இவரது சிறுவயதில் சமஸ்கிருத சாகித்யங்களை கற்றுவித்தார். சங்கீத வித்வான் சாம்பசிவ ஐயரிடமிருந்து சங்கீதங்களைக் கற்றுத் தேர்ந்தார் பாகவதர். மைசூர், திருவாங்கூர் சமஸ்தானங்களில் ஆஸ்தான வித்வானாக இருந்தார். கர்னாடக சங்கீதத்தில் பல தேர்வுகளை நடத்துவதற்கு காரணகர்த்தராக இருந்தார். தேர்வுக் கமிட்டியின் தலைவராகவும் இருந்தார்.

வாங்யேயகாரராக பாகவதர், தமிழ், தெலுங்கு, கன்னட மற்றும் சமஸ்கிருதத்தில் பாடல்களை இயற்றினார். பல புதிய ராகங்களைப் படைத்ததோடு மட்டுமல்லாமல், பல அபூர்வமான ராகங்களில் பாடல்களை இயற்றியுள்ளார். **ஹரிகேஷ** என்னும் அங்கிதத்தைப் பயன்படுத்தினார்.

பல சமஸ்தானங்களிலிருந்தும், அரசர்களிடமிருந்தும் பல விருதுகளை / பட்டங்களை பெற்றிருந்தார். சங்கீத சிகாமணி, சங்கீத கலாநிதி விருதுகளைப் பெற்றார். சங்கீத கல்பத்ரும என்னும் சங்கீதப் புத்தகத்தை, மலையாள மொழியில் மொழிபெயர்த்தார். சமஸ்கிருத மொழியில் தியாகராஜ காவியம் என்னும் நூலை இயற்றினார். பௌகவாடி வரதராஜ அய்யங்கார் மற்றும் வைத்யலிங்கம் ஆகியோர் இவரது சிஷ்யர்களில் முக்கியமானவர்கள்.

**அக்கமகாதேவி** **(1130-1160)**



சமூக சீர்திருத்தங்களில் பெண்களின் பங்கு சற்று குறைவானதாகவே இருக்கிறது. ஆண்களுக்கு நிகராக பெண்களும் சமூக சீர்த்திருத்தங்களில் பங்கு பெறலாம் என்று சுமார் 800 ஆண்டுகளுக்கு முன்னரே செய்து காட்டிய முதல் பெண்மணி என்றால் அது கர்னாடகத்தின் அக்கமகாதேவி எனலாம். 12ம் நூற்றாண்டிலேயே இத்தகைய விழிப்புணர்வை ஏற்படுத்தினார். இல்வாழ்க்கையைத் துறந்து, சென்னமல்லிகார்ஜுனனே தன் கணவன் என்று நம்பினார். மிகுந்த வைராக்கியத்துடன், ஆண்களை எதிர்த்து, சமூக சீர்த்திருத்தங்களைக் கொண்டுவர போராடியவர் இவர். தம் சிந்தனைகளை தெளிவான கன்னடத்தில் எழுதித் தெரிவித்தார். ஆண் பெண் பேதமில்லாமல், ஜாதிமத பேதமில்லாமல் அனைவரும் நாட்டு நடப்புகளை தெரிந்துகொள்ளும் வகையில் தம் கருத்துக்களை தெரிவித்தார்.

உடுதடி கிராமத்தில், நிர்மல் மற்றும் சுமதி தம்பதியினரின் மகளாகப் பிறந்தார். சிவபக்தர் ஆனார். ஸ்ரீசைலத்தின் சென்னமல்லிகார்ஜுனனே இவரது வணங்குதற்குரிய தெய்வம். திருமணம் செய்து கொள்ளவேண்டுமெனில் தமக்கு சில நிபந்தனைகள் உண்டு என அறிவித்து, அவற்றை ஏற்றுக்கொண்ட கௌசிக அரசரை மணந்தார். பின்னர் அந்த நிபந்தனைகளை அரசர் மறக்கவும், இல்வாழ்க்கையையே துறந்து துறவியானார். அனைவருக்கும் அக்கா ஆகி, அக்கா மகாதேவி என்று அழைக்கப்படலானார். சிவபக்தரான பசவண்ணா, அல்லண பிரபு, சித்தராமண்ண ஆகியோர் இவரது சமகாலத்தவர் ஆவர்.

சென்னமல்லிகார்ஜுனனையே கணவனாக வரித்துக் கொண்டு, **சென்னமல்லிகார்ஜுன** என்ற அங்கிதத்துடன் பல பாடல்களை, வசன சாகித்யங்களை இயற்றினார். இந்தப் பாடல்களுக்கு ராக தாளங்களை நிறுவாமல், தம் இஷ்டத்திற்குப் பாடலானார். சிறந்த தத்துவங்களை தெளிவான கன்னடத்தில் எழுதி அனைவருக்கும் தெரியப்படுத்தினார். தம் கருத்துகளால் அன்றைய சமூகத்தில் மதிக்கப்படலானார்.

**பசவண்ணா** **(1130-1162)**



சிறந்த தெய்வ பக்தரான பசவண்ணா அவர்கள், சமூக சீர்த்திருத்தவாதியும்கூட. வீரசைவ மடத்தை நிறுவியவர். 12ம் நூற்றாண்டில் சமூக மேம்பாடுக்காக கன்னடத்தில் வசன சாகித்யங்களை இயற்றியவர். கர்நாடக மக்களுக்கு இது மிகவும் பெருமை கொள்ளக்கூடிய விஷயமாகும்.

பாகேவாடியில், மாதரஸ மற்றும் மாதலாம்பிகே என்னும் தம்பதிகளுக்குப் பிறந்தார் பசவண்ணா. பிஜ்ஜளனின் அதிகாரியாகி அரசு வேலை பார்த்து வந்தார். கூடவே சிவபக்தராகி, தர்மபிரசாரமும் செய்து வந்தார். கூடல் சங்கமேஸ்வரரின் பக்தராகி - **கூடல சங்கமதேவ** - என்னும் அங்கிதத்துடன் பற்பல வசன சாகித்யங்களை கன்னடத்தில் இயற்றினார். இவற்றிற்கு ராகம், தாளம் மற்றும் வாத்தியங்களின் விஷயங்களையும் தெரியப்படுத்தியுள்ளார். சமூக முன்னேற்றத்தில் தன்னையே அர்ப்பணித்துக்கொண்ட இத்தகைய சிவபக்தர்களின் சரித்திரத்தை தெரிந்துகொள்வது மிகவும் அவசியமானதாகும்.

இத்தகைய கதைகளைத் தெரிந்துகொள்வதன் மூலம், படிப்பவர்களும் சமூக முன்னேற்றத்தில் தம் பங்கினை செலுத்த முன்வரக்கூடும். சங்கீதத்தின் வளர்ச்சியில் இவரது பங்கு மிகவும் முக்கியமானதாகும். இவரது பாடல்கள் மிகவும் புகழ்பெற்றவை. மிகவும் சிறிய வயதிலேயே இவர் இறந்துவிட்டாலும், தம் பாடல்களால் சமூகத்தில் நல்ல மாற்றங்களைக் கொண்டு வந்தவர் பசவண்ணா அவர்கள்.

பலருக்கு சங்கீத சாஸ்திரங்களின் விஷயங்களைப் புரிந்துகொள்வதில் கஷ்டமாக இருந்தாலும், சங்கீதம் படிப்பவர்களுக்கு குறைந்த பட்சம் ஹரிதாசர்களை, வாக்யேயகாரர்களைப் பற்றி தெரிந்திருத்தல் அவசியம்.

பாடகர்கள், புரந்தரதாசர், தியாகராஜர் பாடல்களுடன், வசன சாகித்யமும் பாடும் வழக்கம் உண்டு. இப்படியாக வசன சாகித்யமும் சாஸ்த்ரிய சம்பிரதாயப்படி பாடும் வழக்கத்தையும் சில பாடகர்கள் கொண்டிருந்தார்கள்.

**ஓர்வாய் லட்சுமிதேவம்மா (1865 - 1950)**

பெல்லாரி மாவட்டத்தில் கொப்பர நரசிம்ம க்ஷேத்ரம் மிகவும் புகழ் பெற்றது. இந்த மாவட்டத்தில் சொண்டூர், மாங்கனீஸ் மற்றும் மைக்கா தாதுப் பொருட்களுக்கு பெருமை வாய்ந்தது. பக்திக்கும் பெயர் பெற்ற ஊர் இது. ஹரப்பனஹல்லி அவ்வா, ஹெளவனகட்டே கிரியம்மா இவர்களுடன் முக்கவிகள் என்று பெயர் பெற்ற ஓர்வாய் லட்சுமிதேவம்மா இந்த ஊரைச் சேர்ந்தவர் ஆவார்.

சொண்டூர் ஒரு சிறிய சமஸ்தானமாக இருந்தது. அன்றைய காலத்து அரசர்களும் மிகவும் பக்திமான்களாக இருந்தனர். அங்கு லட்சுமணராயர் என்பவர் திவானாக இருந்தார். இவரது மனைவி கோதாவரிபாய். இந்த தம்பதியினரின் பெண்ணே லட்சுமி தேவம்மா - 1865ல் பிறந்தார். சிறு குழந்தை தன் பால்ய லீலைகளின் மூலம் பெற்றோர்களுக்கு மிகவும் சந்தோஷத்தைக் கொடுத்தது. ஐந்தாம் வயதை அடைந்த குழந்தை, பள்ளிக்குச் செல்லும் வயதை அடைந்தது. ஆனால், அந்த கால வழக்கப்படி கோதாவரிபாய் தன் தம்பியான ஓர்வாய் மத்வராயர் என்பவருக்கு பால்ய விவாகம் செய்து வைத்தார்.

இவரின் திருமணம் ஆனபிறகு, அந்தக் காலத்தைப் போலவே பிறந்த வீட்டிலேயே இருந்து வந்தார். அந்தக் காலத்தில் பள்ளிக்கு அனுப்பும் வழக்கம் இல்லாததால், வீட்டில் தந்தையே கன்னடம், சமஸ்கிருதம் கற்றுக் கொடுத்தார். தேவம்மா பக்திப் பாடல்கள், தினப்படி கர்மானுஷ்டாங்கள் ஆகியவற்றில் ஆர்வம் கொண்டிருந்தார். ஹரப்பனஹல்லி அவ்வா'வும் அதே காலகட்டத்தில் வாழ்ந்து வந்தபடியால், அவருடன் நட்பு பூண்டார். அவரின் பாடல்களை எந்நேரமும் பாடியவாறு இருந்தார். மேலும், தானே சொந்தமாக எழுதிய பாடல்களையும் பாடிவந்தார்.

இது சனிக்கிழமை பாடவேண்டிய பாடல்; இது வெள்ளிக்கிழமையின் பாடல்; இது சிராவண மாசத்தின் சனிக்கிழமையின் பாடல் என்று சம்பிரதாயப்படி பாடல்களை வீடுகளில் பாடுவதை இன்றும் காணலாம். அதே போல் அன்றும் பாடிக்கொண்டிருந்தனர்.

இவர் சிறுமியாக இருந்தபோதே தந்தையிடமிருந்து கன்னடம், சமஸ்கிருதம், கூடவே மணிமஞ்சரி, சுமத்வவிஜயம் ஆகியவற்றை படித்திருந்தார். ஸ்ரீசத்யத்யான தீர்த்தருக்கு அறிமுகம் ஆகியிருந்தார். ஸ்ரீராகவேந்திரரிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். மத்வராயர் தன் பாடங்களை முடித்து, குத்தி (Gutti) வந்து அங்கு தன் வழக்கறிஞர் தொழிலை நடத்தலானார். ஒரு நல்ல நாளில், லட்சுமிதேவம்மா தன் கணவன் வீட்டுக்கு வந்தார். ஒரு ஆண் குழந்தையும் பிறந்தது. வம்சத்தை வளர்க்க ஒருவன் பிறந்ததைக் கண்டு அனைவரும் மகிழ்ந்தனர். முந்தைய பிறவிப்பயனோ என்னவோ, சில நாட்களிலேயே அந்தக் குழந்தை இறந்துவிட்டது.

மிகவும் வருத்தப்பட்ட தம்பதிகள், ஸ்ரீஹரியின் சேவை செய்யத் தொடங்கினர். பிறந்த வீட்டை விட்டு புகுந்த வீட்டுக்கு வந்ததால், புகுந்த ஊரின் பெயரே இவரின் பெயரோடு சேர்ந்துகொண்டது.

ஓர்வாய் வம்சத்தில் ஒரே ஒரு குழந்தை பிறந்து அதன் மூலமே வம்சம் வளர்வது வழக்கமாக இருந்தது. தமக்கு பிறந்த ஒரு குழந்தையும் இறந்ததால், இனிமேல் இன்னொரு குழந்தை பிறக்காது என்று தீர்மானித்து, வேறொரு குழந்தையை தத்து எடுத்துக் கொள்வதென்று முடிவு செய்தனர்.

மத்வராயரின் தங்கை பாகம்மா மற்றும் ராகவேந்திரராயர் தம்பதிகளின் குழந்தையை தத்து எடுத்துக் கொண்டனர். குத்தி'யில் இருந்ததால் லட்சுமிதேவம்மாவை குத்தவ்வா என்றும் அழைக்கலாயினர்.

மத்வராயர் குத்தியில் நல்ல வக்கீல் என்று பெயர் பெற்றார். பின்னர் ஆதோனிக்கு இடம் பெயர்ந்தார். அங்கு பழமை வாய்ந்த ஆஞ்சனேயர் கோயில் ஒன்று உள்ளது. அவரை மங்கராயர் என்றும் அழைக்கின்றனர். அந்த மங்கராயரின் ஆராதனையை மத்வராயர் மிகவும் விமரிசையாக நடத்தினார். லட்சுமிதேவம்மாவுக்கும் மிகுந்த பக்தி இருந்தது. மாலை வேளைகளில் பஜனை, உபன்யாசம் என்று நடத்திக்கொண்டு காலத்தை கழித்து வந்தார். ஹோலி பௌர்ணமியன்று மிகவும் சிறப்பான பூஜைகளைச் செய்து, பாடியோர் பங்குபெற்றோர் அனைவருக்கும் தக்க சன்மானம் கொடுத்து வந்தார். நாடகங்களையும் நடத்தி, அதில் நடித்தும் வந்தார்.

லட்சுமிதேவம்மா அழகான வடிவானவராக இருந்தார். முகத்தில் மஞ்சள் குங்குமம், நல்ல ஆடை அணிகலன்கள் உடன் கச்சை அணிந்து வந்தால், சாட்சாத் மகாலட்சுமியே இவ்வுலகில் வந்தாற்போல் இருக்கும் என்று அன்று அவரை நேரில் கண்டவர்கள் தெரிவித்தார்கள்.

அத்தம்பதிகள் ஒரு அபூர்வமான ஜோடி. பலரை ஆதரித்து வந்தனர். பலவித கலைகளில் தேவம்மா தேர்ச்சி பெற்றிருந்தார். அலங்காரங்கள் செய்வது, மண்ணில் பொம்மைகள் செய்வது, பலப்பத்திலிருந்து சிற்பங்கள் செய்வது, திருமணங்களில் பயன்படுத்தப்படும் சில பொருட்கள் செய்வது, வரனுக்கு கொடுக்கும் அலங்காரப் பொருள்களில் இறைவனின் உருவங்களை வரைவது என்று பல கலைகளில் சிறந்தவராக விளங்கினார்.

ரங்க ஒலித தாசர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீ ஜகன்னாததாசரின் அருளுக்கு பாத்திரமாகியிருந்தார். பலவிதமான கோலங்களை, தேவதா ரூபங்களை கோலங்களில் வரைந்து ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தார். கோலம் வரைய இவர் பயன்படுத்திய பொருட்களை மைசூர் மானஸ கங்கோத்ரியில் இன்றும் பார்க்கலாம்.

சமையல் கலையிலும் லட்சுமிதேவம்மா நிபுணராகியிருந்தார். தம்மை பார்க்க வரும் முதியவர்கள், குழந்தைகளுக்கு வரும் சாதாரண ஜுரம், வாயு

ஆகியவற்றிற்கு இவர் தயாரித்துக் கொடுத்த மருந்துகள் சஞ்சீவினியாக இருந்து, அந்த பிரச்னைகளை தீர்த்து வைத்தன. அவர் வீட்டில் பூஜை, புனஸ்காரங்களுக்கு என்றும் குறைவிருந்ததில்லை. குடும்ப வழக்கப்படி 'வரமகாலட்சுமி பூஜை' செய்யப்பட்டு வந்தாலும், சில காரணங்களால் அந்த பூஜை தடைபட்டிருந்தது.

மேலும் அவர் வீட்டில் கலச ஸ்தாபனை செய்யும் வழக்கம் இருக்கவில்லை. அப்படி பூஜை செய்தால் ஏதேனும் பிரச்னை வரும் என்பது இவர் மூதாதையரின் யோசனையாக இருந்தது. ஆனால், தேவம்மா, இது ஸ்ரீரமணனின் மனைவியின் பூஜை. இந்த உலகத்தையே கட்டிக் காக்கும் மகாலட்சுமி நம்மை ஏன் கைவிடப் போகிறாள் என்று எண்ணி, வரலட்சுமி பூஜை செய்ய தீர்மானித்தார். கணவரின் சம்மதம் & உதவியும் கிடைத்தது. வெகு விமரிசையாக பூஜை மற்றும் பிராமண சுமங்கலியரின் போஜனமும் நடைபெற்றது.

உணவிற்குப் பின் ஓய்வெடுக்கப் போனபோது ஏதோ சத்தம் வந்ததே என்று பார்த்தார். பூஜையறையிலிருந்து - நகை அலங்காரத்துடன் ஒரு பெண் வீட்டிற்கு வெளியே போவதைக் கண்ட தேவம்மா, உடனே, கதவுக்கு நடுவில் கை வைத்து அப்பெண்ணை தடுத்து நிறுத்தினார்.

அவ்வா: ஏன் அம்மா, இப்போது நீ புறப்பட்டுப் போகிறாய்?

மகாலட்சுமி: பூஜைதான் விமரிசையாக முடிந்துவிட்டதே? அப்புறம் என்ன? நான் போய் வருகிறேன்.

அவ்வா: இல்லை. நீ எப்போதும் நம் மனதில், நம் வீட்டில் இருக்க வேண்டும். எங்களுக்கு அனுக்கிரகம் செய்யவேண்டும். உன் கிருபை எப்போதும் என் மேல் விழுந்திருக்க வேண்டும். அதை வேண்டியே நான் உன்னை பூஜை செய்தேன். ஆகவே, தயவு செய்து இங்கேயே இருந்து என்னை காப்பாற்ற வேண்டும் - என்று மிகுந்த பக்தியுடன் மகாலட்சுமியை அவ்வா வேண்டிக்கொண்டார்.

மகாலட்சுமி: அப்படியே ஆகட்டும் என்றவாறு பூஜையறைக்குள் சென்று மறைந்து போனார். அவ்வா, மிகவும் மகிழ்ச்சியடைந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்.

எத்தகைய அற்புதமான பக்தி. மகாலட்சுமியின் தரிசனம், அவருடன் உரையாடல் செய்வது சாதாரணமான விஷயமா? கேட்டாலே புல்லரிக்கிறது அல்லவா? மகாலட்சுமியின் பூரணமான அனுக்கிரகத்தை அவ்வா பெற்றிருக்கிறார் என்று தெரிகிறதல்லவா?

தன் தத்துப்பிள்ளையின் மூலமாக அனந்தபத்பனாப விரதம் செய்ய விருப்பம் கொண்டார். அதன்படியே பூஜையை நிரந்தரமாக செய்தும் வந்தார். நாமும் நம் வீட்டில் இருக்கும் விரதங்களை விடாமல் தொடர்ந்து செய்து வரவேண்டும் என்று அவ்வா'வின் வரலாறின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

அவ்வா பல தீர்த்த க்ஷேத்திரங்களுக்கு பயணம் செய்து, அங்கிருக்கும் ஸ்தல தெய்வங்களைக் குறித்து பல பாடல்களை இயற்றினார். திருப்பதி, மங்களகிரி, சிம்மாசலம், ஸ்ரீசைலத்தில் இருக்கும் நரசிம்மர், உடுப்பி கிருஷ்ணன், பாவிசமீர ஸ்ரீ வாதிராஜரின் சொண்டா - ஆகிய க்ஷேத்திரங்களுக்கு சென்று வந்தார் என தெரிய வருகிறது.

இவரது அங்கிதம் 'நரசிம்ம விட்டலா'. இவரது இடமான வித்யாக்ஷேத்திரத்தில், தினமும் பல்வேறு பக்தர்கள் வருகை புரிந்துவந்தனராம். பலருக்கும் இவர் பல்வேறு உதவிகள் செய்து வந்தார் என தெரிய வருகிறது. அங்கிதம் எப்படி கொடுத்தார்? இவரே கொடுத்தாரா? அல்லது கனவில் யாராவது கொடுத்து வந்தார்களா? தெரியவில்லை.

முன்னர் சொன்னது போல், அவ்வா, ராயரிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். ஸ்ரீ சுஷீலேந்திரர் மற்றும் ஸ்ரீ சுயதீந்திரர் இவர்களுக்கு அறிமுகமாகி, அவர்களின் அனுக்கிரகத்திற்கு பாத்திரமாகியிருந்தார். அவ்வப்போது, மாஞ்சாலையில் ராயர் பிருந்தாவன தரிசனம், அங்கு சேவைகள் செய்வது என்று வழக்கப்படுத்திக் கொண்டிருந்தார். பல ஹரிதாசர்கள் அவ்வா அவர்களின் வீட்டில் அவ்வப்போது கூடி பஜனைப் பாடல்களைப் பாடி வந்தனர். கன்னட மொழி ஞானமும் இருந்ததால், பற்பல பாடல்களை அவ்வா இயற்றினார். வாதிராஜர் பக்தை ஆதலால், அப்போதிருந்த பீடாதிபதியின் அறிமுகம் மற்றும் அனுக்கிரகத்தைப் பெற்றிருந்தார்.

ஒரு சமயம், ராயர் ஆராதனை சந்தர்ப்பத்தில், சமையலறைப் பக்கம் சென்றபோது, அங்கிருந்த காய்கறிகளைப் பார்த்து ஆனந்தமடைந்து, அவைகளைப் பற்றியே ஒரு பாடல் அமைத்து, அதை ஸ்ரீஸ்ரீகளிடம் சமர்ப்பித்தாராம்.

முன்வினைப் பயன் என்பது யாரையும் விடாது என்பதைப்போல் அவ்வா அவர்களும் அதற்கு தப்பவில்லை. தனது 52ம் வயதில் கணவரை இழந்து கைம்பெண் ஆனார். ஸ்ரீபாதராஜரின் - இட்டாங்கே இருவேனு ஹரியே நன்ன தொரெயே - என்னும் வாக்கின்படி, மனதை திடப்படுத்திக்கொண்டார். மனம் மற்றும் உடல் இரண்டையும் ஸ்ரீஹரியிடம் இன்னும் அதிகமாக செலுத்தி பக்தி செய்தார். இத்தகைய துன்பங்கள் தனக்கு மீண்டும் நேரக்கூடாது என்று ஸ்ரீஹரியிடன் முறையிட்டார்.

பெல்லாரியில் தனது உபாசனா மூர்த்தியான நரசிம்மரை பிரதிஷ்டை செய்ய விரும்பினார். இதற்கான காசாபுரத்தில் இருக்கும் ஸ்ரீராமர் மற்றும் முக்யபிராணரிடத்தில் சேவை செய்தார். அந்த சமயத்தில், மந்திராலயத்தில் காலரா நோய் பரவிக்கொண்டிருந்தது. அனைவரும் ஊரை காலி செய்து வெளியேறிபோது, அவ்வா அங்கேயே இருந்து தன் சேவையைத் தொடர்ந்தார். ஒரு நாள் அவரது கனவில் ராயர் வந்து - நான் இருக்கிறேன். பயப்படாமல், நீ உன் சேவையை தொடர்ந்து செய் - என்று அருளினார்.

ராயர் கனவில் வந்து சொன்னதை நினைத்து மகிழ்ந்தாலும், மந்திராட்சதை கிடைக்கவில்லையே என்று நினைத்தார். அங்கிருந்து புறப்பட்டு மாட்டு வண்டியில் வந்துகொண்டிருந்தபோது, ஒரு சிறுவன் ஓடிவந்து இவரிடம் ஒரு காகித உறையைக் கொடுத்தான். அதில் இவரது பெயர் எழுதியிருந்தது. அதைத் திறந்து பார்த்தார். மந்திராட்சதை. நம் திட்டத்திற்கு ராயரின் ஆசிர்வாதம் கிடைத்துவிட்டது என்று நினைத்து, ஆனந்தக்கண்ணீர் வடித்தார். ஊருக்கு வந்தபின், நரசிம்மரின் சிலை செய்யும் வேலையைத் துவக்கினார்.

சில நாட்களில் நரசிம்மரின் சிலையும் தயாரானது. கட்டடம் தயாராகி, சிலைக்கு ஜலவாசம், தான்யவாசம் ஆகியவை நடைபெற்றது. ஒரு சுப முகூர்த்தத்தில் பிரதிஷ்டை நிச்சயம் செய்திருந்தபோதும், அவ்வா அவர்கள் மனதில் ஒரு கவலை இருந்து வந்தது. அது என்னவென்றால், இவரது குலதெய்வம் - நீரா நரசிம்மர். ஆனால் இவருக்கு அகோபல நரசிம்மரைப் பார்க்கவேண்டுமென்று ஆவல் இருந்தது. அது நிறைவேறவில்லை. திரும்பத்திரும்ப வேண்டினாலும், நீ அங்கே போகவேண்டாம் என்று கனவு வந்தது. ஏன் என்னை அங்கே போகவேண்டாம் என்று ஸ்ரீஹரி சொன்னாரோ என்று கவலைப்பட்டவாறே, பிரதிஷ்டாபனைக்கான வேலைகளையும் செய்து வந்தார் அவ்வா.

சிலை பிரதிஷ்டைக்கு இன்னும் ஒன்றிரண்டு நாட்களே இருந்தபோது, அந்த இடத்தில் உக்கிரமான தீப்பிழம்புகள் தோன்றியதாம். தம்மால் ஏதேனும் அபசாரம் ஆகிவிட்டதோ என்று கவலைப்பட்ட அவ்வா, சான்றோர்களிடம் இதுபற்றி விசாரித்தார். அவர்களும் இது அக்னி தேவனின் தரிசனம். இதனால் இடம் சுத்தம் ஆயிற்று என்றும், பிரதிஷ்டை செய்வதற்கு ஏற்ற இடமாக ஆயிற்று என்றும் கூறினர். ஆயினும் அவ்வா அவர்கள் சமாதானம் ஆகவில்லை. மேலும் அடுத்த நாளும் அதே போல் தீப்பிழம்புகள் தோன்றின. அவ்வா அவர்கள் ஸ்ரீஹரியிடன் - நீ இப்படி உக்கிரமாக இருந்தால், இப்போதும் பிறகும் என் வம்சத்தவர்கள் எப்படி வழிபட முடியும்? நான் ராயரின் சேவை செய்தபோது, சுப பலன்கள் தோன்றினவே, மந்திராட்சதை கிடைத்ததே? ஆகவேதானே நான் இந்த வேலையை செய்ய முற்பட்டேன், ஆனாலும் இந்த உக்கிர ரூபம் இப்போது ஏன் தோன்றுகிறது? - என்று மன்றாடி வேண்டினார்.

அன்றிரவு, ஸ்ரீஹரி அவ்வாவின் கனவில் வந்து - நீ அகோபில நரசிம்மரைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டாய். ஆகவே நீ இருக்கும் இடத்திற்கே வந்து நான் தரிசனம் கொடுத்தேன். இனிமேல் சாந்த ரூபத்தில் உனக்கு தரிசனம் கொடுப்பேன் என்று அருளினார். பின்னர் அடுத்த நாள் காலையில் கோயிலில் ஒரு அமைதியான சூழ்நிலை நிலவியது. 1905ம் ஆண்டு அந்தக் கோயிலை பிரதிஷ்டை செய்தார் அவ்வா.

அப்போது அவர் இயற்றிய பாடல்:

*நாரசிம்ம நின்ன பஜிசுவேனு*
*ஸ்ரீ மாரஜனகனே சூரிகளரஸ*

*பள்ளாரிஸி மெரெவந்தா*
*நாரசிம்ம நின்ன பஜிசுவேனு (நாரசிம்ம)*

*சூரபன சூரிமாடித சூரிகளபய கோரபிடிசித*
*க்ரூர தைத்யன கொரளாத ஹரித சிரி (நாரசிம்ம)*

*ஸ்ரீஷ நின்னய தாசதனக ஆஷிபனு நன்ன போஷிசனன்னு*
*தோஷதூரனே தூரனே நரசிம்மவிட்டல ஸ்ரீ (நாரசிம்ம)*

*என்ன பின்னபவன்னு மன்னிஸி இன்னு இபுரகின்னு சாரிதே*
*கன்ன மஹிமே ஸ்ரீ நரசிம்மவிட்டலனே (நாரசிம்ம)*

ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மரின் பிரதிஷ்டை ஆனபிறகு பிராணதேவர், மந்திராலய பிரபுகளின் பிருந்தாவன பிரதிஷ்டையும் நடந்தது. பிறகு ஸ்ரீ சத்யத்யானரின் மிருத்திகா பிருந்தாவனம் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்றும் விரும்பினர். அவரின் ஆராதனைக்கு சிஷ்யர்களுடன் பண்டரிபுரம் சென்றார். அங்கிருந்த ஸ்ரீ சத்யப்ரஞ்னரிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தார். அதற்கு சம்மதித்த சத்யபிரஞ்னர், மிருத்திகையைக் கொடுக்க, ஸ்ரீ நரசிம்ம க்ஷேத்ரத்தில், சத்யத்யானரின் இரண்டாவது பிருந்தாவனம் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

அவ்வா'வின் இந்த காரியத்தால், அந்த இடம் புண்ணியபூமி ஆயிற்று. மனம் மற்றும் கோயில் இரண்டும் புனிதமாயிற்று. புழக்கத்தில் இருந்த இடங்கள் புண்ய க்ஷேத்ரம் ஆயிற்று. கோயிலின் சன்னிதியில் வர்த்தி, பூ கோர்த்துக் கொண்டிருந்த பெண்கள் பெற்ற ஆனந்தம் / அனுபவம் மிகவும் அதிகம். இத்தகைய காரியங்களை செய்த அவ்வா'வை தரிசித்த அந்த காலத்து மக்கள் புண்ணியம் செய்தவர்கள்.

**லக்ஷ்மிபாய் அவர்களின் சில பாடல்கள்**

ஸ்ரீகிருஷ்ணனை தமக்குத் தோன்றினாற்போல் ஹரிதாசர்கள் வர்ணிப்பர். அவர்களின் ஞானத்திற்கேற்ப இந்த வர்ணனை இருக்கும். கோகுலத்தில் இருந்த கோபிகா பெண் ஒருவர் ஸ்ரீகிருஷ்ணனைப் பார்ப்பதற்கு புறப்பட்டபோது - அவர் செய்துகொண்ட அலங்காரத்தை லக்ஷ்மிபாய் அவர்கள் இப்படி வர்ணிக்கிறார்.

*சிருங்காரவாதளு நாரி; கொல்லதி சுந்தரி*

*சிருங்காரவாதளு மங்கள முகியே அங்கனேதானே ஜடெகள பிகிய*
*சந்ததி ஜடெ பங்காரகண்ணிணெயெ முங்குருளுகளல்லி*
*சந்திர சூர்யரு ஹொளயே அங்கனெ ரங்கனமுங்கை கிணியே (சிருங்காரவாதளு)*

*வாலிபுகுடி வாரிஜாக்ஷியு இட்டு தோரமுத்தின மூகுதியிட்டு*
*சாருகம்புக பிகிபிகி தொட்டு ஹார பதகவு கொரளொளகிட்டு*
*பாரிபாரிகே பொகளுவுதெஷ்டு (சிருங்காரவாதளு)*

*வஜ்ரத ஹஸ்த கடகவனிட்டு பர்ஜரி பீதாம்பரவனுட்டு*
*கெஜ்ஜெ அந்திகே பாததொளகிட்டு ஹெஜ்ஜெ ஹெஜ்ஜெகே ஆ ஷப்தகளிட்டு*
*சஜ்ஜனப்ரிய நம்ம நரசிம்ம விட்டலன கொடுவே தவரிததி எம்புவ குட்டு (சிருங்காரவாதளு)*

கோபிகைப் பெண்கள் ஸ்ரீகிருஷ்ணனைப் பார்க்கப் போகும்போது எப்படிச் சென்றார்கள் என்பதை லட்சுமிதேவம்மா இப்படி பாடுகின்றார்.

*நோடித்யா சகி கூடி ஆடுவா வனகளா*
*ரூடிகள கின்னேடுயில்லா நோடோ ஸ்தளகளு (நோடித்யா)*

*ப்ருங்ககிளி சாரங்க மாதங்க நோடிதேவிஹங்க*
*கோரங்க ஷிங்ககள நோடித்யா*

*ஷிஸ்திலி ஆடுவா கஸ்தூரி ம்ருககளு ஐத்திலி ஸ்வரவெத்தி கூகுவோ கிளிகளு*
*தளதளிசுவா மயூரி பிககளு ஜளபிஸி ஹாடுவா கோகில ஸ்வரகளு*
*கேதகி க்யாதிகெ கமல குசும நோடித்யா ! நூதனவாகித்த பாரிஜாதவ நோடித்யா*

*மருக ஜாஜிமல்லிகே இருவந்திகெதவனா சுரகி சம்பகியிந்த*
*தோர்வதீவனா*

*ப்ரமர கீதகளிந்த மனவு ப்ராந்திகொள்ளுது*
*அமர வந்திதனிந்த கூடி ஆட்வ ஸ்தளவிது*
*பரம புருஷ நரசிம்ம விட்டலராயன பாததூளிகளிந்த*
*ஷோபிதவாகிதீவன*

பல்லவியிலிருந்து அனைத்து சரணங்களிலும், தன் உபாசனா மூர்த்தியான விட்டலனை இப்படியாக வர்ணிக்கிறார்.

*கண்டே கண்டே பண்டரீசனா ஸ்ரீ பாண்டுரங்கனா*

*புண்டரீகவரத ஸ்ரீ பாண்டுரங்கனா (கண்டே)*

*பீமதீரதி ஸ்வாமி நிந்திஹ நேமதிந்த*
*ப்ரேமதோருவ காமிதவரத நிஸ்ஸீம*
*கட்டி கல்லனு கொட்டு பகுதர ஸ்ரேஷ்ட பதவியோள*
*இட்ட ஆ மஹிமன திட்ட ஸ்ரீ நரசிம்ம விட்டலன (கண்டே)*

மேலும், அடுத்த சரணத்தில் கிருஷ்ணனின் பால லீலைகளை இப்படியாக வர்ணிக்கிறார்.

*அம்பேகால் இக்குத்தா அங்களதொள் ஆடுத்தா சந்திரன்ன நோடி நுடியுத்தா*
*நலியுத்தலா கோபமங்கள முகவு தோருத்தா*
*மண்ணுமெல்லுவரேனோ சண்ண கிருஷ்ணனே நீனு*
*சின்னனே பாயி தெகெயெந்து தெகெது நோடிதளு*
*பாலன பாயி மஹிமெகளு ஹிரிய வதனதொளு*
*ஹதினால்கு லோகவ நோடி பயதிந்த கோபி நுடிதாளு*
*நுடிது தானோடிதளு பாலன பால மஹிமெகள*

ஸ்ரீராகவேந்திரரை அனைத்து ஹரிதாசர்களும் கல்பவ்ருட்சம், காமதேனு என்றெல்லாம் புகழ்ந்து பாடியுள்ளனர். கலியுகத்தில் கலி கொடுக்கும் துன்பங்களை தடுத்து நிறுத்தி காப்பாற்றுபவர் இவர். பாரோ, பாபா, பாரம்மா என்றெல்லாம் கூப்பிட்டு ஸ்ரீராகவேந்திரரைப் பற்றி பாடியிருக்கின்றனர் ஹரிதாசர்கள்.

அதைப் போலவே தேவம்மாவும் ஸ்ரீராகவேந்திரரைப் பற்றி பாடியிருக்கிறார். ராகவேந்திரா என்னும் பெயரில் உள்ள ஒவ்வொரு எழுத்திற்கும் இவர் இப்படியாக விளக்கி பாடியிருக்கிறார்.

**ராகவேந்திர ஸ்தோத்ரம்**

*ராகவேந்த்ர எந்து நுடிவவரிகே அனுராகதி சலஹுவரா*
*பாகவதப்ரிய யோகி ஜனனுத ஸ்ரீ ராகவேந்திர ராயா (ராகவேந்திர)*

*ராமத்யானவனு மாடுதலனுதின ஜயிஸிதி ராக்ஷசரா*
*ராகவனங்க்ரிகளனு அனுராகதி சேவிபுர ராமராயர வியாதிகளளிது*
*சேவிகொளுதிஹரா ரமா வல்லபனாஸ்ரய மாடி ராஜ்யவன்னாளிதரா (ராகவேந்திர)*

*காதுக தனுஜர காலவிது எந்து நீவெணிஸிதெ கலியுக*
*கன பராக்ரமதிந்த மெரெவிரி சுயதீந்த்ர நீ*
*கன ஜாட்யகள களெது ஜனரிகெ சுரிசித சுக மோக*
*காபரிந்தலி பந்து ஆதுரரிகெ களிதியோ நீ ஆக (ராகவேந்திர)*

*வேத சாஸ்திர பாராயண மாடுத விருந்தாவனதொளகிருவே*
*விருதெயிந்தலி பந்தாதுரரிகே அதி சுகவன்னு சுரிவே*
*வேதவியாசரு மொதமொதலாதவரொளு ஆதாரதொளிருவே*
*வேஷ தாளி நீ யதியாகி ஈ ஜகதொளு நீ மெரெவே (ராகவேந்திர)*

*பிரம தப்பிதந்தே பவதொளு பித்து பிடுவேனு ராகவேந்திரா*
*திராவிட படக மத்ஸ்ய மொதலாதவரொளு திராக்ஷபலதந்தே*
*மதுரவு தோரி சலஹோ குணசாந்திரா திராவிட படக மத்ஸ்ய*
*மொதலாத ஜன சேவிபரோ யதீந்த்ரா திரவ்யபதி*
*ஸ்ரீ நரசிம்ம விட்டலன தோரொ ராகவேந்திரா (ராகவேந்திர)*

**ராகவேந்திர பாடல்**

*நோடித்யா நோடித்யா*

*நோடித்யா ஸ்ரீ குருகளன்னு ஈட்யாடி கொண்டாடித்யா*
*ஆஹா நோடி மனதல்லி கொண்டாடுத்தா குருகள*
*ரூடிவளகெல்லா ஈடில்லா யதிகள (நோடித்யா)*

*நிந்தரெயரல்லி முக்ய ப்ராண*
*ஜகதந்தரதொளகெல்லா அதிப்ராணி*
*அந்தரங்கதல்லி ஷாந்த மூர்த்திகளு*
*மந்திராயலதல்லி நிந்தித்த குருகளா (நோடித்யா)*

*ஹொத்த காவிஷாடியிந்தா ஸ்ரீமுத்ரே ஹச்சித தேகதிந்தா*
*மத்வாதி கேசரிகந்தா பலு முத்த சுரிவ நாமதிந்தா*
*தித்த அங்கார முத்ரெயொளகக்ஷதெ எத்து பருவந்தா முத்து குருகள (நோடித்யா)*

*முத்து பிருந்தாவனத மாட அல்லித்து ஜனர ஒரெநோட*
*பிரசித்த ராயர பூர்ணநோட நம்மல்லித்த பாபகளெல்ல ஓட*
*ஹத்துவாகன நரசிம்ம விட்டலா அல்லித்து வரவ கொடுவ கோபாலகிருஷ்னன்னா (நோடித்யா)*

**மங்களாரத்தி பாடல்**

*மங்களாரத்தி பெளகிரே ஸ்ரீரங்காமுரளிதராகே*

*இந்திர வரதகே சுந்தர ரூபகே நந்தானந்தன கோவிந்தகே*
*வாசுகி சயனகே தோஷதூரகே சாசிர முக சர்வேசகே*
*நரம்ருகரூபகே நரசிம்ம விட்டலனே சாசிர முக சர்வேசகே*

**லாலி பாடல்**

*லாலி கஷ்யப கோத்ர பரம பாவித்ர*
*லாலி த்ரிகுணாகாத்ர லக்ஷ்மி களத்ரா (லாலி)*

*நீரு ஒளகே மனெயு மாடி ஓட்யாடி*
*கொரெயனே பூசெதுகடு பூமிகெ கடெதாடி*
*மொரெயனே முச்சே கைகாலு தொக்யாடி*
*கோர ரூபவ தரிசே பலிதானவனே பேடி (லாலி)*

*கொடலிய பிடிது மாதெய சிரவனெ ஓடிது*
*மடதிகோஸ்கர தசசிரன சிரவன்னு ஒடெது*

*துடுகுதனதி மொசரு கடிகெகளன்னு ஒடெது*
*மடதியர பிரதபங்க மாடிதியோ பீடிது (லாலி)*

*ஹயவ சேரித ஹரிய பஹு ஜனர பூரியே*
*செலுவ மூர்த்தி தொட்டியோள் முத்து சரியே*
*பரமபுருஷ சத்பக்தர சிரியே*
*பவனப்ரிய நரசிம்ம விட்டலா தொரெயே (லாலி)*

லட்சுமிதேவம்மா அவர்கள் இறுதியாக இயற்றியது எனக் கூறப்படும் பாடல்

*தப்பெணிசுவரெயே தாமரதளாக்ஷ*
*அப்பனே ஒப்பிதரே தப்பெல்லி இஹதே (தப்பெணிசுவரெயே)*

*அக்கரத அஜமிளன அக்கனா மகனேனோ*
*சிக்க த்ருவனா தாயி சிக்கம்மனேனோ*
*ரக்கசாசுத நினனே ரொக்க கொட்டனோ ஏனோ*
*இக்கெனே பவதொளகே ஹேகே நோடுவரேனோ (தப்பெணிசுவரெயே)*

*அந்த்யஜளெ கூடி அனந்த கர்மவு மாடி*
*(அந்த்யதலி) அந்ததலி நின்னொம்மெ நெனெவெனேனோ*
*அந்த ஷோபசன மகள காந்தனெந்தெனிசிதி*
*கந்துபிதனே நின்ன கருணவித்தரே சாகோ (தப்பெணிசுவரெயே)*

*நாமாடித அபராத நீ க்ஷமிசதித்தரே*
*யாரு பொரெவரோ என்ன வாரிஜாக்ஷ*
*தீர ஸ்ரீ நரசிம்மவிட்டலா நின்ன ஆதீனவாதெனோ*
*இன்னேனு மாடிதரு மண்டோ நீனு (தப்பெணிசுவரெயே)*

அவ்வா'வின் சில பாடல்களே கிடைத்துள்ளன. அவரின் பேரர்களான M.பிரகலாத், பெல்லாரி இவர்களுக்கு கடிதம் எழுத முற்பட்டோம். அவர்களிடமிருந்து பதில் எதுவும் வரவில்லை. அவரது சம்மந்திகள் சொண்டூரில் இருக்கின்றனர் என்றும், பின்னர் அதொனியில் உள்ளனர் என்றும் தெரியவந்தது. அவர்களுக்கு எழுதிய கடிதத்திற்கும் பதில் எதுவும் வரவில்லை. ஆகவே கிடைத்த தகவல்கள், பாடல்களை மட்டும் இங்கே கொடுத்துள்ளோம்.

ஹரபனஹல்லி பீமவ்வா மற்றும் ஹெளவனகட்டே கிரியம்மா இருவரையும் தன் ஆதர்சமாக நினைத்து, அவர்களின் பாடல்களை ஒரு உதாரணமாக வைத்துக்கொண்டு, லட்சுமிதேவம்மா, ஒரு சிறந்த ஹரிதாசியாகி பாடல்களை இயற்றியது மட்டுமல்லாமல், ஸ்ரீஹரியிடம் சிறந்த பக்தி செய்து, பக்திமானாக விளங்கினார்.

நிஜமான பக்தர்களின் இதயம், அந்த ஸ்ரீஹரி இருக்கும் கோயில் எனச் சொல்லலாம். அவர்கள் பேசும் பேச்சு ஒவ்வொன்றும் அவனைத் துதிக்கும் ஸ்தோத்திரம் ஆகும். இந்த ஜென்மம் எடுத்ததே நற்செயல்களைச் செய்வதற்குத்தான் என்று அறிந்த லட்சுமிதேவம்மா, அவரிடம் வந்தவர்களுக்கும் இந்த அறிவுரைகளைச் சொல்லி, அவர்களிடமிருந்தும் நற்செயல்களைச் செய்ய வைத்தார். இப்படியாக 85 ஆண்டுகளைக் கழித்த இவர், 1950ம் ஆண்டு ஜனவரி முதல் வாரத்தில், இப்பூவுலகை நீத்து இறைவனடி சேர்ந்தார்.

இவ்வுலகில் தர்மம் குறைந்து அதர்மம் வளர்ந்தபோது, தர்மம் மற்றும் கலாச்சாரம் ஆகியவற்றை மீண்டும் வளர்ப்பதற்கு - அந்த ஸ்ரீஹரியின் சேவகர்களாக வந்து, நல்வாழ்க்கை வந்து, மற்றவர்களுக்கும் தர்மத்தை போதித்து, பின்வரும் சந்ததியினருக்கு ஒரு நல்வழிகாட்டியாக இருந்து மறைந்த இத்தகைய ஹரிதாசிகளை எப்போதும் நினைப்போமாக.

***

# நைவேத்தியம்

2011ல் வெளியிடப்பட்ட புத்தகம்
கன்னட மூலம் : திரு. ஹாரதி பிரகலாதாச்சார்
தமிழில் : திருமதி. ஜெயஸ்ரீ ராம்
சரிபார்த்தல் : T.V.சத்ய நாராயணன்




நைவேத்தியம் என்றால் சாதாரணமாக நைவேத்தியம் செய்தல், நைவேத்திய பொருட்களை அர்ப்பணம் செய்தல் என்றே நாம் அறிவோம். அடுத்து, யார் யாருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும், எதை அர்ப்பணிக்க வேண்டும் போன்ற வினாக்கள் இயற்கையானதே. இந்த வினாக்களை பற்றி ஆழமாக விவாதிக்கும் போது மட்டுமே உண்மையான பொருளை அறியமுடியும். இல்லையென்றால் நைவேத்தியத்தின் உண்மையான பொருள் புரியாமல், மற்றவர்கள் எப்படி செய்கிறார்களோ அப்படியே நாமும் (அதற்கான பொருள் புரியாமல்) செய்வது போல ஆகிவிடும். (நாம் தற்பொழுது செய்வது இப்படியே). இருக்கட்டும்.

நைவேத்தியம் - இது ஒரு உள்ளர்த்தம் பொருந்திய உணர்ச்சிகரமான சொல். இதனை நாம் ஆழமாக சிந்திக்கும் போது புரிகிறது. அதன் சிறப்பினால் நம் உடல், மனம் மற்றும் பொருட்கள் தூய்மை அடைகின்றன என்பது ஞானிகளின் கருத்து. (இந்த முயற்சியை நாம் செய்வதில்லை).

அப்படி என்றால், நைவேத்தியம் எப்படி செய்ய வேண்டும்? நம்மில் ஒரு வழக்கம் உள்ளது. நைவேத்தியம் செய்யும் காலத்தில் "த்வாதஸ ஸ்தோத்ரம்" பாடி நைவேத்தியம் செய்ய வேண்டும் என்பதே நியமம். பன்னிரண்டு அத்தியாயங்கள் சொல்ல இயலாதவர்கள் ஒரு அத்தியாயமாவது சொல்ல வேண்டும். அதுவும் இயலாதவர்கள் ஒரு ஸ்தோத்ரத்தின் முதல் வரியாவது சொல்ல வேண்டும். அதுவும் இயலாதவர்கள் "த்வாதஸ ஸ்தோத்ரம்" ஸ்ரீமத்வர் இயற்றியது என்பதை நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று கூறியுள்ளனர். ஏன் என்றால், ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்று வைத்திருக்கும் பொருட்களில் ஏதாவது பிழை அல்லது குறை (விஷம், முடி, புழு, பூச்சி போன்றவை) இருந்தால், "த்வாதஸ ஸ்தோத்ரம்" பாடி நைவேத்தியம் செய்வதால் அந்த குறைகள் நீங்குகிறது என்பது நம் முன்னோர்களின் எண்ணம்.

உதாரணத்திற்கு, ஆசார்யர் மத்வர் காலத்திலேயே, "த்வாதஸ ஸ்தோத்ரம்" தாமே இயற்றி இருந்தாலும், அதற்கு ஒரு உருவம் கொடுத்து அதன் மகிமையை உணர்த்த வேண்டும் என்று யோசித்திருந்த காலத்தில், அவருடைய கிரந்தங்களை சுமந்து வந்த ஒரு எருதுக்கு விஷம் கொடுத்து விட்டனர். இதற்கு காரணம், ஒரு முறை மத்வர் பாடம் நடத்திக் கொண்டிருந்தபோது, மாணவர்கள் - "குருவே, உங்களுக்கு பிறகு இந்த சித்தாந்தத்தை யார் பரப்புவார்கள்?" என்று கேட்டபோது, ஆசார்யர், "இந்த எருது" என்று சுட்டிக் காட்டினார். மாணவர்களோ தம்மில் ஒருவரை கூறுவார் என்று இருந்ததால், கோபம் கொண்டு, எருது இருந்தால்தானே என்று அதை பாம்பு கடித்து இறக்க சாபமிட்டனர். அப்படியே, அந்த எருதும் பாம்பு கடித்து இறந்தது.

வழக்கம் போல் பாடம் நடக்கும் காலத்தில் எருது வராததன் காரணத்தை விசாரித்த பொழுது, எருது இறந்து விட்டதாக பொய் உரைத்தனர். உடனடியாக தாமே இயற்றிய "த்வாதஸ ஸ்தோத்ரத்தை" எருதின் காதில் ஓதி, மத்வர் அதை உயிர்ப்பித்தார். இதன் கருத்து, த்வாதஸ ஸ்தோத்ரம் பாடி நைவேத்தியம் செய்வதால் விஷமும் ஜீரணம் ஆகிறது என்பதே. (எருது கூட த்வாதஸ ஸ்தோத்ரம் சொல்லி கொண்டிருந்தது என்றும் உண்டு).

அப்படி என்றால் நைவேத்தியம் எப்படி அர்ப்பணம் செய்யப்பட வேண்டும்?

இங்கு நாம் மூன்று முக்கிய அம்சங்களை கவனிக்க வேண்டும்.

1. நைவேத்தியத்தை யாருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்?
சாலிக்ராமம் முதலான ப்ரதிமைகளின் உள் உறையும் ஸ்ரீஹரிக்கே நாம் நைவேத்தியம் செய்கிறோம் என்னும் அம்சம் பிரதானமானது.

2. எதை அர்ப்பணிக்க வேண்டும்?
நைவேத்தியத்திற்கு உகந்த, "தூய்மையான பொருட்கள்" அதாவது பால், பழம், அன்னம் முதலானவை. இங்கும் அந்தந்த பொருட்களில் ஸ்ரீஹரியே உள் உறைபவனாக இருக்கிறான் என்ற சிந்தனை இருக்க வேண்டும். [தூய்மையான பொருட்களை அர்ப்பணம் செய்தால் அதற்கு தகுந்த பலன். தூய்மையற்ற பொருட்களை அர்ப்பணம் செய்தாலும் அதற்கு தகுந்த பலன். இரண்டையும் அர்ப்பணம் செய்யலாம். ஆனால் இரண்டுமே அவனுக்கு (ஸ்ரீஹரிக்கு) சம்பந்தம் இல்லை என்ற ஞானம் அவசியம்]

3. யார் அர்ப்பணம் செய்ய வேண்டும்? நம்மைப் போன்ற ஜீவ கோடிகள், சாதனை புரிபவர்கள், மனிதர்கள் எப்படி அர்ப்பணம் செய்ய வேண்டும்? முதலான கேள்விகள்.

தூய்மையான பொருட்களில் உள் உறையும் ஸ்ரீஹரி,
சாலிக்ராம ப்ரதிமைகளில் உள் உறையும் ஸ்ரீஹரி,
நைவேத்தியம் அர்ப்பணம் செய்பவரான நம் உள் உறையும் ஸ்ரீஹரி -

இவ்வாறான மூன்று ரூபங்களின் ஐக்கிய சிந்தனை செய்து, அவனே பிம்பன், அவனே இந்த சாலிக்ராம & பிரதிமைகளில் உள் உறைந்துள்ளான், அந்த பிம்பனுக்கு இந்த நைவேத்தியம் அர்ப்பணம் செய்கிறேன் என்று, குறைந்தபட்சம் 12 முறை நாராயணனை ஸ்மரித்து சாலிக்ராமத்தின் மேல் பூ, துளசி ஏற்றினால் அதுவே நைவேத்தியம் என்பது ஸ்ரீஹரிதாஸர்களின் கருத்து. (இவற்றை நாம் செய்தோம் என்றால்)

இரண்டாவதாக : பூஜா காலத்தில் மட்டும் இந்த நைவேத்திய அர்ப்பணம் என்று ஆகிவிடக்கூடாது. அதற்குப் பிறகும்கூட, இரவு உறங்கும் வரை நடக்கும் எல்லா நிகழ்வுகளையும் அவனுக்கே அர்ப்பணம் செய்வதும் நைவேத்தியமே ஆகிறது. நாம் உணர்வு, நிகழ்வு, விஷயம் முதலானவைகளில் மூழ்கி இருந்தாலும், அவனை ஸ்மரித்து, இதுவே உனக்கு நைவேத்தியம் என்றாலும்கூட அதுவும் நைவேத்தியமே (இவற்றை நான் செய்து கொண்டிருக்கிறேன் என்றால்).

மூன்றாவதாக : பரமாத்மா கொடுத்திருக்கும் இந்த உடலை, அவனுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும். இதற்கு அவனது ஸ்மரணை அவசியம். "ஸ்ரீஹரி ஸ்மரணெ மாடு நிரந்தர" (எப்பொழுதும் ஸ்ரீஹரி ஸ்மரணை செய்). ஏன் எப்பொழுதும் ஸ்ரீஹரி ஸ்மரணை செய்ய வேண்டும் என்றால், அதன் பலனை இவ்வாறு கூறுகிறார்கள். அதுவே "மோட்சத்திற்கு சாதனை" என்று. இதன் கருத்து நிரந்தரமாக ஸ்ரீஹரி ஸ்மரணை செய்தால், சந்ததம் சிந்தயே நந்தம் அந்த்யகாலே விசேஷத: - அதாவது, கடைசி காலத்தில் விசேஷமான பலன். அதாவது ஸ்ரீஹரியை நிரந்தரமாக ஸ்மரித்து கொண்டு "இந்த உடல் உன்னுடையது" என்று அறிந்து, அவனுக்கே நாம் புத்தி பூர்வமாக அர்ப்பணித்து கொண்டு இறந்தால், (இந்த உயிரானது, உடலை பிரிந்தால்) அதுவே ஸ்ரீஹரிக்கு உண்மையான நைவேத்தியம்.

இப்படி சிந்தனை செய்தால், சமர்ப்பிக்கப்பட்ட பொருட்களில் உள் உறைந்திருக்கும் ஸ்வாக்யரஸ'வை, அந்த ஸ்ரீஹரி ஏற்றுக்கொள்கிறான் என்பது ஞானிகளின் கருத்து. அந்த ஸ்வாக்யரஸமே ஸ்ரீஹரியின் நாமரூபமும் ஆகும். இந்த சிந்தனையே நமக்கு மோட்சத்தைக் கொடுக்கக் கூடியதும் ஆகும். இப்படி சிந்திப்பவர்களையே, 'முமுக்ஷூகள்' என்பர் ஞானிகள்.

எது அந்த ஸ்வாக்யரஸம்? அதாவது நம் கடைசிக் காலத்தில், அவனது தரிசனத்தை, ஸ்ரீஹரி நமக்கு எப்படி அளிக்கிறான் - என்பதே நைவேத்தியத்தின் பலன். நமது உடல் அழியக்கூடியதாக இருப்பதால் அதற்கு அதிக முக்கியத்துவம் இல்லை. ஆனால், சாதனை புரிந்து பரமாத்மாவின் தரிசனம் கிடைக்கப் பெறும் இந்த ஜீவன், எப்பொழுதும் சுகமாக இருப்பான் என்பதே இதன் கருத்து.

இது புரியும்படி இல்லை, ஏதோ புதிதாகச் சொல்கிறீர்கள்.

அப்படியா? புரியும் வகையில் சொல்கிறேன், கேளுங்கள்.

நான்காவதாக, நைவேத்தியத்தின் அர்த்தத்தை தெரிந்து கொள்வதற்காக, ஹரிகதாம்ருதஸாரத்தில், ஜகன்னாத தாசர், 'நைவேத்திய ப்ரகரண' ஸந்தியில் 25 செய்யுள்களில், இதன் விசேஷத்தை கூறியுள்ளார். (பாருங்கள்)

முதலாவது முறை, பரமாத்மாவின் மகிமையை அறிந்தால் ஒழிய நைவேத்தியம் அர்ப்பணம் செய்வது சாத்தியம் இல்லை. அவனுடைய குணங்களை அறிந்தால் ஒழிய, நைவேத்தியம் அர்ப்பணம் செய்யும் அருகதை நமக்கு வருவதில்லை. அவனது செயல்களை அறிந்து கொள்ளாத வரையில், நமக்கு பக்தி வருவதில்லை. இவையெல்லாம் ஒன்றை ஒன்று விட்டிடமுடியாத பந்தம் ஆகும். இப்படியாக நைவேத்தியம் செய்வது எவ்வளவு சுலபமோ அவ்வளவு கடினமானதாகும்.

அன்னமானி ஷஷாங்கனொளு
காருண்யஸாகர கேஸவனு பர
மான்னதொளு பாரதியு நாராயணனு பக்ஷ்யதொளு
ஸொன்னகதிரனு மாதவனு ஸ்ருதி
ஸன்னுத ஸ்ரீலக்ஷ்மி க்ருததொளு
மான்ய கோவிந்தாபிதனு இருத்திப்பனெந்தெந்து ||14||

இப்படியாக 12 செய்யுட்களில், பொருட்களில் இருக்கும் பரமாத்மாவின் ரூபம், ரமா ரூபம், வாயு ரூபம் / வாதிராஜர ரூபம், பொருட்களில் தத்வாபிமானி தேவதைகள் மற்றும் ரூபம், ரஸம், கந்தம் (வாசனை), ஸ்பருஷங்களில் இருந்து, அந்தந்த பெயருடையவனாகி, அதிலிருந்து வேறுபட்டவனாகி, அதன் உள் உறைபவனாக தானே இருக்கிறான் என்று அறிந்து துதிப்பதே நைவேத்தியம்.

32 பிரிவுகளில் வரும் மூல தேவதைகள், ப்ரத்யதி தேவதைகள் அந்தந்த பொருட்களில் இருந்து அந்தந்த ரூபம், வாசனை, ருசி ஆகியவற்றை கொடுத்திருப்பதாக அறிய வேண்டும் என்கிறார்கள். ஒவ்வொரு நாளும் இந்த வகையில் சிந்தித்து கொண்டிருக்கிறேன், ஆனால் தத்வாபிமானியை அறியவில்லை என்றால் நைவேத்தியம் பூர்த்தி அடைவதில்லை என்று ‘ஸத்தத்வ ரத்னமாலெ’யில் இதன் ஆழமான விவரம் உள்ளதை அறிய வேண்டும்.

ஐந்தாவதாக:
விஜயவிட்டல தாசர், தம்முடைய ஒரு சூளாதியில் கூறுவதாவது

அன்னாபிமானி சந்த்ர அல்லி கேஸவ பர
மான்னதல்லி பாரதி நாராயண
பூர்ண பக்ஷகளல்லி ஸூர்ய மாதவ க்ருதகே
கன்யா லக்ஷ்மி அல்லி கோவிந்தனோ
பெண்ணெ பாலினல்லி ஸரஸ்வதி விஷ்ணுஷிரோ
ரன்ன முடிகெயல்லி வாகீஷ மதுஸூதன
பெண்ணெயல்லி வாயு அல்லி த்ரிவிக்ரம|

கன்னததியல்லி சந்த வருண வாமன|
சென்ன ஸூபதலி கருட ஸ்ரீதரதேவ
முன்னெ பத்ர ஸாகதல்லி மித்ரனு ஹ்ருஷீகேஸ|

இன்னு பலஸாககளல்லி ஸர்ப பதுமநாப
பண்ணபெ ஆல்மதல்லி பார்வதி தாமோதர
அன்னாம்ருபதி ருத்ர அல்லி ஸங்கர்ஷண
கண்ணிகே இம்பாத ஸக்கரெயல்லி ஸுரவ
ரேண்ய இந்த்ரனு தத்கதனு வாசுதேவ / பன்னங்க
ஸாயி நம்ம விஜயவிடல ரேயன
பாவன்ன மூர்திய நெனிஸி பாவித்ர நீனாகு ||1||

ஐது நுடிய ஈ ஸுளாதியல்லி கொனெயல்லி
சிந்தனெ ப்ரகார வினியோகமாடு ஸ்ரீ காந்த
விஜயவிடல கிருஷ்ணகெ பதார்தகளா ||6||

மேற்கண்ட இரு வரிகளில் சூளாதியை முடிக்கும் விஜயதாசர், ‘பதார்த்தங்களை வினியோகம் செய்’ என்று கூறியுள்ளார். பதார்த்தங்கள் என்றால் சாப்பிடும் பண்டங்கள் மட்டுமல்ல, இந்த உடலும் ஆகும். இந்த உடலில் இருந்து மனத்தின் மூலம், மேலே கூறியபடியே சிந்தனை செய்து ஸ்ரீகாந்த விஜயவிட்டலனாத பிம்பனுக்கு அர்ப்பணம் செய். நைவேத்தியம் செய்யும்போது பொருட்களுடன் இந்த உடலையும்கூட அர்ப்பணம் செய்வது மகத்தானது. இதையெல்லாம் சேர்த்து, “தனு நின்னது ஜீவன நின்னது, அனுதின பாஹோ ஸுகதுக்க நின்னதய்யா” என்றனர் ஞானிகள்.

இந்த மாதிரியான சிந்தனை செய்கிறாயா என்றால், அதற்கான பதில் முரண்பாடே. எனக்கு யாரும் சொல்லிக் கொடுக்கவில்லை. அவ்வளவு மட்டும் ஒப்புக் கொள்ளவேண்டும். மனம் போன போக்கில் அர்த்த பூர்வமான சிந்தனை இல்லாமல் நைவேத்தியம் செய்தேன் அல்லவா?

ஆறாவதாக:

| | பொருட்கள் | அபிமானி தேவதை | உள் உறைந்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபம் |
|---|---|---|---|
| 1 | அன்னம் | சஷாங்க | கேசவ |
| 2 | பாயசம் | பாரதி | நாராயண |
| 3 | இனிப்பு பதார்த்தங்கள் | சூர்ய | மாதவ |
| 4 | நெய் | ரமாதேவி | கோவிந்தா |
| 5 | பால் | சரஸ்வதி | விஷ்ணு |
| 6 | மண்டிகெ | பிரம்மா | மதுசூதன |
| 7 | வெண்ணெய் | வாயு | த்ரிவிக்ரம |
| 8 | தயிர் | வருண & சந்திர | வாமன |
| 9 | பருப்பு | கருட | ஸ்ரீதர |
| 10 | கீரை வகைகள் | மித்ராக்ய சூர்ய | ஹ்ருஷிகேச |
| 11 | காய்கறிகள் | சேஷ | பத்பனாப |
| 12 | துவர்ப்பான பொருட்களில் | கௌரி | தாமோதர |
| 13 | சாம்பார் | ருத்ர | சங்கர்ஷண |
| 14 | சர்க்கரை / வெல்லம் | தேவேந்திர | வாசுதேவ |
| 15 | தாளிக்க பயன்படுத்தும் பொருட்கள் | ப்ருஹஸ்பதி | பிரத்யும்ன |
| 16 | கசப்பான பொருட்களில் | யமதர்ம | அனிருத்த |
| 17 | பெருங்காயம், ஏலக்காய், கற்பூரம் முதலியன | மன்மத | புருஷோத்தம |
| 18 | உப்பு | நிரருதி | ஜனார்த்தன |
| 19 | வறுத்த பதார்த்தங்களில் | ஜயந்த | அதோக்ஷஜ |

இதற்கும் மேலே அறிய விரும்பினால், இந்தப் பதிவு அனுமனின் வாலைப் போல் நீண்டு கொண்டே இருக்கும்.

இப்படியாக அந்தந்த பொருட்களில் இருக்கும் தத்வாபிமானி (தத்வதேவதா), அவர்களின் உள் உறையும் முக்யப்ராணர், அவரின் உள் உறையும் ரமாரூபம், அவள் உள் உறையும் முடிவில்லா அவதாரியான பிம்பனாத ஸ்ரீஹரியை நினைத்து "கெரெய நீரன்னு, கெரெகெ செல்லி" என்பதற்கேற்ப, அவன் கொடுத்திருப்பதை நினைவில் நிறுத்தி, அவனுக்கே அர்ப்பணம் செய்வதே நைவேத்தியம்.

இப்படியாக நைவேத்தியம் செய்வதன் விளைவு என்ன? மேலே கூறிய நைவேத்திய முறையை சரியாக அறிந்து அர்ப்பணிக்கும்போது, அந்தந்த பொருட்களில் இருக்கும் 'ஸ்வாக்யரஸம்' என்ற அம்சத்தை - அது அந்த ஸ்ரீஹரியின் ரூபமே ஆகும் - தன் கண் பார்வையினால் பார்க்கிறான். அந்த ரூபம் அவனிடம் சென்று சேர்ந்தால் மட்டுமே, நைவேத்திய பொருட்கள் பரிசுத்தம் ஆகின்றன. பின்னர் அதை ரமா, ப்ரஹ்மா, வாயு, சரஸ்வதி, பாரதி (பரசுக்லத்ரயருக்கு) அர்ப்பித்து, நாம் அதை எடுத்துக் கொண்டால், அது சுத்த மிதமான ஆகாரம் ஆகிறது.

இதை திரும்ப அக்னியில் இடும்போது 'வைஸ்வதேவ' என்று ஆகிறது.

அன்னத்தில் சிறிதளவு எடுத்து, 3 பகுதிகளாக்கி,

* அதன் முதல் பகுதியை விஷ்வக்ஸேனனுக்கும்,

* 2ம் பகுதியை கருட, ஸேஷ, ருத்ரருக்கும் அர்ப்பித்து, பின்னர் 33 கோடி தேவர்களுக்கும், 33 கோடி நதி அபிமானி தேவதைகளுக்கும், 33 கோடி ரிஷிகளுக்கும், 9 கோடி தத்வாபிமானிகளுக்கும் தாரதம்ய முறையில் அர்ப்பணம் செய்து, கடைசியாக புஷ்கரனுக்கு நைவேத்தியம் அர்ப்பணம் செய்து மனப்பூர்வமாக பிரார்த்தனை செய்ய வேண்டும்.

* 3வது பகுதி அன்னத்தை பலிஹரணனுக்கு உபயோகப் படுத்தவேண்டும். (இங்கு கங்கா, பசுவை ஸ்மரிக்கலாம்)

வைஸ்வதேவ எதற்கு? விக்ரகங்கள் மற்றும் சாலிக்ராமங்களில் நேரில் காணப்படாத ரூபத்தில் அர்ப்பணம் செய்யப்பட்டால், நேரில் காணப்படும் ரூபமான அக்னிக்கு ஆஹுதி கொடுப்பதே வைஸ்வதேவ எனப்படும்.

பிறகு, யதிகளுக்கு (சன்யாசி) 'ஹஸ்தோதக' கொடுக்க வேண்டும். மேற்கண்ட முறையில் தயாராகாத அன்னத்தை சன்யாசிகள் ஏற்றுக் கொள்வதில்லை.

இந்த மாதிரியான அக்னிகார்யம் மற்றும் ஹஸ்தோதகம், 5-10 நிமிடங்களில் முடித்தபின் அதிதிகளுக்கு (எதிர்பாரா விருந்தினர் யாரேனும் இருந்தால்) கொடுத்து, பின்னர் நாம் உண்ண வேண்டும் என்பதே ஞானிகளின் வாக்கு.

ஆமாம், இந்த மாதிரியான சிந்தனை செய்தவர் இந்த உலகில் யாராவது இருக்கிறார்களா? என்று கேள்வி எழுப்பினால், அதற்கான விடை நமக்குத் தெரியாது, நாம் செய்வதில்லை என்ற போதிலும், கிரந்தங்கள் சொன்னவை வீண் இல்லை. இவற்றை அறிந்தவர்கள் யாருமே இல்லை என்று கூற முடியாது. உதாரணமாக, 'ஸ்ரீவித்யாபூர்ண தீர்த்தர்' அனுபவம் மிக்க சன்யாசி. நைவேத்தியம் செய்யும் காலத்தில் பாயசத்தில் சர்க்கரைக்குப் பதிலாக உப்பு சேர்த்திருப்பதை கண்டுபிடித்துக் காண்பித்தார். சமையல் நைவேத்தியத்திற்கு உகந்ததாக இல்லை என்பதால் கபில காவிரியில் ஊற்றி, வேறு சமையல் செய்து ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்தார். இது ஒரு சிறந்த சிந்தனை.

ஸ்ரீவித்யாவாரிதி தீர்த்தர் மற்றும் ஸ்ரீவித்யாரத்னாகர தீர்த்தரிடம்கூட இந்த மாதிரியான சிந்தனை இருந்தது தெரிய வருகிறது. இருவரும் ப்ரம்மரந்த்ரத்தின் மூலம் இவ்வுலகை நீத்தனர் (பிரம்மரந்திரம் = உச்சந்தலை வழியாக உயிர் பிரிதல்) என்று பெரியவர்கள் வாயிலாக கேட்டிருக்கிறோம்.

ஸ்ரீராகவேந்திர தீர்த்தர், மாமிசத்தை, பழம் மற்றும் பூக்களாக மாற்றியதும் இதைப் போன்றதே. ஸ்ரீலக்ஷ்மி நாராயண முனிகள், அழுக்கடைந்த துணியை வெண்மையாக மாற்றியதும் கூட இதே சிந்தனையால்தான். ஸ்ரீவியாசதீர்த்தர், தேங்காய் ஏற்கனவே நைவேத்தியம் செய்யப்பட்டதை அறிந்ததும் இதே சிந்தனையால், தேங்காயை உடைத்தபோது அதில் துளசி இருந்தது.

வியாசதத்வக்ஞர், பஞ்சாமிர்த அபிஷேகத்திற்கு வைத்திருந்த பொருட்கள் காலியானபோது, ஹரிக்கு அர்ப்பணம் ஆகிவிட்டது என்று சொல்லி மங்களாரத்தி செய்தார். அப்போது, ஸ்ரீகிருஷ்ணனின் வாயில் இருந்து பஞ்சாமிர்தம் வழிந்ததும் இதே நைவேத்தியம் செய்யும் சிந்தனையால் என்றே அறியலாம்.

கனகதாசர் வெளியில் ஓடிக் கொண்டிருந்த சாதம் வடித்த கஞ்சியை அர்ப்பணித்தபோது, அதே கஞ்சி ஸ்ரீவாதிராஜரின் ஹயக்ரீவ ஸ்வாமியின் வாயில் இருந்து வழிந்து ஓடியதும் இந்த மாதிரியான சிந்தனைக்கு சம்பந்தப்பட்டிருப்பதை அறியலாம்.

இப்படியாக பல உதாரணங்களின் மூலம் அறியப்பட்ட அம்சங்களை, சரியான முறையில் அறிந்து நைவேத்தியம் செய்தால், பகவானின் அருள் கிடைக்கும் என்பதில் ஐயம் இல்லை.

இந்த நைவேத்தியம் செய்யும் நிகழ்வு, எப்படி இருக்க வேண்டும் என்றால், பாத்திரம் முழுக்க இருக்கும் பாலில், சிறிது தயிர் ஊற்றி உறைய வைத்தால், முழுப் பாலும் எப்படி தயிர் ஆகிறதோ, அதைப் போல் இருக்க வேண்டும்.

நமது குரு ராம, கிருஷ்ண முதலான மந்திரங்கள், காயத்ரி மந்திரம், அங்கித உபதேச மந்திரம் முதலானவற்றை உபதேசித்த பின்னர் நம் சாதனை இப்படி இருக்க வேண்டும். அதாவது உறைக்கு ஊற்றிய தயிரே குரு உபதேசித்த மந்திரம். அதன் மூலம் நம்முடைய ஞானம் எப்படி வளரவேண்டும் என்றால் உறைக்கு ஊற்றிய பின்னர் காலையில் முழுவதும் தயிராக மாறியது போல் இருக்க வேண்டும். இதுதான் நிஜமான நைவேத்தியம். இப்படிப்பட்ட சிந்தனையில் நம்மை நாமே ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பதே முக்கிய கருத்து.

“நைவேத்தியவனே கொள்ளு” என்னும் பாட்டில் தாசரின் கருத்தும் இதேதான்

ஸ்ரீவாதிராஜர் தம்முடைய ஒரு பாடலில் கூறுவதாவது:-

ஆரோகணெய மாடு சாரஸுக தொடெய ||ப||

ரன்ன மயவாகிர்த ஹொன்ன மண்டபதொளு
ஸ்வர்ண பாத்ரகளல்லி ஸவயம்பாகவு
நின்ன ஸொஸெ வாணி பாரதி தேவி கடுஜாணெ
சென்னாகி நைவேத்தியவன்னு பாடுவது ||

தெஸெ தெஸெகெ பரிமளிப குஸலத சித்ரான்ன
பிஸி தோஸெகெ பெண்ணெ லேஹ்யபேய
பஸிரொளகெ ஈரேளு ஜகவனிம்பிட்டவகெ
நஸுநகுத இந்திரா தேவி படிஸெ ||

ஆகமலெ மாடித்து நால்கு பகெ க்ருத ஸூப
லோக பதிகனுவாத திவ்யான்னவு
பேகாத பஞ்சபக்ஷ்யகளு ரஸாயனவ
ஏகாந்ததல்லி நிம்ம தேவி படிஸெ ||

களர குலவைரிகெ திளி நீரு மஜ்ஜிகெ
எளநீரு பானக ஸீதளுதக
பளலிதிரி பளலிதிரி எனுத ஹயவதனகெ
நளினாக்ஷி கற்பூர வீள்யவனெ கொடலு ||

ஒன்பது பத்யங்கள் இருக்கும் இந்த பாட்டில், பகவானின் பூஜை அறை எப்படி இருக்க வேண்டும் என்றும் மற்றும் நாம் எப்படி இருக்க வேண்டும் என்பதை பற்றி விளக்கி, நைவேத்தியம் என்பது யார் செய்ய வேண்டும், எப்படி செய்ய வேண்டும்

என்பதையும் தெள்ளத் தெளிவாக கூறியுள்ளார். இதற்கு விளக்கமே தேவையில்லை.

நைவேத்தியத்திற்கு உகந்த பொருட்களையும் தெளிவாக கூறியுள்ளார். அவர் தெரிவித்துள்ள முறையில், அந்தந்த பதார்த்தங்களை வைக்க வேண்டும் என்பதே விதி.

முதலாவது பத்தியில் பாரதி, ஸரஸ்வதியரே ஒரு தங்க பாத்திரத்தில் சமையல் செய்து, அவர்களே அதை நைவேத்தியமும் செய்கிறார்கள் என்று ராஜர் கூறியுள்ளார்.

ஸ்ரீஹரிக்கு ரமாதேவியே பரிமாறுவதாக கூறியுள்ளார். நாம்கூட சாப்பிட உட்காரும்போது நமக்கு பரிமாறுபவரிடம் ரமாதேவியின் ஸன்னிதானத்தை சிந்தனை செய்ய வேண்டும் என்கிறார். தோசை, புளியோதரை, காய்கறிகள், நெய் பதார்த்தங்கள், பழச்சாறு, நீர்மோர், இளநீர், பானகம், தண்ணீர் முதலிய பொருட்களை நிதானமாக உண்ணும்படி உபசாரம் செய்ய வேண்டும் என்று கூறியுள்ளார். சாப்பிட்ட பின்னர், வாசனை மிக்க தாம்பூலத்தை அர்ப்பணிக்க வேண்டும் என்று கூறுகிறார். வாதிராஜர் இந்த முறையில் ஹயவதன பரமாத்மாவிற்கு அர்ப்பணம் செய்தபோது மட்டுமே, அது நைவேத்தியம் பூர்த்தி ஆகின்றது என்கிறார். அதனாலேயே சந்ததம் சிந்தயே அனந்தம் அந்த்யகாலே விசேஷத: என்பதே உணர்ந்ததாலேயே. "ஆரோகணெ மாடு ஆனந்த மூருதி" என்ற பாடலை கூட இதே அர்த்தத்தை உணர்த்தும் வகையில் இயற்றியுள்ளார்.

துப்ப மது சித்ரான்ன பாயஸ கரிகள
லேப ஸாரஸ பக்ஷ்யகள
கோபால க்ருஷ்ணகெ ததி பக்ஷ பலங்களு
ஆபத்ம முகி படிஸிதளு லேஹ்ய பேஹ்யவா ||

என்ன குந்துகளா முனிகெ திவ்ய அன்னவு
மன்னிஸி கரெது நின்ன கரகஞ்சதிந்த
பூர்ணவ மாடு புஞ்ஜிஸோ ஹயவதன க்ரு
பாளுஸகல லோகபால நரரொடயனெ ||

விஜயதாசர் :

ஊடவனு மாடு பாலு ததி ஸயனா
ஆடவனு ஸாகுமாடி அதி மோகதிந்தலி ||ப||

காயிபல்ய ஒந்தொந்து நூறு பரி
தோய ஸண்டிகெ பளெதெ ஹுளிஸாரு
பாயஸ நொரெஹாலு ஸக்கரெ கூடிஸி
தாயி தேவகியு எடெய மாடிதளு தந்து ||1||

யாலக்கி ஹாகித ஹோளிகெயு பரிமள
ஸலெ ஷால்யோதன கரித பக்ஷ்ய
மேலாத இங்கு-ஜீரிகெ மெணஸின ஹுக்கி
ஸ்ரீலகுமி தேவி எடெ மாடிதளு தந்து ||2||

கஸிகஸி எள்ளு லட்டிகெய அப்பாலு அதி
ரஸதோஸெ பெண்ணெ ஸூஸலுகடபு
ஹஸனாகி கரித ஹப்பள ஸண்டிகெ நின்ன
ஸொஸெ ஸரஸ்வதி எடெ மாடிதளு தந்து ||3||

ஸாதாகளதுப்ப ஆளகளக திளி துப்ப
மாதுர்யவாகித்த ஜேனு க்ருதவு
காதாரித பாலு கட்டுஸூரு கெனெ மொஸரு
பூதேவி நலிநலிது எடெ மாடிதளு தந்து ||4||

ஸரளிகெ கௌலி படவெ பரடி ஸஜ்ஜிகெ
ஸரஸவாகித்த சித்ரான்னகளு
பரிபரி பலபக்வான்ன ஸோபசாரதி
கிரிஜாதிகளு தாவு எடெ மாடிதரு தந்து ||5||

காருள்ள பச்சடி ஹச்சகெ ஹஸிருவர்ணத
வாருணதி உப்பின காயி கூட
நீரு மஜ்ஜிகெ நிம்பெஹண்ணின ஹிண்டி
பாரதி தேவி எடெ மாடிதளு தந்து ||6||

உண்டு தருவாயதலி ஹரியே பீடதி குளிது
கொண்டு பந்த கந்த தாம்பூலவ
கொண்டு ரக்ஷிஸி என்ன ஸிரி விஜய விடல
தொண்டனாத புரந்தர ஹரகெ ஒலிதந்தெ ஒலிது ||7||

இந்த பாடலில் விஜயதாசர் பரமாத்மாவிற்கு நைவேத்தியம் சமர்ப்பணம் செய்யும்போது கடைப்பிடிக்க வேண்டிய விஷயங்களை விவரித்துள்ளார். இதை ஒவ்வொருவரும் முறையாக கடைப்பிடிக்க வேண்டும் என்பதே விதி. இதையே சமஸ்கிருதம் அறிந்தவர்கள் சாஸ்திரம் என்பர்.

முதலில், பரமாத்மாவிற்கு வைக்க வேண்டிய அனேக பதார்த்தங்களை அவனுடைய தாய் தேவகி செய்திருப்பதாக கூறியுள்ளார்.

இரண்டாவது பத்தியில், போளி முதலானவற்றை லகுமிதேவி சமர்ப்பணம் செய்ய கொண்டு வந்திருப்பதாக கூறியுள்ளார்.

மூன்றாவது பத்தியில் லட்டு, அப்பளம் முதலானவற்றை சரஸ்வதி கொண்டு வந்திருப்பதாக கூறியுள்ளார்.

நான்காவது பத்தியில் பசு நெய், தேன், ஏடான தயிர் முதலியவற்றை பூதேவி (ரமாதேவியின் மற்றொரு ரூபம்) கொண்டு வந்திருப்பதாக கூறியுள்ளார்

ஐந்தாவது பத்தியில் ரவை கேசரி, புளியோதரை முதலானவற்றை கிரிஜா தேவி கொண்டு வந்திருப்பதாக கூறியுள்ளார்.

ஆறாவது பத்தியில் ஊறுகாய், நீர் மோர் முதலியவற்றை பாரதி தேவி சமர்ப்பணம் செய்ய கொண்டு வந்திருப்பதாக கூறியுள்ளார். இவை எல்லாவற்றையும் நீ ஏற்றுக் கொண்டு, மறுபடியும் பீடத்தில் அமர்ந்து, சந்தனத்தை பூசிக் கொண்டு, தாம்பூலத்தை ஏற்றுக்கொண்டு என்னை ரட்சிக்க வேண்டும். ஹே பிம்பனாகி இருக்கும் விஜய விட்டலனே, புரந்தரனுக்கு அருள் புரிந்ததைபோல், தனக்கும் அருள் புரிய வேண்டியுள்ளார்

1. சமையல் செய்பவரில் ரமாதேவி, ஸரஸ்வதி, பாரதி, கிரிஜா தேவியர்களின் சன்னிதானம் இருப்பதாக சிந்தனை செய்வது மிக முக்கியமான ஒன்று. சமையல் செய்பவரில் பீமசேனனே நின்று செய்விப்பவன் என்று ஞானிகள் கூறுகிறார்கள்.

2. இங்கு கூறியுள்ளபடியே சமையல் செய்து ஸ்ரீஹரிக்கு நைவேத்தியத்திற்கு வைக்க வேண்டும் என்பதே இதன் கருத்து

3. பரமாத்மாவிற்கு நைவேத்தியம் செய்வது ரமாதேவியே தவிர வேறு எவரும் செய்ய முடியாது. அதாவது நைவேத்தியம் செய்வது கூட நான் இல்லை என்ற சிந்தனை இருக்க வேண்டியது அவசியம். எல்லாவற்றையும் சங்கு மூலம் அர்ப்பணம் செய்கிறோம். அதாவது லக்ஷ்மியே என்னுள் இருந்து செய்விக்கிறாள் என்ற சிந்தனை முக்கியத்துவம் பெறுகிறது. அப்படி என்றால் மட்டுமே ஸ்வாக்யரஸம் பரமாத்மாவை அடைகிறது. இல்லை என்றால் அது அருகதை அற்றது என்பதை கூற வேண்டியதில்லை. இதுதான் ஆசார்யர் மத்வர் நைவேத்தியம் செய்யும் முறை ஆகும்.

கடைசியாக கோபால தாசரின் கருத்தில் கூறுவது, நீ எதை ஸ்ரீஹரிக்கு அர்ப்பணித்தாலும், எப்படி அர்ப்பணித்தாலும், எந்த பாத்திரத்தில் சமர்ப்பித்தாலும், நான் சமைத்த இந்த பதார்த்தங்களை பரமாத்மாவிற்கு, தங்கமயமான பாத்திரத்தில் (ஹரிவாண) வைத்திருப்பதாக சிந்தனை செய்து அர்ப்பணிக்க வேண்டும் என்று கூறுகிறார்.

அன்பர்களே, நாம் இப்படிதான் நைவேத்தியம் செய்கிறோமா என்ற கேள்விக்கு, இப்பொழுது பதில் சொல்லுங்கள். ப்ரியமான மாணவர்களே, மற்றும் பந்துக்களே, இந்த மாதிரியான சிந்தனை செய்து ஞானத்தை வளர்த்து கொள்ளுங்கள். இதுதான்

நிஜமான நைவேத்தியம். (அப்பொழுதுதான் இந்த மஹாவித்யாலயம் நிலைத்து நிற்பதற்கான பலன் கிடைக்கும்.).

பரமாத்மாவின் முன் அமர்ந்து, பல வகையான பட்சணங்கள், பாயசம் முதலானவற்றை அர்ப்பணிப்பது மட்டுமே நைவேத்தியம் ஆகிவிடாது. நம் வாழ்வில் நடக்கும் நிகழ்வுகள் அனைத்துமே நைவேத்தியம் என்ற சிந்தனை ஒவ்வொரு கணமும் நினைவில் இருக்க வேண்டும். இதுதான் நிஜமான நைவேத்தியத்தின் சிந்தனை.

உதாரணமாக, வெயிலின் தாக்கம், அதிகமான குளிர், மழை, பனி, மழை, தூறல் மற்றும் ரம்யமான சூழல் இவையெல்லாம் இயற்கையானதே. இயற்கையின் விதி. நாம் அதற்கான பலனை அடைகிறோம். அந்த பலனை பரமாத்மாவிற்கு அர்ப்பணம் செய்வதே நைவேத்தியத்தின் இரண்டாவது மட்டம் (level). ஹரிகதாம்ருதஸாரத்தில் இதை போன்ற அனேக விஷயங்களை தெரிவிக்கிறார். இந்த விஷயங்களை மனதில் அசை போட்டுக் கொண்டு, இப்படிப்பட்ட அற்புதமான காரியங்களை நடத்திக் கொண்டிருக்கும் பரமாத்மாவிற்கு கோடி நமஸ்காரம் என்று சிந்தனை செய்வதே மூன்றாவது மட்ட (level) நைவேத்தியம் என்று ஆகிறது.

இப்படியாக அவனுக்கு அர்ப்பணித்ததை, பிரசாதமாக எடுத்துக் கொள்ளும்போது நான்காவது மட்டம் (level) ஆகிறது. இதை மஹாபிரசாதமாக அறிந்தபோது, இதனால் நம் மனம் தூய்மை அடைவதுடன், சாதனை மார்க்கத்தில் நம் தகுதியும் உயர்கிறது. இதுதான் நிஜமான நைவேத்தியம். இப்படிப்பட்ட பிரசாதத்தினால் உத்தமமான மோட்சமே பலன் என்பதை கூற வேண்டியதில்லை.

ஶ்ரீகுருராமவிட்டலதாஸர், தம்முடைய ஒரு நைவேத்திய பாடலில், கீழ்க்கண்டவாறு வர்ணிக்கிறார்.

போஜன மாடையா ஶ்ரீராமச்சந்திர ||ப||

ராஜீவநயனா ஸ்வராஜஜனுஜாமஹா
ராஜவந்தித ராஜராஜ ஸகார்சித ||அ . ப. ||

உப்பு உப்பினகாயி பச்சடிகளு கொஜ்ஜு
ஹப்பள ஸண்டிகெ ஷாகெகளு
ஒப்புவ ரஸ கூட்டு ஹுளி பளித்யவு ஸூப
துப்ப ஷால்யோதன சித்ரான்னகளனு ||1||

ஹோளிகெ ஸஷ்கலி ஹோளிகெ கடுபுமு
சோரெய அதிரஸ ஹொயகடுபு ||
கீரு ஆம்போடெ போண்டா ஷாவிகெ ஹுளி தோஸெ
க்ஷீர ஸர்கர ஜேனுதுப்பவெ மொதலாத ||2||

மண்டிகெ லாடு சிரோட்டி கீவரு பேணி
பெண்டு ஸோமாஸி பத்தாஸு பேடா ||
கண்ட ஸர்கரெ கப்பு கர்ஜுர த்ராக்ஷுக
ளுண்டு த்ரிலோக உத்தரிஸுவ ஸ்வாமி ||3||

பலஸு ஜம்பு கதளிநாரங்க எளநீரு
பானக ஸக்ரெ பெண்ணெய மொஸரு ||
அனுவாத ஸ்வாதோதக மொதலாகி ஸ்ரீ
அர்பிஸுவளு பக்தியிந்த கைகொண்டு நீ ||4||

நித்ய த்ருப்த நிராமயகெ நிரந்தர
ஸத்வ ரஜஸ் தமோ குணகளெம்ப
ஸத்ய தாம்பூலவ ர்பிஸலு யதாஸக்தி
வித்த ஸமேத வாதிதனு கைகொண்டு நீ ||5||

அவ்யயானந்த ஜகத பதுகு நீனெந்து
ஸேவ்ய ஸேவகனாகிருவெ எந்து
பவ்ய சரித்ரருபங்களாவை நின்ன
ஸவ்ய ஸாசிய ஸுத குருராமவிடலகெ ||6||

ஒன்பது பத்யங்கள் இருக்கும் இந்த பாடலில் குருராமவிடல தாஸர், ஸ்ரீராமருக்கு எந்த எந்த பதார்த்தங்களை எங்கெங்கு வைக்க வேண்டும் என்பதை வலியுறித்தியுள்ளார். இதுதான் விதிமுறை. இதை அறிந்தவர்கள் சாஸ்திரம் என்பர். (ஆனால் இது சாஸ்திரம் இல்லை). இந்த விதிகளை பின்பற்றி, ஒரு சேவகனைப் போல் அர்ப்பணம் செய்தால் பரமாத்மா திருப்தி அடைகிறான் என்று கூறுகிறார்கள். ஆனால், இதையே நைவேத்தியம் என்று கூறிக்கொண்டு, சாப்பிடக்கூடாத நாட்கள் யாவை என்பதையும் தாசர் தெரியப்படுத்துகிறார்.

ஏகாதசி உபவாச பேகாதவனே ஹரிதாஸ ||ப||
ஏகாதசி உபவாச மாடிதரே நாகிகளிகே ஆகது விஷ்வாஸ ||அ. ப. ||

ஏழு பத்திகள் இருக்கும் இந்த பாடலில் ஏகாதசி அன்று பட்டினி இருக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறார்.

அன்ன ஸாரு காயி பல்ய ஒப்பட்டு
கனருசிய சித்ரான்ன பக்ஷகளு ||
இன்னூருசிய வஸ்துகளு நோடிதரே
தின்னுவுதே ப்ரத்ய க்ஷநரகவு||

நீராஹாரவு நடெயலுத்தமவு
எரடனெயது மேல்வெளிதுது

நராதமனு வ்ரத நமகில்லெனுத
பரிபரி அன்னோத்ஸவதி கெடுவனு ||

ஹொரகொளகுபவாஸ வ்ரதவ
மரெயதெ மாடுதிருவ மானவ
குருராமவிடலன கருணா படெயுவ
கராமலக முக்தியலி ஸுகபடுவனு ||

என்று ஹரிதினத்தன்று (ஏகாதசியன்று) உணவு உட்கொண்டால் ஏற்படும் பிரச்னைகளை தெரிவிப்பதில், ஹரிதாஸர் தயக்கமே படுவதில்லை. குருராமவிட்டலரின் நேரடியான விளக்கங்கள் எப்படிப்பட்டவரையும் மயங்க வைக்கும். பரமாத்மா ஸப்தான்னங்களை படைத்திருக்கிறார். அந்த அன்னத்தை, அந்தந்த ஜீவகோடிகளுக்காக படைத்துள்ளார். அதன்படி உண்டு வாழ்க்கை நடத்துவதே முறையானது. இதற்கு எதிராக நடப்பது இயலாது. முதலில் அன்னத்தை படைத்து பின்னர் ஜீவர்களை படைத்தான்.

உதாரணம்: தாயின் முலையில் பாலை உற்பத்தி செய்து பின்னர் குழந்தை பிறக்கச் செய்வது.

இதைபோல் இந்த ஸப்தான்ன விதியை அறிவது, அர்ப்பணிக்கும் முறை, சிந்தனை முதலியவற்றை தெரிவிக்கிறார்.

ஸப்தான்ன திளிவுது ஸாதனவய்யா ||ப||
ஆப்த ஹரிய கொட்டு புத்தியிந்தலி ஜனரு ||அ. ப. ||

இந்த பாடலில் கடைசியாக, சந்தையில் பார்த்தவை, வீதிகளில் கண்டவை என்று நாம் ஒவ்வொரு நாளும் உபயோகப்படுத்தும் பொருட்களை (பூ, பழம், காய்கறிகள் முதலானவற்றை) நாம் காணும் அக்கணமே க்ருஷ்ணார்ப்பணம் என்றால், அதுவும் கூட நைவேத்தியமே ஆகிறது. அதன் மூலம் பரமாத்மாவின் நினைவு நமக்கு உண்டாகுவதே சாதனை ஆகும்..

ஸ்ரீவாதி மத்வேஷார்ப்பணமஸ்து.

***

# ஹரிதாச சாகித்யத்தில் தத்வம் மற்றும் சித்தாந்தம்

ஹரிதாசர்கள் தங்கள் சாகித்யத்தில் பற்பல விஷயங்களை விளக்கியிருக்கின்றனர். அதில் சிலவற்றில் தத்வங்கள் இருந்தால், சிலவற்றில் சித்தாந்தங்கள் இருப்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அவருக்கு முன் இருந்த 21 மதங்களையும், அவற்றின் சித்தாந்தங்களையும் நிராகரித்து, ஆசாரியர் ஸ்ரீமத்வர் த்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டினார். இந்த சித்தாந்தத்தை அந்தக் காலத்தில் ஏற்றுக்கொண்டவர்களை வைஷ்ணவர்கள், மாத்வர்கள் என்று அழைக்கிறோம். 14ம் நூற்றாண்டிலிருந்து ஹரிதாசர்கள் வரத் துவங்கினர். அவர்களின் முக்கியமானவர்கள் ஸ்ரீலட்சுமி நாராயண முனிகள், வியாசராஜர், வாதிராஜர் மற்றும் விஜயீந்திர தீர்த்தர். இவர்கள் நால்வரும் யதிகளானால், கனக புரந்தரர்கள் கிருஹஸ்தர்களாக இருந்து மிகப்பெரிய சாகித்ய சேவை செய்திருக்கின்றனர்.

ஹரிதாசர்கள் தங்கள் சாகித்யத்திற்கு ஏற்றுக்கொண்ட சித்தாந்தம், ஆசாரிய மத்வரின் த்வைத சித்தாந்தமே. பொதுப்படையாக பார்த்தால் தத்வம் மற்றும் சித்தாந்தம் இரண்டும் ஒன்று போலவே தோன்றினாலும், இவ்விரண்டும் வெவ்வேறு ஆகும். 3ம் நூற்றாண்டின் பம்ப, ரன்ன, ஜன்ம ஆகியோரின் காவியங்களை தற்போது பார்த்தால், அவர்களின் மூல கிருதிகளை திருத்தி, அவரவர்களின் மதங்களின் தத்வங்களுக்கேற்ப மாற்றியமைக்கப்பட்டிருப்பதை பார்க்கலாம்.

சங்கரர், ராமானுஜரும்கூட பிரம்மசூத்ர ஆகிய மூல கிரந்தங்களுக்கு தங்களுக்குத் தோன்றியதான உரையை மட்டுமே எழுதியிருக்கின்றனர். சரியான / உண்மையான பொருளை எழுதவில்லை. அதற்கான காரணங்கள் பல இருந்தாலும், மத்வர் மட்டுமே அப்படிச் செய்யாமல், வேதவியாசரின் கருத்துகளை மட்டுமே எழுதியிருப்பது சிறந்ததாகும்.

இந்த கோணத்தில் பார்த்தால் கன்னட மொழியும்கூட பழைய கன்னடம், நடு கன்னடம், புதிய கன்னடம் என்று மூன்று விதங்களில் வளர்ந்து, அந்தந்த காலக்கட்டத்தில் இருந்த கவிஞர்கள் அந்த கால கன்னடத்தில் தங்களின் தத்வங்களை பதிவு செய்திருக்கிறார்கள்.

இவர்களின் அனைத்து கிரந்தங்களையும் எடுத்து ஆராய்ந்தால், தெரியவருவது என்னவென்றால், பெரும்பாலான சாகித்யங்களில் அத்வைத சித்தாந்தமே அதிகமாக தென்படுகிறது. இதிலேயே பற்பல கீர்த்தனைகளும் இயற்றப்பட்டுள்ளன.

சித்தாந்தத்திற்கும் நீதிக் கதைகளுக்கும் மிகப்பெரிய வித்தியாசம் உள்ளது. நீதிக்கதைகளில் வெறும் நீதி இருக்கிறது. நமக்கு வேண்டுமெனில் அந்த நீதியை ஏற்றுக்கொள்ளலாம் இல்லையெனில் விட்டுவிடலாம். அந்த நீதியை பின்பற்றினால் அந்தக் கதையின் நோக்கம் நிறைவேறியது என்று அறியலாம்.

வாழ்க்கையின் நடைமுறைகளை விளக்கும் பற்பல தத்வங்களை கன்னட சாகித்யத்தில் காணலாம்.

குமாரவியாச பாரதத்தில் நீதிக்கதைகள், தத்வம், சித்தாந்தம் ஆகிய எல்லாமே அடங்கியிருக்கின்றன. பசவண்ணரின் க்ருதிகளில் நீதி மற்றும் அத்வைத தத்வம் இருக்கிறது. மத்வரின் கிருதிகளில் தத்வங்களைவிட சித்தாந்தத்திற்கு அதிக இடம் கொடுத்திருப்பதைக் காணமுடிகிறது. ஏனென்றால், நீதி, தத்வம் இவைகளில் சித்தாந்தம் இருக்கிறது என்று நினைத்தால் மட்டுமே ஸ்ரீஹரியின் அருள் கிடைக்கும் என்பது மத்வரின் கருத்து ஆகும்.

இதையே ஹரிதாசர்களும் பின்பற்றியதால், ஹரிதாசர்களின் க்ருதிகளில் தத்வங்களுடன் சித்தாந்தமும் இருக்கின்றது. மேலோட்டமாகப் பார்த்தால், தத்வம் மட்டுமே இருப்பதாகத் தோன்றும். ஆனால் அந்த பாடல்களை ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் சித்தாந்தமும் காணப்படுகின்றது.

உதாரணத்திற்கு:

கனகதாசர் - ஹரிபக்திசாரம்
மோகனதாசர் - கோலு ஹாடு
ஜகன்னாததாசர் - ஹரிகதாம்ருதசாரம்

இவற்றை ஆராய்ந்து உட்கருத்தைச் சொல்வது, மறைந்திருக்கும் பொருளைக் கண்டுபிடித்து அறிவது சிறப்பான செயலாகும். கனகதாசரின் முண்டிகைகளை சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம்.

சிவசரணரின் சாகித்யம் பெரும்பாலும் ஹரிதாச சாகித்யத்திற்கு பக்கத்தில் இருந்தாலும், அவர்களின் சாகித்யத்தில் அத்வைதத்தைவிட த்வைத சித்தாந்தமே அதிகமாகக் காணப்படுகிறது. ஆனால் இந்த விஷயம் அவர்களுக்குத் தெரிவதில்லை. தெரியவும் வாய்ப்பில்லை. அத்வைதமே சிறந்தது என்று சொல்பவர்களுக்கு த்வைதத்தின் பொருள் விளங்குவதில்லை. த்வைதம் தெரிந்தவர்களுக்கு, அத்வைதத்தின் பொருள் நன்கு விளங்குகிறது. அதனாலேயே, அவர்கள் அதனை நிராகரிக்கின்றனர்.

இப்படி 14ம் நூற்றாண்டிலிருந்து 21ம் நூற்றாண்டில் இருக்கும் நாம், இன்றைய காலகட்டம் வரையிலான சாகித்யத்தின் வளர்ச்சியைப் பார்த்தால், சித்தாந்தத்தை விளக்கும் சாகித்யங்களை இன்றைக்கும் காணலாம். அதற்கான காரணம் என்னவென்றால் - அதை எழுதுபவர்கள், இதை நாம் எழுதவில்லை, ஸ்ரீஹரியே நம்மை எழுதவைக்கிறான் என்ற எண்ணம் கொண்டிருந்ததே ஆகும்.

கீழ்க்கண்ட பதங்கள், கதையுடன் தத்வங்களை தெரிவிக்கின்றன.

1. நாதப்ரிய எம்புவரு நாதப்ரியனல்ல
வேதப்ரிய எம்புவரு வேதப்ரியவல்ல
பக்திப்ரிய நம்ம கூடல சங்கமதேவ

2. களபேட கூலபேட ஹுஸிரு நுடியலு பேட
ஜரியபேட அன்யரிகெ அசஹ்யபடபேட
தன்ன பண்ணிசபேட இதிர ஹளியலு பேட
இதே அந்தரங்க சுத்தி, இதே பஹிரங்க சுத்தி
இதே நம்ம கூடலசங்கம தேவன ஒலிசுவபரி

3. தந்தே நீனு தாயி நீனு
பந்து நீனு பளக நீனு
எனகெ நீனல்லதே மத்தாரு இல்லவய்யா
கூடல சங்கம தேவ

இந்த மூன்று பாடல்களை மேலோட்டமாகப் பார்த்தால், முதல் பாடலில்: ஸ்ரீஹரி நாதத்திற்கு வருவதில்லை. வேதத்திற்கும் வருவதில்லை. ஆனால், அவனிடம் பக்தி உண்டாகவேண்டும் என்கிறார். பக்தி இருந்தால் மட்டுமே வருகிறான்.

இரண்டாம் பாடலில்: திருட்டு வேண்டாம். பொய் பேசவேண்டாம். மற்றவரை இகழ வேண்டாம். அவமானம் செய்யவேண்டாம். இதுவே அக மற்றும் புற தூய்மைக்கு வழிவகுக்கும். அப்போதே ஸ்ரீஹரி நமக்குக் காட்சியளிப்பான் என்கிறார்.

மூன்றாம் பாடலில்: என் தாய், தந்தை, உறவினர் என எல்லாமே நீதான் உன்னைத் தவிர எனக்கு வேறு யாருமில்லை, ஸ்ரீஹரியே என்று வேண்டுகிறார்.

இந்த மூன்று பாடல்களும், சமூகத்தில் ஒரு மனிதன் எப்படியிருக்க வேண்டுமென்று தெரிவிக்கிறது. இத்தகைய பாடல்களை, நீதி மற்றும் தத்வ பாடல்கள் என்று சொல்வதில் பிரச்னையில்லை.

இதுவே ஹரிதாசர்களின் பாடல்களைப் பார்த்தால்:

1.

எந்திகாஹுதோ நின்ன தரிசன
அந்திகல்லதெ பந்தனீகதோ (ப)

கானலோலஸ்ரீ வத்ஸலாஞ்சன தானவாந்தக தீனரக்ஷக ||
யாரிகெ மொரெ இடலோ தேவனே சாரி பந்து நீ காயோ பேகனே ||
கஜவ பொரெனெயெ கருட கமனனே த்ரிஜகத்பரித ஸ்ரீவிஜயவிட்டலா ||

பிறப்பு இறப்பு என்னும் நமது சுழற்சி நீங்கவேண்டுமெனில், ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைத்தால் மட்டுமே சாத்தியம் என்று தாசர் இப்பாடலின் மூலம் தெரிவிக்கிறார். ஆகவே அவனை கானலோல, ஸ்ரீவத்ஸ, லாஞ்சன, தானவாந்தக, தீனரக்ஷக என்று அழைத்து, கஜேந்திரன் அழைத்தவுடன் எப்படி உடனே வந்து அவனை காப்பாற்றினாயோ அதுபோல கைலாசம், சத்யலோகம், வைகுண்டம் ஆகியவற்றிற்கு தலைவனான நீ வந்து உன் தரிசனம் கொடு என்று வேண்டுகிறார்.

இது ஒரு சாதாரண வேண்டுதல்தானே. கஜேந்திரனை வந்து காப்பாற்றியதைப் போல, என்னையும் வந்து காப்பாற்று என்று சொல்கிறார். இதில் அடங்கியிருக்கும் தத்வம் என்ன? என்ற கேள்விக்கு, துவக்கத்தில் ஸ்ரீஹரி வேறு நான் வேறு ஆகையால் அவனின் தரிசனத்திற்கு பக்தி தேவை என்ற பொருள், 2ம் பத்தியில் - இதே பொருள்; 3ம் பத்தியில் - கஜராஜன் வேறு, அவனின் வேண்டுதலுக்கு விரைந்து வந்ததைப் போல (ஒரு ஜீவனின் வேண்டுதலுக்கு விரைந்து வந்ததைப் போல) என்று பொருள் வருகிறது. த்ரிஜக என்றதால் சத்யலோகத்து பிரம்மனிடமிருந்து பேதம், கைலாசத்திலிருக்கும் ருத்ரரிடமிருந்து பேதம். வைகுண்டத்தில் இருக்கும் விஜயவிட்டலனே (என்னுடைய பிம்பமூர்த்தியான நீ) உன் தரிசனத்தைக் கொடு என்று சொல்லி ஜீவ - பரமாத்மா இரண்டும் வேறு மற்றும் ருத்ர - பிரம்மனிடமிருந்து வேறுபட்டிருக்கிறான் என்கிற சித்தாந்தத்தை தெரிவிக்கிறார்.

2.

பாரதமல்ல பீமனெந்தெம்பரு
பாரதமல்ல கர்ணனெந்தெம்பரு
பாரதமல்ல அர்ஜுனனெந்தெம்பரு
பாரதமல்லரல்ல இவரெல்ல
பாரதமல்ல புரந்தரவிட்டலனொப்ப காணிரோ ||

இந்த கிருதி மிகத் தெளிவாக இருக்கிறது. பாரதத்தில் வீரர்கள் / சிறந்தவர் என்றால் அது பீமன், கர்ணன், அர்ஜுனன் ஆகியோர் அல்ல. அப்படியென்றால் யார் சிறந்தவர்? இவர்கள் அனைவரில் அந்தர்யாமியான புரந்தரவிட்டலன் என்கிறார், புரந்தரதாசர். இந்தப் பாடலின் பொருளை இப்படியே கொள்ளவேண்டும் என்கிறார். அப்படியென்றால் பீமன் முதலானோர் வீரர்கள் இல்லையா? இந்த மூவரும் ஒரே தாயின் மக்களானாலும், இந்த மூவரின் அந்தர்யாமியான ஸ்ரீஹரி, அவரவர்களின் தகுதிக்கேற்ப வீரர்கள் என்று சொல்லி, தானே சர்வோத்தமன் என்று நிற்கிறான் என்று ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை விளக்குகிறார் புரந்தரதாசர்.

3.

அன்னபானாதிகளீயோ அப்யாகத பிரம்மண்யரிகெ

அன்னபானாதிகளீயோ ஆ சம்பால சத்தரிகெ
அன்னபானாதிகளீயோ அந்த தீன க்ருபணரிகெ
ஹஸிவெகெ ஹாகவன்னர்பிசோ புரந்தரவிட்டலகெ |

பிராமணர், சண்டாளர் என்று யார் வந்தாலும் அவருக்கு உணவு, நீர் தர வேண்டும் என்று மக்களுக்கு அறிவுரை தருகிறார் தாசர் என்றே இந்தப் பாடலை மேலோட்டமாகப் பார்த்தால் நமக்குத் தெரியும்

பொருள்.

இதில் இருக்கும் சித்தாந்தம் என்ன?

நாம் யாரை உண்பதற்கு அழைத்திருக்கிறோமோ? மற்றும் உணவு நேரத்தில் யார் தானே (அழைக்காமல்) வருகிறாரோ, அவர் யாராக இருக்கட்டும் - அவருக்கு உணவு அளிக்கவேண்டும்.

அதுவே வைஸ்வானர யக்ஞ. அங்கு ஜீவனில் அந்தர்யாமியாக பாரதிபதி புரந்தரவிட்டலார்ப்பணமஸ்து என்று சொல். அதுவே ஸ்ரீஹரியின் பூஜை. இதுவே யக்ஞ. பசியால் வாடுபவர்களுக்கு அளிக்கும் உணவு, நீர்கூட ஸ்ரீஹரியின் பூஜை என்று சிந்தித்து செய்யவேண்டும் என்கிறார்.

'ஸ்தம்பதிந்தலி பந்த பகுதரிகெ' என்று ஜகன்னாததாசர், ஹரிகதாம்ருதசாரத்தில் கூறுகிறார். இதை மேலோட்டமாகப் பார்த்தால், பக்தனுக்காக தூணிலிருந்து வந்த ஸ்ரீஹரி என்று சொல்லலாம். ஆனால், தாசரின் பார்வையில் இது மட்டும்தான் பொருளா என்று கேட்டு, ஆராய்ந்தால் சித்தாந்தம் விளங்கும் என்பதில் சந்தேகமில்லை. ஸ்தம்ப (தூண்) - ஜடம். இதிலிருந்து வந்தது யார்? ஸ்ரீஹரி. யாருக்காக? பிரகலாதன் மற்றும் ஹிரண்யகசிபுவிற்காக (2 ஜீவர்கள்). ஸ்ரீஹரி தூணிலிருந்து வந்தான். ஆகவே தூண் வேறு ஸ்ரீஹரி

வேறு. ஜீவர்கள் வேறு. தந்தை மகனும் கூட வெவ்வேறு என்கிறார். ஜீவ ஜீவ பேத, ஜீவ பகவந்த பேத, ஜட பகவந்த பேத, ஜட ஜீவ பேத. இப்படி பஞ்ச பேதங்களின் சாரத்தை ஜகன்னாததாசர் மூன்று பதங்களில் விளக்குகிறார்.

'காயகவே கைலாஸ' (வேலை செய்யும் இடமே கோயில்) என்னும் அறிவிப்பினை பல இடங்களில் பார்க்கிறோம். விதான் சௌதா கட்டிடத்தின் மேலேயும் இந்த வாசகம் காணப்படுகிறது. இதன் பொருள் - செய்யும் தொழிலே தெய்வம் என்பதாகும். ஆனால் த்வைத சித்தாந்தத்தின்படி இதன் பொருள் வேறு என்பது நமது கருத்து. இதனை ஆராயலாம். காய - உடம்பு. க - பிரம்ம. கைலாஸ - சிவன் அல்லது விஷ்ணு இருக்கும் இடம் என்று சொல்லலாம். இந்த உடம்பில் பிரம்மன்

இருக்கிறார். அவர் என்னிலிருந்து வேறுபட்டு இருக்கிறார். அவர் வேறு நான் வேறு என்று நினைத்து பூஜித்தால், அப்போது மோட்சம் கிடைக்கிறது. இத்தகைய ஞானம் இல்லாமல், சிவசரணரின் சாகித்யத்தில் த்வைத சித்தாந்தமே இல்லை என்று சொல்வது சரியாக இருக்காது.

இதன் இன்னொரு பொருள். காய - உழைத்து உண்ணவேண்டுமே தவிர, வீணாக அமர்ந்து உண்ணக்கூடாது என்னும் பொருளும் இதில் அடங்கியிருக்கிறது. அரசுக்கு நாம் வரி கட்டுவதைப் போல, ஸ்ரீஹரியின் பெயரை ஜெபித்து அது உனக்கு நான் கட்டும் வரி என்று அர்ப்பித்தால் அவன் மகிழ்ச்சியடைகிறான் என்கிறார்.

ஸ்ரீராம நாமக்கே சரி இல்லா
ஸ்ரீகிருஷ்ண நாமக்கே பெலெ இல்லா
ஸ்ரீநரஹரி நாமக்கே மிகிலில்லா
ஸ்ரீதந்தெமுத்துமோகனவிட்டல தாசர தாசரிகெ பயவில்லா

இங்கு தாசர் கூறவருவது என்னவென்றால் - ராமகிருஷ்ண நரஹரியிடமிருந்து எவ்வித வேறுபாடும் இல்லாத தந்தெமுத்து மோகனவிட்டலனை நினைப்பவர்களுக்கு பயம் இல்லை. இது ஒரு மேலோட்டமான பொருள்.

இன்னொரு பொருள் என்னவென்றால் - ஸ்ரீஹரியின் ரூபங்களில் எவ்வித வேறுபாடும் பார்க்காமல், அவனே பிம்பரூபி, அவனின் தாசரான முக்யபிராணர், அவரின் தாசரான நமக்கு எவ்வித பயமும் இல்லை. தாசதாசர என்றால் 1. தாசர் முக்யபிராணர். 2. அவரின் தாசர் (நாம்). நாம் ஜீவோத்தமரின் மூலம் ஸ்ரீஹரியை வணங்கினால், அவரே நிஜமான தாசர்.

நின்னனானேனெந்தெனோ ஹரி
நீனிட்ட சௌபாக்ய மிகிலாகி இரலாகி
வல்லா நின்னந்தெ பொரெயோ கரடி ப்ரிய

எனக்கு கிடைத்தவை அனைத்தும் நன்று. உன்னிடம் நான் எதையும் வேண்டவில்லை. ஜாம்பதியின் ப்ரியனான ஸ்ரீகிருஷ்ணனே என்று இந்தப் பாடலுக்கு பொருள் சொல்லலாம். நாம் நம் வினைப்பயனின்படியே அனைத்தையும் அனுபவிக்கிறோம். அவனை திட்டினால், அதற்கான பலன்களிடமிருந்து தப்பமுடியாது.

சுகம் துக்கம் என்று எது வந்தாலும் அது எனக்கு சரிதான் கிருஷ்ணா என்று சொல்லி அதை அனுபவிக்கவேண்டும். இந்த சிறிய பாடலில் - ஜீவனின் அஸ்வதந்த்ர மற்றும் ஸ்ரீஹரியின் ஸ்வதந்த்ர இவ்விரண்டும் விளக்கப்படுகிறது.

நீ மாயெயொளகோ நின்னொளு மாயெயோ
நீதேஹதொளகோ நின்னொளு தேஹவோ ஹரியே |ப|

பயலு ஆலயதொளகோ ஆலயவு பயலொளகொ
பயலு ஆலயவெரடு நயனதொளகோ
நயன புத்திய ஒளகொ புத்தி நயனத ஒளகோ
நயன புத்திகளெரடு நின்னொளகோ ஹரியே ||1||

குசுமதலி கந்தவோ கந்ததலி குசுமவோ
குசும கந்தகளெரடு ஆக்ராணதொளகொ
அசமபவ காகினெலெயாதி கேசவராய
உசுரலென்னளவல்ல எல்ல நின்னொளகொ ஹரியே ||2||

ஸ்ரீஹரி நமக்குக் கொடுத்திருக்கும் மாயை என்னும் திரையில் அவனும் இருக்கிறான். அல்லது அவனே மாயையோ என்று கேட்டு அதற்கான பதிலையும் கொடுக்கிறார். மேலோட்டமாகப் பார்த்தால், ஸ்ரீஹரி கொடுத்த தேகம் மாயை என்று பொருள் வந்தாலும், அனைத்திலும் அவனே இருக்கிறான் என்னும் சிந்தனை வருவதும் உண்மையே. ஒவ்வொரு வரியாக கவனமாகப் படிப்போம்.

இந்த உடலில் ஸ்ரீஹரி இருக்கிறான் என்று தெரிந்தவர்களுக்கு இந்த வாழ்க்கை, மாயை என்று பொருள் வருகிறது. அல்லது இந்த ஜீவன் மிகச் சிறந்தது என்பதை அறிகிறோம். மனையில் வீடு கட்டுகிறோம். கட்டிய பிறகு அது என் வீடு என்கிறோம். அதை மனை (Site) என்பதில்லை. அதை கண்களால் பார்த்து, வீடு நன்றாக இருக்கிறது என்கிறோம். அப்போது வீட்டை விட கண்கள் சிறந்ததாகின்றது. நம் அறிவினால் உந்தப்பட்டு, கண் மூலமாகப் பார்த்து, வீடு நன்றாக இருக்கிறது என்கிறோம். அந்த அறிவினைக் கொடுத்தவர் யார் என்று கேட்பவர்கள், மாயைகளிடமிருந்து தூரம் இருக்கிறார் என்கிறார் தாசர்.

2ம் பத்தியில்: பூவில் நறுமணம் இருக்கிறது. நறுமணத்தை வைத்து இந்தப் பூ என்று சொல்லலாம். அப்படியென்றால் பூவே நறுமணம் இல்லை. பூவுக்குள் நறுமணம் இருக்கிறது. இத்தகைய சம்பந்தத்தை செய்தவர் யார்? இந்த நறுமணம் இருக்கிறது என்று தெரிய வருவது நம் மூக்கினால். ஆகையால், இந்த மூக்கே அனைத்தையும் விட சிறந்தது எனலாமா? இத்தகைய பூ, நறுமணம் ஆகியவற்றை நமக்கு அறிமுகம் செய்தது யார்? இவை அனைத்திலும் ஒருவன் உள்உறைந்து இருக்கிறான். அவனே பிம்பரூபியான காகிநெலெ ஆதிகேசவன். நமக்கு உயிரைக் கொடுத்து, மேலே சொன்ன அனைத்தையும் நமக்கு தெரியப்படுத்தியனைப் பற்றி யார் சிந்திக்க வேண்டும்? ஸ்ரீஹரி தானே எப்படி நின்று இந்த அனைத்து செயல்களையும் செய்கிறான் என்ற ஞானத்தை நாம் வளர்த்துக் கொள்ளவேண்டும் என்பதே தாசரின் அபிப்பிராயம்.

ஸ்ரீஹரி விருப்பபட்டால் நமக்கு அறிவு வருகிறது. இல்லையேல் இல்லை. இதுவே ஜீவனின் அஸ்வதந்திரன், ஸ்ரீஹரியின் ஸ்வதந்திரம் ஆகியவற்றை எடுத்துக் காட்டுகிறது. தத்வத்தில் சித்தாந்தத்தை எடுத்துக் காட்டுவதே கனகதாசரின் தர்மம். இதையே 'ஜிக்ஞாசாதிகரண'த்தில் டீகாக்ருத்பாதர் சிறப்பாக விளக்கியிருக்கிறார்.

இன்னொரு விஷயம் - வேதங்கள். காலத்தால் மிகவும் முற்பட்ட இவற்றின் பொருளினை 21 மதாசார்யர்களும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அவரவர்களுக்கு புரிந்ததைப் போல சொல்லியிருக்கின்றரே தவிர, அவற்றின் உண்மையான பொருளை யாரும் சொல்லவில்லை. வேதங்களுக்கு சரியான பொருளைச் சொன்ன புண்யபுருஷர் ஸ்ரீமத்வர் மட்டுமே. மேலும் 10 உபநிஷத்களுக்கு உண்மையான பொருளைச் சொன்னவரும் இவர் மட்டுமே.

ஸ்ரீமத்வர் நமக்கு இவற்றை விளக்கிச் சொன்னதாலேயே, வேதங்கள் ஸ்ரீஹரியை மட்டுமே புகழ்கின்றன மற்றும் அவற்றில் மிகச்சிறந்த கருத்துகள் உள்ளன என்று நமக்குத் தெரியவந்தது. நமது உபாசனைக்குத் தேவையான விஷயங்கள் இதில் உள்ளன என்று நமக்குச் சொல்கிறார். இதில் சித்தாந்தம் மற்றும் தத்வம் என இவ்விரண்டும் உள்ளன என்று தெரிந்து கொள்வது அவசியம். இதன் நீட்சியே / தொடர்ச்சியே ஹரிதாச சாகித்யம் என்று சொல்வதில் ஒரு பிரச்னையும் இல்லை.

கல்லரளி ஹுவாகி எல்லரிகு பேகாகி
மல்லிகார்ஜுனன ஷிகரக்கெ பேகாகி
பல்லவரு ஹேளி சர்வக்ஞ ||

இதை ஒரு தத்வ-பதம் அல்லது புதிர் எனலாம். ஒரு கல் எப்படி பூக்கும்? வேறு ஒரு பொருளுடன் சேரும்போது. அது என்ன பொருள்? தண்ணீர். தண்ணீர் ஊற்றினால். மல்லிகார்ஜுனனின் சிகரத்திற்கு வேண்டி - என்றால் ஒரு சுவர் வெள்ளையாவதற்குத் தேவையான பொருள் - அதாவது சுண்ணம் என்று பொருள். இதனை அறிந்தவர் அறிஞர் - என்று கவிஞர் சொல்கிறார்.

ஆனால் இந்த பதத்தின் உட்பொருள் என்ன? சர்வக்ஞ என்றால் அனைத்தையும் அறிந்தவர். மல்லிகார்ஜுன என்றால் சிவன் எனலாம். மலையில் வாசம் செய்யும் சிவன் கல்லைப் போல் இருக்கிறான். இவன் மலர (தோன்ற) வேண்டுமெனில் நீர் வேண்டும். அந்த நீர் எது? நமது ஞானம் மற்றும் பக்தி. யாரொருவர் சிவனை ஞான பக்தியினால் தெரிந்து பூஜிக்கிறாரோ அவர் சிறந்தவர். அவருக்கு மட்டுமே சிவன் தரிசனம் கொடுக்கிறான். (சுவர்-சுண்ணாம்பு இதெல்லாம் மேலோட்டமான பொருள் மட்டுமே). ஆக, சொல்ல வந்த கருத்து - பக்தி இல்லாமல் ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைக்காது.

இன்னொரு பொருள்:

கல் என்றால் ஒரு ஜடப்பொருள். ஹரிஸ்மரணை யாரிடம் இருக்கிறதோ அவர் ஜீவன் இருக்கும் ஒரு பொருள். ஹரிஸ்மரணை இல்லையெனில் அது ஜீவன் இல்லாத கல் அவ்வளவே. இந்தக் கல் பூக்கவேண்டுமெனில் சர்வக்ஞனான மல்லிகார்ஜுனனின் அருள் தேவை. அதற்கு, அந்த ஜீவன், சிவன் இருக்கும் மலையில் ஏறி (ஞானத்தால்), அறிஞர்களிடம் அறிந்து பூஜித்தால், அவன் ஒரு நிஜமான பூ ஆகி ஸ்ரீஹரியை சேர்கிறான். இது பக்தியினால் மட்டுமே சாத்தியம் எனலாம்.

இப்படியாக, சிவசரணர்களின் சாகித்யம் தத்வங்களால் நிறைந்தது எனலாம். ஆனால், அவற்றில் பல த்வைத சித்தாந்த கருத்துகளும் காணமுடியும்.

ஹரிதாச சாகித்யத்தை இப்படித்தான் பொருள் கொள்ளவேண்டுமென்று ஒரு விதி/சட்டம் உண்டு. மற்ற சாகித்யங்களுக்கு இந்த விதியை சொல்லமுடியாது. முக்கியமாக அத்வைத சித்தாந்தத்தை சொல்லவந்த சிவசரணரின் சாகித்யம், த்வைத சித்தாந்தத்தையும் சொல்கிறது என்று பார்த்தோம். ஆகையால், இதை படிக்கும் மாணவர்களே, அறிஞர்களே மற்றும் மற்றவர்களே: ஹரிதாச சாகித்யத்தைப் படிக்கும்போது, அதன் உண்மையான பொருளைப் புரிந்துகொண்டு படித்தால் உண்டாகும் மகிழ்ச்சியே வேறு. இந்த மகிழ்ச்சியை நாம் உணரவேண்டும் அல்லவா?

சந்திரோதயகெ அம்புதி ஹெச்சுவுதய்ய
சந்திர குந்தெகுந்துவுதய்ய
சந்திரக்கெ ராஹு அட்ட பந்தல்லி
அம்புதிய முனி ஆ போஷணவகொம்பல்லி
ஆரிகாரு இல்ல கட்டவங்க களெ இல்ல
ஜகதனண்ட நீனெ அய்யா கூடலசங்கம தேவ

இதன் மேலோட்டமான பொருள் - பௌர்ணமியில் கடல் கொந்தளிக்கிறது. ஆனால், சந்திரனுக்கு நடுவில் ராகு வரும்போது, அதை கிரகணம் என்கிறோம். ஆனால், கூடலசங்கமதேவனான உனக்கு தடை போடுவது (நடுவில் வருவது) யாரும் இல்லை. காரணம் நீ உலகத்தின் தலைவன். அனைத்திலும் உள்உறைந்து இருப்பவன் - என்கிறார் பசவண்ணா.

ஆனால், இதில் மறைந்திருக்கும் த்வைத சித்தாந்த பொருளைப் பார்த்தோமேயானால்: பௌர்ணமியின் நிலவு, கடலுக்கு மகிழ்ச்சியை தரக்கூடியது. அமாவாசை சூரிய சந்திரனின் கிரகணத்திற்குக்கான காலம். ஆனால், ஸ்ரீஹரியான உனக்கு இவை எவற்றின் சம்பந்தமும் இல்லை. அவனாலேயே இந்த இரு செயல்களும் நடக்கின்றன. அவர் இருபேரிடமிருந்து ஸ்ரீஹரி வேறுபட்டு இருக்கிறான் என்று தெரிந்துகொள். அவனே பிம்பரூபியான ஸ்ரீஹரி - என்று பொருள் கொள்ளலாமல்லவா?

அதாவது சூரியன், சந்திரன், கிரகணம், ஸ்ரீஹரி மற்றும் ஜீவர்களான நாம் என அனைத்தும் ஸ்ரீஹரியிடமிருந்து வேறுபட்டிருக்கிறோம். ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்தை நினைத்து, அவன் அனைவரிலும் அந்தர்யாமியாக / பிம்பரூபியாக இருக்கிறான். அவனே கூடலசங்கம க்ஷேத்திரத்தில் ஜல-அந்தர்யாமியான சங்கர்ஷண என்று அறிந்தால் அதுவே சரியான அறிவு. குறையில்லாத அறிவு வளர்கிறதா இல்லையா? (வளர்கிறது).

எந்த சாகித்யத்தையும் இந்த மாதிரி ஆராய்ந்து அறியவேண்டுமா? இல்லையா? (அறியவேண்டும்). ***

# எவ்வளவு நற்பலன்? கெட்டபலன் என்றால் என்ன?

12.09.2011அன்று பாபரெட்டிப்பாளையத்தில் ஸ்ரீஜகன்னாததாசரின் ஆராதனையை ஒட்டி சொற்பொழிவு ஆற்றியபோது, அங்கிருந்த பலர் தங்கள் சந்தேகங்களைக் கேட்கத் துவங்கினர். எனது அறிவிற்கு எட்டியதைப் போல அவர்களுக்கு பதில் அளித்தேன்.

ரங்கனாதன்: வாதிராஜருக்கும் ஜகன்னாததாசருக்கும் சம்பந்தம் இருக்கிறது என்று சொல்கிறார்களே? அவர்கள் இருவரும் காலமும் வெவ்வேறு அல்லவா?

பதில்: வாதிராஜர் 1600ம் ஆண்டு பிறந்தவர். ஜகன்னாததாசர் 1809ம் ஆண்டு பிறந்தவர். இருவருக்கும் சுமார் 200 ஆண்டு காலங்கள் வித்தியாசம் உள்ளது. ஜகன்னாததாசர், வாதிராஜரின் அருளைப் பெற்று, அவரது அனுமதியுடன் ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றினார். இதை தனது பல-ஸ்ருதியில் ஸ்ரீதவிட்டலர் - வாதிராஜர கோஷக்கொப்பிசுவெ - என்று சொல்வதிலிருந்து அறியலாம்.

ரங்கனாதன்: நற்பலன் (விரும்பிய பலன்) என்றால் என்ன? கெட்ட பலன் என்றால் என்ன?

பதில்: தாங்கள் செய்யும் செயல்களை கிருஷ்ணார்ப்பணம் என்று சொன்னாலும், அது கிருஷ்ணார்ப்பணம் ஆவது எப்படி? என்றால் அதை சொல்லும் விதம், அனுசந்தானம் (சிந்தனை), மந்திரம், தந்திரம் - இவை அனைத்தும் ஒரு செயலுக்கு மிகவும் முக்கியமானதாகும். இவை அனைத்தும் சரியாகச் செய்யும்போது அதன் பலன் நூற்றுக்கு நூறு கிடைக்கிறது. இல்லையெனில், நாம் விரும்பிய பலன் வருவதற்கு சாத்தியமில்லை.

ரங்கனாதன்: இது உங்கள் கருத்து மட்டுமே. இது நிஜமாக இருப்பதற்கு சாத்தியமில்லை.

பதில்: நீங்கள் ஒப்பினாலும் ஒப்பாவிட்டாலும் இதுவே சரி. 'சோசிதகர்மகளாசரிசித பலு நீசரல்லிகே போகி யாசிசதே' என்று ஜகன்னாததாசர் ஹரிகதாம்ருதசாரத்தில் சொல்வதும் இதையேதான். இதற்கும் ஒப்பவில்லையெனில், விஜயதாசரின் சுளாதிகளைப் படிக்கவும்.

ராகவேந்திரர் தமது முந்தைய அவதாரங்களில் நரஹரியை உலகிற்குக் கொணர்ந்தவர் என்பது நம்பிக்கை. அவரது வினைப்பயன், தேவையைவிட அதிகமாக இருந்ததால், எவ்வளவு சாதனை வேண்டுமோ அது மட்டுமே அவர் செய்தார். அதிகமாக இருந்ததை அவர் செலவழித்தே ஆகவேண்டியிருந்தது. இதையே அவர், அவரை வணங்குபவர்களுக்கு பிரித்துக் கொடுக்கிறார். இது அவரது சேவை செய்பவர்களுக்கு அவரது வரப்பிரசாதம். ஆனால், ராயருக்கு அது அனிஷ்ட-பலம். இப்படி அனிஷ்ட-பலத்திற்கு, த்வைத சாம்ராஜ்யத்தில், ராயரை விட சிறந்த உதாரணம் வேறு யாரும் இல்லை.

ரங்கனாதன்: இந்த பதிலும் சரியில்லை. எங்களுக்கு கேள்வி கேட்கவே தெரியவில்லை என்று நினைக்கிறேன்.

பதில்: என்னிடம் நிறைய வேட்டி, சட்டைகள் இருக்கின்றன. யாரோ ஒருவர் வந்து கேட்கிறார். நான் அவருக்குக் கொடுத்தேன். அப்படிக் கொடுத்ததால் எனக்கு நட்டம் இல்லை. லாபமும் இல்லை. இது எப்படியோ அப்படிதாம் அதுவும். சரியா?

உண்மையைச் சொல்லவேண்டுமெனில், செய்யும் செயல்களுக்கு பலன் கிடைத்தாலும் கிடைக்கலாம். கிடைக்காமலும் போகலாம். ஆனால், தேவையைவிட அதிகமான புண்ணியம் கிடைத்தால், அதை ஸ்ரீஹரி ஏற்றுக்கொள்ளாமல், மறுபிறவியைக் கொடுத்து, அந்த அதிகமான புண்ணியத்தைக் குறைத்து (செலவழித்து), பின் வா என்று சொல்லிவிடுகிறான்.

இதற்கு சரியான உதாரணம், ஸ்ரீராகவேந்திரரே. பிரகலாதன், வியாசராஜராகி, ராயராகி, நிறைய புண்ணியங்களை சம்பாதித்து, அவரின் அதிகப்படியான புண்ணியத்தை செலவழிக்க வேண்டி ராயராகப் பிறந்து, கடந்த 346+ ஆண்டுகளாக 'அபேக்ஷித ப்ரதாதான்யோ ராகவேந்திரான்ய வித்யதே' என்று அவரது அருளை வழங்குவதே சாட்சியாகும்.

நாம் எவ்வளவு விவாதித்தாலும், நாம் அப்பண்ணாச்சாரியரை விட பெரியவர் அல்ல. ஆகவே அவர் சொன்னதைப் போல, சிந்தித்து ராயரை வணங்கி தன்யர் ஆவோமாக.

லட்சுமணனாக ஸ்ரீராமனின் சேவையை செய்து அதிகமான புண்ணியத்தைப் பெற்றதனால், அதனை செலவழிக்க வேண்டி, தனது கிருஷ்ண அவதாரத்தின்போது, அவனையே தன் அண்ணன் பலராமனாகப் பிறக்கச் செய்து, அந்த அதிகப்படியான புண்ணியத்தை ஸ்ரீஹரி குறைக்கவில்லையா? நமக்குத் தெரிந்தது மட்டுமே சரி என்னும் சிந்தனையை விடுவோம். உண்மையைத் தேடி, ஆராய்ந்து, உணர்ந்து செயல்படுவோம்.

அபரோக்ஷ நந்தரத மாடித விவித கர்ம
ஸ்வபன ஜாக்ரதாவஸ்தெவிடிமனித்யா
அபரிமிதவாகி இத்தவகெ கதி கேளு
அபவர்கதலி அனந்தாபிவிருத்திகெ
நிபுணதனதல்லி ஒதகுவதிதெ இஷ்டா
சபுண்யவெனிசுவது அனிஷ்டபுண்ய
உபகார மாடித ஜனரிகெ போபுது
விபுள விராஜா ஸ்னானக்கெ காரணவஹுது -- விஜயதாசரின் வாக்கு.

அவநம்பிக்கை கொண்டவர், சொன்னதைக் கேட்காதவர்கள் என அனைவரும் விஜயதாசரின் சுளாதிகளை கண்டிப்பாக படிக்கவேண்டும்.

***

# அபரோக்ஷ அனுபவம்

சம்ஸ்கிருத கிரந்தங்கள் எதை சொல்கின்றனவோ, அதை அப்படியே எளிமையான கன்னடத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்தவர்கள் ஹரிதாசர்கள் என்று அறிவோம். ஹரிதாசர்களின் சொற்களும் வேதவாக்கியங்களே. அவர்களின் சொற்கள் அனுபவத்தின் சொற்கள். அவர்களின் சொற்களில் எவ்வளவு நம்பிக்கை வைத்து நாம் அதை பின்பற்றுகிறோமோ, அவ்வளவு ஞானம் பெருகும்.

அபரோக்ஷ ஞானத்தைப் பற்றி எவ்வளவு விளக்கினாலும், அதை மற்றவர்களுக்கு கடத்தமுடியாது. ஆகவே தினம்தினம் நாம் நம் ஞானத்தை பெருக்கிக் கொள்ளவேண்டும்.

அபரோக்ஷம் என்றால் என்ன? அபரோக்ஷம் என்றவர் யார்? இதைப் பற்றி முதலில் தெரிந்துகொள்வோம்.

அபரோக்ஷ:

நேராகப் பார்ப்பது, அனுபவிப்பது என்பது ஒரு செயல். தானாக அனுபவம் பெற்று பலன்களைப் பெறுவது பரோக்ஷ அனுபவம். உதாரணம்: விதையை காப்பாற்றி, அதை நட்டு வைத்தால், பின் அது முளை விட்டு, மரம், பூ, காய், பழம் விடுகிறது. பின் அந்தப் பழத்தை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து, அதை ஸ்ரீஹரியின் பிரசாதமாக நாம் எடுத்துக்கொண்டால் வயிறு நிரம்பும் அனுபவம் ஆகிறது. அப்போது மனதிற்கு ஏற்படும் மகிழ்ச்சி மிக அதிகம். கூட நாம் வளர்த்த மரத்திலிருந்து வந்த பழம் என்னும் மகிழ்ச்சியும் வரும் அல்லவா? அப்படியே நாம் செய்த செயல்களினால் வந்த பலன்களை, நாமே அனுபவிக்கும் தகுதி பெறுவதே பரோக்ஷ ஞானம்.

எடுத்துக்காட்டு:

ஸ்ரீஹரியை பக்தியுடன் வணங்கி தாம் செய்யும் அனைத்து செயல்களையும் அவனுக்கே அர்ப்பித்து, நேரடியாக ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறுபவர்கள் ருஜு கணஸ்தர்கள் மற்றும் பரசுக்ல த்ரயர்கள் என்பது ஐதீகம். இதைப் பற்றி ஸ்ரீவாதிராஜர் தனது ஸ்வப்ன விருந்தாவனாக்யான கிரந்தத்தில் அதிக விவரங்கள் கொடுத்திருக்கிறார்.

ஸ்ரீமத்வர் பாடம் எடுத்துக்கொண்டிருந்தபோது, தீபம் அணைந்ததால், தமது கால் கட்டைவிரலிலிருந்து ஒளி தருவித்து, பாடத்தை முடித்தார் என்று சொல்லக் கேட்கிறோம். அத்வைத பண்டிதர்கள் மந்திரத்தால் விதையை முளைக்க வைக்க முடியாதபோது, மத்வர் வேத மந்திரத்தைச் சொல்லி அவ்விதையை முளைக்கச் செய்ததையும் படிக்கிறோம்.

அப்போது அவர்களின் கேள்விக்கு பதிலளித்த ஸ்ரீமத்வர், வேத மந்திரங்கள் அபௌருஷயமானவை (அனாதி காலத்திலிருந்து இருப்பவை). இதில் நம்பிக்கை தேவை. அதை பின்பற்ற வேண்டும். மந்திரம் நமது வசமாகவேண்டும். இதை செய்தவன் நான் இல்லை. ஸ்ரீஹரியே செய்கிறான் என்ற நம்பிக்கை தேவை. இத்தகைய சிந்தனைகள் நமக்குள் வரும்போது, இந்தச் செயல் உங்களுக்கும் சாத்தியமே. இதைக் கேட்ட அவர்களுக்கு பேச்சே எழவில்லை.

1. அர்ஜுனன் 2. வைகுண்ட தாசர் 3. கனகதாசர் 4. புரந்தரதாசர் 5. அக்ரூர என பலரும் ஸ்ரீஹரியை நேராக தரிசனம் செய்தவர்கள் என உதாரணம் இருக்கிறது.

அபரோக்ஷ ஞானம்:

நாம் செய்யும் செயல்களுக்கு பலன் கிடைக்கிறது. அதுவே ஸ்ரீஹரியின் விருப்பம். அவரே நேரடியாக வந்து நமக்கு பலன்களைக் கொடுக்காவிட்டாலும், வேறொருவரின் மூலமாக கண்டிப்பாகக் கொடுக்கிறார். இந்த வழியை அபரோக்ஷ ஞானம் எனலாம்.

இத்தகைய ஞானம் நமக்கு வரவேண்டுமெனில் அதிகமான சாதனை செய்திருக்க வேண்டும். செய்ய வேண்டும். ஆசார்யர் ஸ்ரீமத்வர் சொன்னதுபோல சதாசாரியாக (எப்போதும் நற்செயல்களை செய்பவர்) இருக்கவேண்டும். சதாசார தர்மம், தந்திரசார தர்மம் ஆகியவற்றை அறிந்து செயல்களை செய்ய வேண்டும் என்கிறார். சோசித கர்மத்தையே (ஸ்வ-உசித-கர்ம) செய்ய வேண்டும். செய்யும்போது - நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா - என்னும் சிந்தனை இருக்கவேண்டும். பலனை எப்போதும் எதிர்பார்க்கக் கூடாது. கல்வி, சூழ்நிலை, குருவிடம் உபதேசம், சத்கர்மங்களைப் பற்றிய அறிவு, குறைந்து பேசுதல், நம் சனாதன தர்மத்தில் ஈடுபாடு, குருபரம்பரையைப் பற்றிய அறிவு - என இந்த அனைத்து விஷயங்களிலும் அறிவு, ஈடுபாடு இருக்கவேண்டும். இவற்றை வளர்த்துக்கொண்டு தினமும் ஸ்ரீஹரியை வணங்கிவந்தால், அவனது அருள் கிடைக்கும்.

ஒரு பிறவியில் ஒரு காலத்தில் அவனது அருள் கிடைக்காது. பற்பல பிறவிகளின் செயல்களே அவனது அருளுக்குக் காரணம் ஆகும் என்கின்றனர் பெரியவர்கள்.

அபரோக்ஷ ஞானத்தைப் பெறுவது எப்படி? 'சுலப பூஜெய மாடி பலவில்லாதவரு' என்னும் கிருதி இதற்கான பதிலை அளிக்கிறது. பிறந்திருக்கும் அனைவருக்கும் அபரோக்ஷ ஞானம் சாத்தியமே என்பது எனது அபிப்பிராயம். ஆனால் அதைப் பெறுவதற்கான முயற்சியை நாம் யாரும் எடுப்பதில்லை என்பதே நிஜம்.

வயிறு பசிக்கிறது. அதை போக்குவதற்கு சமையல் செய்து சாப்பிட வேண்டும்தானே? சாப்பிடாமல் பசி அடங்கவேண்டும் என்றால் அது எப்படி

சாத்தியம்? போலவே, அபரோக்ஷ ஞானம் பெறுவதற்கு சில செயல்களை செய்யவேண்டியிருக்கிறது.

1. முதல் முக்கியமான வேலை என்னவென்றால் எப்போதும் ஸ்ரீஹரியின் சிந்தனை இருக்கவேண்டும்.

2. சுகம் துக்கம் எது வந்தாலும் இந்த சிந்தனை அவசியம்.

3. தன் சுதர்மத்தை எப்போதும் எந்த காரணத்திற்காகவும் விடக்கூடாது.

4. ஸ்நான, சந்தியாவந்தனம், ஜபம், தவம், பாராயணம் ஆகியவற்றை கண்டிப்பாகச் செய்யவேண்டும்.

5. பாடம் படித்தல், பிரவசனங்களைக் கேட்டல் ஆகிய செயல்கள் தொடர்ந்து செய்திருக்கவேண்டும்.

6. ஞானம் என்பது இலவசமாகக் கிடைக்கக்கூடியதல்ல என்னும் அறிவு நமக்கு வேண்டும்.

7. இந்த உடலையே ஒரு க்ஷேத்திரம் என்று அறிந்து, அங்கு ஸ்ரீஹரி இருக்கிறான். அவனே பிம்பரூபி, அவனே க்ஷேத்ரக்ஞன் என்று அறியவேண்டும். அனைவரும் பிம்பரூபியும் எனது பிம்பரூபியும் ஒன்றே என்று அறியவேண்டும்.

8. அனைத்து க்ஷேத்திரங்களிலும் ஸ்ரீஹரி இருக்கிறான் என்று அறிவு வளர்ந்துகொண்டே இருக்கவேண்டும். சமஸ்கிருதத்தின் பிரம்மசூத்ர கிரந்தம் இதையே சொல்கிறது.

9. நம்மில் இருக்கும் பஞ்சபூதங்கள், தச இந்திரியங்கள், மனது இவையே நமது சுகம், துக்கம், த்வேஷம் ஆகியவற்றிற்குக் காரணம் என அறியவேண்டும்.

10. பொருட்களில் வைராக்கியம் இருக்கவேண்டும். பிறப்பு, இறப்பு, நோய், சுகம், துக்கம் இவற்றில் சம நிலை உணரவேண்டும்.

11. ஸ்ரீஹரியிடம் பக்தி, தனிமையில் இருந்து ஸ்ரீஹரி சிந்தனையில் இருப்பது ஆகியவை முக்கியம்.

12. ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானம் தேவை. இந்த ஞானம் யாருக்கு வருகிறதோ, அவரே அபரோக்ஷிகளாவது சாத்தியம். ஸ்ரீஹரியை விட்டு மற்ற தேவதைகளை பூஜித்தால் ஞானம் வராது.

13. ஸ்ரீஹரி ஞானகம்யம் - ஞானத்திற்கு மட்டுமே தோன்றுபவன்.

14. ஸ்ரீஹரி அனாதி (எப்போதும் இருப்பவன்), ஜீவன் அனாதி என்னும் ஞானம் தேவை.

15. சிலர் தியானத்தினால், சிலர் ஞானத்தினால் மற்றும் சிலர் கர்மயோகத்தினால் பூஜிக்கின்றனர். இந்த மூன்று வழிகளும் சரியானவையே. ஆனால் ஞானத்துடன் இவற்றை செய்தால், அனைத்து செயல்களிலும் ஸ்ரீஹரியை காண்பது சாத்தியமே.

16. இதற்காகவே, பிரகலாத ராஜர், 'ஸ்ரவணம்' என்று துவங்கி நவவித பக்தியை (ஒன்பது விதமான) சொல்கிறார். அதாவது, 'கேட்பது' சிலருக்கு பிடித்தமானது. அதனாலும் அவர்கள் ஞானத்தைப் பெறுகின்றனர். இதனாலும், பிறப்பு இறப்பு சுழற்சியை தவிர்க்கமுடியும்.

17. அனைத்து ஜீவர்களிலும் ஸ்ரீஹரி அந்தர்யாமியாகி இருந்தாலும், அவர்களிடமிருந்து அவன் வேறுபட்டே இருக்கிறான். போலவே அவனை வழிபடும் நாம், பிரம்மஞானியானாலும் கூட, அவனுக்கு சமமோ, ஸ்ரீஹரியாகவோ முடியாது. அவன் ஈசன் நாம் எப்போதும் அவனின் தாசன் என்று தெரிந்து - ஈச நின்ன சரண பஜனே - என்று வணங்கினால் ஞானம் வருவதற்கு வாய்ப்பு உண்டு. ஒரே ஒரு சூரியன் மொத்த உலகத்திற்கும் எப்படி ஒளி கொடுக்கிறதோ, அது போல ஒருவனே ஆன ஸ்ரீஹரி அனைவரிலும் அந்தர்யாமியாக இருந்து நமக்கு (அக) ஒளி கொடுக்கிறார். இப்படி ஒளியைக் கொடுப்பவர் அவரே என்ற சிந்தனை நமக்கு வரவேண்டும்.

18. அவனையே எப்போதும் சிந்தித்து வணங்கி, ஞானத்தைப் பெற்றால், அத்தகையவர்களுக்கு துக்கமே வருவதில்லை. சாத்விக உணவினை உண்பது அவசியம். அப்படி உண்டாலும், காம, கிரோத, லோப, மோஹ, மத, மாச்சரியம் ஆகியவை அதிகமானால், அத்தகைய சாத்விக உணவும் பயன் தராது. அஞ்ஞானமே வளரும்.

19. 'சுகவாகலி பஹு துக்கவாகலி சக நீனாகிரு பாண்டுரங்க'. 'இட்டாங்கே இருவேனு ஹரியே என்ன தொரெயே' - இச்சிந்தனைகள் எப்போதும் இருக்கவேண்டும். அதாவது, அனைத்து நிலையிலும் சமநிலை இருக்கவேண்டும்.

20. ஹரிதாசர்கள், மத்வரின் சித்தாந்தத்தையே பின்பற்றி வந்ததால், இங்கு மேலே கூறிய மத்வரின் தத்வசாரத்தினை படித்து, உணர்ந்து அறிந்து கொண்டால் அனைவருக்கும் அபரோக்ஷ ஞானம் சாத்தியமே.

மேலும் ஹரிதாசர்களின் கிருதிகளில் அவர்கள் என்ன சொல்லியிருக்கின்றனர் என்று பார்க்கலாமா?

1. ஸ்ரீவியாசராஜர் தமது சிஷ்யரைப் புகழ்ந்து பாடிய பாடலில்:

நீதியல்லவனரிது நிகமவேத்யன நித்ய
வாதசுதனல்லிஹன வர்ணிசுதலி
கீதா நர்த்தனதிந்த கிருஷ்ணன பூஜிசுவ
பூதாத்ம புரந்தர தாசரய்யா

என்று மேலே கூறிய அனைத்து குணங்களையும், தமது சிஷ்யரான புரந்தரதாசர் பெற்றிருக்கிறார் - பின்பற்றி வருகிறார் என்கிறார்.

2. கண்ணினிந்தலி நோடோ ஹரிய
ஔகண்ணினிந்தலி நோடோ மூர்ஜகதொடெயன

3. அந்தரங்கத கதவு திளியிதிந்து

4. தர்மவே ஜயவெம்ப திவ்ய மந்த்ர

5. மரெயதெலெ ஹரிய நாம பரெது ஓதி கேள்வரிகெ
கரெது முக்தி கொடுவ நெலெ ஆதிகேசவ

6. பொக்களல்லி அஜன படெத தேவதேவனு
சிக்க அங்குஷ்டதலி கங்கெய படெதனு
மக்கள மாணிக்ய குரு புரந்தர விட்டலனு
அக்கரெயிந்தலி முகுதிகொடுவ ரங்கநாதனு
(ராமகிருஷ்ணரு மனெகெ பந்தரு பாகில தெகெயிரோ)

7. எச்செத்து இது கண்ட்யா மனவே
நம்ம அச்சுதன அங்க்ரிகள நெனெ கண்ட்யா மனவே ।
கஷ்டபரதெ சுக பரது கங்
கெட்ட மேலின்னு கஷ்ட திளியுவுது
துஷ்ட விஷயதாஸெ ஜரிது - விஜய
விட்டலனோள்ஹரிது முக்தி தொரெயது கோகிலவோ பாய்தெரது ॥

8. முக்திதாயக உடுபிய கிருஷ்ணராய
பக்தவத்ஸல ஸ்ரீபுரந்தரவிட்டல ।
இல்லிரலாரெ அல்லிகெ ஹோகலாரே
புல்லனாப நீனித்தல்லி சேரிசென்ன ॥

9. சும்மனெ பருவுதுதெ முக்தி நம்ம அச்சுதன நெனெயதெ

இப்படி பற்பல பாடல்களில் ஹரிதாசர்கள் மோட்சத்தைப் பற்றியும் அபரோஷத்தைப் பற்றியும் விளக்கியிருக்கின்றனர். இந்த வழியிலேயே நாம் செல்ல விரும்பி, ஸ்ரீஹரியிடம் பக்தி செய்து, சாதனைகளைச் செய்து வாழ்வோமாக.

அபரோக்ஷத்தைப் பற்றி யார் பேசினாலும், கிருதிகள் மூலம் பாடினாலும் அது சாத்தியமில்லை. இது ஒரு அனுபவம். சாதகர்கள் இதை தமக்குத் தாமே

அனுபவித்து மகிழ்ச்சியடைய வேண்டுமே தவிர, இதனை செய்து காட்டுதல் முடியாது.

ஆத்யாத்மிக சிந்தனையில் சாதனை செய்ய முற்படுபவர்கள், எந்தவொரு நற்பலன்களையும் வேண்டாமல், செயல்களை மட்டும் செய்துகொண்டிருக்க வேண்டும். அது அனுபவத்திற்கு வரும்போது, அற்புதமாக மாறுகிறது. இது ஸ்ரீஹரி செய்யும் செயலாகும். தான் ஜீவரில் இருந்து செய்து, அவருக்கு நற்பெயரை பெற்றுத் தந்து, தான் அதில் சம்பந்தப்படாமல் இருக்கிறான்.

- ஸ்ரீபாதராஜர் கொடுத்த அங்காரம் தங்கமானது எப்படி?
- மற்றும் சங்கு தீர்த்தத்தினால் அழுக்கான வேட்டி வெளுப்பானது எப்படி?
- கொண்டு வைத்த மாமிசத்தை, பூ பழமாக ஸ்ரீராகவேந்திரர் மாற்றியது எப்படி?
- தாம் இருந்த இடத்திலிருந்தே, ஹம்பியிலிருந்த ருத்ரதேவரின் ஆலயத்தில் எழுந்த நெருப்பை, வியாசதத்வக்ஞ ஸ்வாமிகள் எப்படி அணைத்தார்?
- தாம் உண்ட உணவினை அப்படியே வெளியில் எடுத்து வைத்தாரே புரந்தரதாசர், அது எப்படி?
- மத்வர் தமது கால் கட்டைவிரலிலிருந்து ஒளி கொண்டுவந்தது எப்படி?
- கனகதாசருக்கு கோண மந்திரம் சித்தியானது எப்படி?
- விஜயதாசர் எப்படி ஆயுள் தானம் செய்தார்?
- கோபாலதாசர் எப்படி ஆயுள் தானம் செய்தார்?
- கல்லூர் சுப்பண்ணரை விஜயதாசர் ஏன் பங்கனாமத திம்மண்ணரிடம் அனுப்பினார்?

மேற்கண்ட சம்பவங்களைப் பார்த்தால், ஆராய்ந்தால், இது எப்படி சாத்தியாமாயிற்று? இதற்கான விடையினை சாதகர்கள் தேட முற்பட்டால், பதில் கிடைத்தபிறகு அவரும் அபரோக்ஷஞானிகள் ஆகிவிடுவர் என்பதில் சந்தேகமில்லை. இது எனது அபிப்பிராயம்.

***

# ஹரிதாச சாகித்யத்தில் என்ன இருக்கிறது?

மத்வரால் விதைக்கப்பட்டு, நரஹரி தீர்த்தரால் முளை விட்டு, ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜரால் பூ பூத்து, புரந்தர கனகதாசர்களால் பழம் காய்த்து, பிரசன்ன வேங்கட, மஹிபதி, விஜயதாசர் அதன் சாற்றினை எடுத்து, பின் அதன் பற்பல பகுதிகள் ஜாம்பவதிப்ரியவிட்டலன் மனம் மகிழுமாறு வெளிவந்துள்ளன. இதுவே புரந்தரோபநிஷத் ஆயிற்று.

19-20ம் நூற்றாண்டில் நவீன கன்னட கவிஞர்களின் கையில் சிக்கி அதன் அழகினை இழந்து நிற்கிறது. தத்வம் இல்லை, பொருள் இல்லை, ஞானம் இல்லை, சித்தாந்தம் இல்லை என பல இல்லைகள். அனைவரும் கவிதை எழுத வந்துவிட்டதால், கவிதையின் அழகு, பொருள் ஆகியவை மறைந்துவிட்டது. டிவி, வானொலி, திரைப்படங்களில் சொல்வதைக் கேட்டு மகிழ்ந்திருப்பதே வாழ்க்கை என்று ஆகியிருக்கிறது. இதுவே நவீன சங்கீதத்தின் கதி. இருக்கட்டும்.

இவர்கள் அனைவரும் பேசுவது, மற்றவர்களின் சங்கீதத்தைவிட தமது சங்கீதத்தைப் பற்றி மட்டுமே - அதாவது தன் முதுகை தானே தட்டுவது போலாகும். அதாவது பம்ப, ராஜ்யோத்ஸவ, சரஸ்வதி சம்மான் ஆகிய விருதுகளுக்குத் தகுதி பெற்றவர்களைப் போல பேசுவது, கன்னடத்தின் வளர்ச்சியா / வீழ்ச்சியா என்று யோசிக்க வேண்டிய நிலைக்கு வந்துவிட்டிருக்கிறோம்.

இத்தகைய கவிஞர்களின் காவியங்களினால் பயனடைந்தவர்கள் யாரேனும் உண்டோ? தத்வ சிந்தனை இல்லை. ஸ்ரீஹரியின் ஸ்மரணை இல்லை. அவரவர்களைப் பொறுத்தவரை அவரே பெரியவர். இருக்கட்டும்.

இவர்கள் அனைவரும் ஸ்ரீஜகன்னாததாசர் எழுதிய ஹரிகதாம்ருதசாரத்திற்கு உரை எழுதக் கூடியவரோ? கனகதாசரின் முண்டிகே (புதிர்) விடுவிக்கக் கூடியவரோ? பலரை கேட்டால் பதில் வராது. இன்னும் 50-60 ஆண்டுகளில், ஹரி ஸ்மரணையே இல்லாத காவியங்கள் வரப்போகின்றன. அடுத்த 200 ஆண்டுகளில் நிலை மிகவும் மோசம் அடையப்போகிறது. இன்றைய கன்னட ராஜ்யோத்ஸவம் கொண்டாடப்படும் விதம் அப்படி.

இது இருக்கட்டும். இவர்களைவிட கொஞ்சம் தூரத்தில் இருக்கும் ஹரிதாச சாகித்யத்தில் அப்படி என்ன இருக்கிறது? ஹரிபக்தியைத் தவிர வேறு என்ன இருக்கிறது என்று கேட்பவர்களுக்கு பதில் இதுவே. இதன் பொருள், உட்பொருள், ரகசிய உள்ளர்த்தத்தை தெரிந்து கொள்ளுங்கள். அப்போது தெரியும் இதில் என்ன இருக்கிறது என்ன இல்லையென்று.

ஹரிதாச சாகித்யம் என்பது உறைந்து நிற்கும் நீர் அன்று. கங்கையைப் போல கட்டற்று ஓடுவது. பரம்பரையில் வந்த சாகித்யம் நில்லாது, இன்னும் ஆயிரம்

ஆண்டுகள் ஆனாலும் ஒரு குறையும் இன்றி ஓடக்கூடியதாகும். நம்பிக்கை கொண்டவர்களுக்கு ஸ்ரீஹரிபாதங்களை காட்டிக் கொடுப்பதே இதன் நோக்கமாகும்.

உதாரணம்: புரந்தர, கனகதாசர், ஸ்ரீபாதராஜர், வியாசராஜர், வாதிராஜர் ஆகியோரின் பாடல்களினால் பலர் தேறியிருக்கின்றனர். இந்த அனைவரின் கிருதிகளினால் விஜயதாசர், கோபாலதாசர், ஜகன்னாததாசர் ஆகியோர் பலனடைந்திருக்கின்றனர். ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரத்தினால் பிராணேசதாசரின் பாண்டு நோய் நீங்கியிருக்கிறது. விஜயதாசரின் உகாபோகம் 'ஒந்து கையல்லி' யினால், கோபாலதாசரின் துர்மரணம் நீங்கியிருக்கிறது.

இப்படி சரித்திரத்தில் பலர் பயன்பெற்றதை இப்போதும் நாம் எடுத்துக்காட்டுவதைப் பார்த்தால், ஹரிதாச சாகித்யம் மோட்சத்திற்கான வழியே என்று சொல்வதில் தடையேதும் இல்லை.

இத்தகைய சாகித்யத்திற்கு இன்று விலை இல்லை. ஹரிதாச சாகித்யத்திற்கு ராஜ்யோத்ஸவ விருது கிடைப்பதே இல்லை. இப்படி சிந்திப்பவர்கள்கூட எனது 50 ஆண்டு கால அனுபவத்தில் யாருமில்லை. இந்த சாகித்யத்தில் இருக்கும் சிறப்பம்சங்களை நாம் கவனிக்கவேண்டும், கௌரவம் கொடுக்கவேண்டும். நினைக்கவேண்டும். இதுவே என் வேண்டுகோள்.

***

# ஸ்ரீமன் மத்வாசாரியர்

சுமார் 750 ஆண்டுகளுக்கு முன் தென் கர்நாடகா பாஜக க்ஷேத்ரத்தில் ஸ்ரீ மத்வர், ஆனந்ததீர்த்தர் என்ற பெயரில் அவதரித்தார். சமூகத்தில் குறைந்து கொண்டிருந்த ஆன்மிக சிந்தனையை மறுபடி தழைக்கச் செய்தவர். பாலகிருஷ்ணன் சிலையை உடுப்பியில் ஸ்தாபித்து, பக்தர்களை காத்தவர். இந்த பிறவிப் பெருங்கடலை தாண்டுவதற்கு, ஸ்ரீஹரியிடத்தில் பக்தி கொண்டு, அவன் புகழைக் கொண்டாடுவது ஒன்றே வழி என்று தம் கிரந்தங்கள் மூலமாக நிறுவியவர்.

மாக சுக்ல நவமியன்று மத்வர் அவதரித்தார். மனிதர்களின் பார்வையில் தென்படாமல், இமயமலையின் அந்தப் பக்கத்தில், ஸ்ரீ வேதவியாசரிடத்தில் இன்றும் பாடம் படித்து வருகிறார். இவர் மொத்தம் 36000 ஆண்டுகள் மனித உருவில் இப்பூவுலகில் இருப்பார். உடுப்பியில் இன்றும் ஸ்ரீமத்வர், கிருஷ்ணனின் பூஜை செய்து கொண்டிருக்கிறார் என்று ஸ்ரீவாதிராஜர் 'சரச பாரதி விலாச' என்னும் தன் கிரந்தத்தில் சொல்கிறார். ஸ்ரீ மத்வரின் வாழ்க்கைச் சரித்திரத்தை, அவரது சமகாலத்தவராகிய ஸ்ரீ நாராயண பண்டிதாச்சார்யர், சுமார் 1000 ஸ்லோகங்களில் தன் கிரந்தத்தில் எழுதியிருக்கிறார். அந்தக் கிரந்தம் மூலமாக, ஸ்ரீமத்வரே வாயுதேவர் என்பதும் தெரியவருகிறது.

பலித்தா சூக்தத்தில் (இது ரிக் வேதத்தில் 141வது சூக்தம் ஆகும்) கூறியபடி, தாமே பிராணதேவரின் மூன்றாவது அவதாரம் என்பதாக ஸ்ரீமத்வர் குறிப்பிடுகிறார்.

த்ரிவிக்ரம பண்டிதாச்சார்யர் ஒரு மகாஞானி. ஸ்ரீமத்வர் தன் 3 அவதாரங்கள் மூலமாக ஸ்ரீகிருஷ்ணரை பூஜை செய்வதை கண்டவர். அந்த ஆனந்தத்தில் ஒரு ஸ்தோத்திரம் எழுதினார். அதில் தாம் கண்ட அற்புதக் காட்சியை வர்ணித்தார். அதுவே ஸ்ரீ வாயுஸ்துதி. ஸ்ரீ வாதிராஜர், ஸ்ரீ ராகவேந்திரர் மற்றும் பற்பல யதிகள், கூடவே ஸ்ரீ புரந்தரதாசர் முதலான பல ஹரிதாசர்கள் சொல்வதெல்லாம் ஒன்றே. நம் குருவான ஸ்ரீ மத்வரே நமக்கு கதி, அவர் மூலமாகவே நமக்கு மோக்ஷம் என்று சபதம் செய்கின்றனர். ஆகவே இப்படிப்பட்ட முன்னோர்கள் சொல்லும் வழியில் செல்வதே நம் கடமை.

ஸ்ரீஹரியை நமக்கு காட்ட வல்லவர் ஸ்ரீமத்வர். 'பாரதிஷ பாதவனரியத மனுஜனு நாராயணன பல்லனே' என்று மோகனதாசர் ஆணித்தரமாகக் கேட்கிறார். ஆகவே, மோட்சம் வேண்டும் என்று ஆசைப்படுபவர்கள் முதலில் பாரதிஷனின் பாதத்தை வணங்க வேண்டும். அவரது சேவை என்றால் என்ன? அஷ்டோத்தர அர்ச்சனை, பஞ்சாம்ருத அபிஷேகம், அலங்காரம், வெண்ணைக் காப்பு, வெற்றிலை மாலை, காய்கறி மாலை இவற்றைச் செய்து விட்டால், அவரது கருணைக்குப் பாத்திரம் ஆவோமா? அப்படியென்றால் என்ன செய்ய வேண்டும்?

ஸ்ரீமத்வரின் கிரந்தங்களை படித்து, அதன் பிரகாரம் நடந்து கொள்வதே அவரது அனுக்கிரகம் மற்றும் கருணையைப் பெறும் வழியாகும். அதுவே மோட்சத்துக்கு தகுந்த வழி.

'பரமத்வ ஸாஸ்திர ஒதுவுதே மாங்கல்ய' என்று விஜயதாசரும் சொல்கிறார்.

புரந்தரவிட்டலனு ஹனுமனுள் வாசா, ஹனுமனு புரந்தரவிடடலன தாஸா - என்று புரந்தரதாசர் கூறியிருக்கிறார்.

த்வைதம் இல்லாத மற்ற சாஸ்திரங்களை, அங்கிதம் இல்லாத கிரந்தங்களை கண்ணெடுத்து பார்க்கவே கூடாது என்று சொல்லியிருக்கின்றனர். இப்படி நமக்கு சொல்லிக் கொடுப்பவர் யார் இருக்கின்றனர்? இதுதானே நமக்கு மிகவும் தேவையான சாஸ்திர ஞானம்?

மத்வ ராயரா கருணே படேயத்தவ தரையோலகே இத்தரேனு? இல்லத்திதரேனு?

மத்வ மதவே மதவு சகல ஸ்ருதி சம்மதவு
மத்வ ராயரா த்யான அம்ருத பான
மத்வ ராயரா லீலெ நவரத்னத மாலே
மத்வ ராயரா ஸ்மாரனே குல கோடி உத்தரணே (1 )

மத்வ ராயரா கதா கேளலு துரிதஹத
மத்வ ராயரா பகுதி மாடே முகுதி
மத்வ ராயரா ஸ்தோத்ர மாடிதவ ஸத்பாத்ர
மத்வ ராயரா பஜனே தூஷகர்ம, த்யஜிஸி

மத்வ ராயரா தாசனாதவனே நிர்தோஷ
மத்வ ராயரா பண்டா ஜரகே நேண்டா
மத்வ ரமண விஜயாவிடடலன கிங்கரராத
மத்வர காரண்ய படேதவனே தன்ய

இந்தப் பாடல் எவ்வளவு பொருள் கொண்டுள்ளது பாருங்கள்.

ஜகன்னாததாசரைப் பார்த்தவுடனேயே, அவரின் வருங்காலத்தை (அதன் சிறப்பை) அறிந்த கோபாலதாசர், தன் 40 ஆண்டு காலத்தையே அளித்தாரே, இது ஒரு குருவின் மகிமை இல்லையா?

பஞ்சம் வந்தபோது, ஹோஸ்பேட்டில் ஒரு ஆண்டு காலம் தன் சிஷ்யர்களுடன் தங்கியிருந்து அங்கிருந்த மக்களை வியாசராயர் காப்பாற்றினாரே?

ஒரு காது-கேளா-வாய்-பேச-முடியாத பிராம்மணர் மூலமாக வாதிராஜர் எழுதிய 'ஸ்வப்னவ்ருந்தாவனக்யான' கிரந்தத்தை, வேதநிதி தீர்த்தர் மூலமாக வெளிக்கொணர்ந்ததும் குருவின் மகிமை அல்லவா?

இவ்வளவு மகிமைகளை குரு ஸ்தானத்தில் இருந்து நடத்தி வைப்பவரை குரு என்று அழைத்தால் தப்பா? இதைவிட்டு, ஊரில் இருப்பவர்களை xyz குரு என்று அழைக்கின்றனர். குரு என்ற சொல்லுக்கு பொருள் இருக்கிறதா என்று சரியாகத் தெரிந்து கொள்ளுங்கள் என்று சொல்கிறார் மத்வர்.

***

**ஹரிதாச சாகித்ய மகாவித்யாலய மற்றும் ஆராய்ச்சி மையம்**
**கோவிந்த நிவாஸ, No.15 பார்வதி நகர், பீன்யா, பெங்களூரு 58**

ஶ்ரீஹரி பக்தர்களே,

ஹரிதாச சாகித்யம் என்பது வாழ்க்கையில் முதன்மையானது. இதுபோல் சங்கீத சாகித்யத்தை எல்லா பக்தர்களும் கற்று வாழ்க்கையை முழுமையாக்கிக் கொள்ளவேண்டும். ஹரிதாச சாகித்யத்தை படிக்கும் வழக்கத்தை மேம்படுத்தும் நோக்கத்தில் மகாவித்யாலயம் கடந்த 20 ஆண்டுகளாக பல்வேறு தேர்வுகளை நடத்தி வருகிறது. அனைவரும் இந்தத் தேர்வுகளை எழுதி அவற்றின் பலனை அடையவேண்டுமென்று கோருகிறோம்.

ஹரிதாச சாகித்ய பூஷண - பட்டம் பெற்றோர் இதுவரை 230 பேர்
ஹரிதாச சாகித்ய ரத்ன - பட்டம் பெற்றோர் இதுவரை 50 பேர்
ஹரிதாச சாகித்ய விஷாரதம் - பட்டம் 6 பேர்
M.Phil - 6 பேர்
கௌரவ டாக்டரேட் மத்வபுரந்தர - 2 பேர்

ஜீவனுடன் இருக்கும் ஹரிதாச சாகித்யத்தை அறிய தாங்கள் அனைவரும் முன்வந்து படித்து, எழுதி, பட்டம் பெற்று மேலும் இதை ஆராய்ந்து அதை நம் எதிர்காலத்திற்குக் கொண்டு செல்லவேண்டுமென்று கோருகிறோம்.

ஹரிதாச சாகித்யத்தை அறிந்து, உணர்ந்து, அதை வாழ்க்கையில் பயன்படுத்துவதே நாம் 'ஆசாரியர் ஶ்ரீமத்வருக்கு' செலுத்தும் காணிக்கையாகும்.

மகாவித்யாலயத்தில் நடக்கும் தேர்வுகளின் விவரம்
குழந்தைகள், பெரியவர்கள் என அனைவரும் - எந்த மொழியில் வேண்டுமானாலும் இந்தத் தேர்வுகளை எழுதலாம்

1. பாலபோதா - தேர்வுக்குத் தெரியவேண்டியது - புரந்தரதாசரின் வாழ்க்கைச் சரித்திரம், சாதனை மற்றும் அவர் எழுதிய 10 பாடல்கள்.
2. கோவிதா - புரந்தரதாசர் & கனகதாசர் வாழ்க்கைச் சரித்திரம், சாதனை மற்றும் அவர்கள் எழுதிய பாடல்கள் 5+5 = 10 பாடல்கள்
3. ப்ரவீண - புரந்தரதாசர், கனகதாசர், ஶ்ரீபாதராஜர், வியாசராஜர், வாதிராஜர் இவர்களின் வாழ்க்கைச் சரித்திரம், சாதனை, போதனைகள் மற்றும் இவர்கள் எழுதிய பாடல்கள் முறையே 5+5+2+2+2 = 16 பாடல்கள்

1. ஹரிதாச சாகித்யபூஷண - 6 மாதங்களுக்கு ஒரு தேர்வு. ஜூன் & டிசம்பர்
2. ஹரிதாச சாகித்யரத்ன - 6 மாதங்களுக்கு ஒரு தேர்வு. ஜுன் & டிசம்பர்
3. ஹரிதாச சாகித்ய விஷாரதம் - 2 ஆண்டுகளுக்கு ஒரு தேர்வு

4. தேவரநாமபூஷண - 5 கட்டங்கள்
5. கானகலாநிதி தேர்வுகள்
6. ஆசார்ய மத்வஶ்ரீ தேர்வுகள்
7. ஹரிகதாம்ருதசாரம். 5 கட்டங்கள் (முதல் கட்டத் தேர்வுக்கு முதல் மூன்று சந்திகள் அதன் பொருளுடன் மனப்பாடம்).
8. ஹரிகதாம்ருத ரத்னம் - 10 கட்டங்கள்
9. M.Phil தத்வதேர்வு - 1.5 ஆண்டுகள்
10. கௌரவ டாக்டரேட் புரந்தர பட்டம் - 2 ஆண்டுகள்

இன்னும் பல தேர்வுகள் மகாவித்யாலயத்தில் நடக்கிறது.

இவை அனைத்தையும் தாங்கள் படித்து, தேர்வு எழுதி ஶ்ரீஹரிதாசர்களின் கருணைக்குப் பாத்திரராக வேண்டும் என்று மகாவித்யாலயத்தின் வேண்டுகோள்.

இப்படிக்கு
மேலாண்மை